# DASA BHUTHI PALANGAL

## தசாபுத்திப்  பலன்கள்

A THESIS

*Submitted by*

**K.S. SUNDARA RAJAN**

**Reg.No:D15AS507**

*in partial fulfillment for the award of the Degree of*

**DOCTOR OF PHILOSOPHY**

under the supervison of

**Dr.T. Mahalakshmi**




**FACULTY OF ASTROLOGY**

**BHARATH  INSTITUTE OF HIGHER EDUCATION AND RESEARCH**

**CHENNAI  600 073.**

**FEBRUARY  2020**



**Bharath**

**INSTITUTE OF HIGHER EDUCATION AND RESEARCH**

(Declared as Deemed-to-be University under section 3 of UGC Act, 1956)



# Certificate

This is to certify that the corrections as recommended by the Foreign and Indian Examiners for the Thesis entitled**, "Dasa Bhuthi Palangal"** submitted by the Candidate **Mr. K.S. SUNDARA RAJAN** Reg.No**. D15AS507** (Part Time-Enternal) in the Department of Tamil (Astro Science)**,** Faculty of ARTS AND SCIENCE have been made as per the list enclosed.

பேரா.முனைவர் தி. மகாலட்சுமி,எம்.ஏ.எம்.பில்.,பிஎச்.டி.,
சுவடி மொழிப்பெயர்ப்பு, இதழியல் பட்டம்
ஆய்வு அலுவலர்,
இணைப்பேராசிரியர் (ஓய்வு)
தமிழ் இலக்கியம் (ம) சுவடிப்புலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி, சென்னை - 113.

***Signature of the Supervisor***

(Name of the Supervisor)

***Encl: in Page 2***

*(If Corrections goes to 2nd page. Supervisor need to verify(signature) that page for the same)*



*Page 2 Contd...*

*LIST OF CORRECTIONS MADE :*

| வ.எண் | பக்.எண் | இருந்தவை | திருத்தப்பட்டவை |
|---|---|---|---|
| 1 | 15 | ஹார்மோன்கள் | சுரப்பி |
| 2 | 15 | கமிசன் | தரகு |
| 3 | 28 | சார்ட் | வரைபடம் |
| 4 | 67 | ரியல் எஸ்டேட் | வீட்டு மனை விற்பனை முகவர் |
| 5 | 67 | போர்வெல் ஆப்பரேட்டர் | துளைக்கிணறு வெட்டுபவர் |
| 6 | 67 | எலக்டிரிக்கல் | மின் ஆற்றலுக்குரிய பொருள்கள் |
| 7 | 73 | கம்ப்யூட்டர் | கணினி |
| 8 | 73 | டெலிபோன் | தொலைபேசி |
| 9 | 73 | செல் போன் | கைப்பேசி |
| 10 | 73 | டி.வி | தொலைக்காட்சி |
| 11 | 73 | ஜெராக்ஸ் | நகல் |
| 12 | 115 | மிஷினிஸ்ட் | இயந்திரப் பணியாளராக |
| 13 | 124 | மார்கெட்டிங் | சந்தைப்படுத்துதல் |
| 14 | 130 | பைனான்ஸ் கம்பெனி | நிதி நிறுவனம் |
| 15 | 135 | ஏஜென்சி | நிறுவனம் |
| 16 | 143 | கம்பெனி | தொழிற்சாலை |
| 17 | 145 | ரெடிமேட் | வடிவமைக்கப்பட்ட ஆடை |
| 18 | 145 | ரிலையன்ஸ் போஸ்ட் பெயிடு கனெக்ஸன் | ரிலையன்ஸ் பிற்கொடுப்பனவு இணைப்பு |
| 19 | 145 | கிரெடிக் காட்டு | கடன் அட்டை |
| 20 | 174 | ஈகோ | அகங்காரம் |
| 21 | 182 | Cloud Technology | மேகக்கணிம தொழில்நுட்பம் |
| 22 | 186 | பைனான்ஸ் கம்பெனி | நிதி நிறுவனம் |
| 23 | 186 | கவரிங் | உள்ளடக்கியது |
| 24 | 189 | பைபாஸ் சர்ஜரி | இதய அறுவை சிகிச்சை |
| 25 | 192 | அலர்ஜி | ஒவ்வாமை |
| 26 | 203 | கார் | மகிழுந்து |
| 27 | 204 | சப்போர்ட் | ஆதரவு |
| 28 | 246 | கேட்டரிங் சர்வீஸ் | உணவு தருவிப்பு சேவை |
| 29 | 295 | பினாமி | இரவல் பெயரில் நடவடிக்கை |
| 30 | 313 | பிரேக் இன்ஸ்பெக்டர் | மோட்டார் வாகன ஆய்வாளர் |
| 31 | 317 | விசா | அயல்நாட்டு நுழைவுச்சான்றிதழ் |
| 32 | 329 | பியூட்டி பார்லர் | அழகு நிலையம் |


பேரா.முனைவர் தி. மகாலட்சுமி,எம்.ஏ.எம்.பில்.,பிஎச்.டி.,
சுவடி மொழிப்பெயர்ப்பு, இதழியல் பட்டம்
ஆய்வு அலுவலர்,
இணைப்பேராசிரியர் (ஓய்வு)
தமிழ் இலக்கியம் (ம) சுவடிப்புலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி, சென்னை - 113.

## DECLARATION

I, hereby declare that the dissertaion titled "**DASA BHUTHI PALANGAL**" is an original and bonafide work done by my own in the partial fulfillment of the requirement for the award of the degree of Doctor of Philosophy and submitted to the Department of Science and Humanities, Bharath Institute of Higher Education and Research, was carried out under the supervision of **Dr. T. Mahalakshmi, M.A., M.Phil., Ph.D.,** Visiting Professor, Faculty of Astrology, Science and Humanities Department, Bharath Institute of Higher Education and Research, is entirely original and has not been submitted for any degree or diploma earlier.

I further declare that this thesis does not form of any other thesis or dissertations on the basis of which a degree was awarded or conferred on earlier occasion on me or any other candidate.

K.S. Sundara Rajan

PLACE: Chennai (K.S.SUNDARA RAJAN)

DATE: 06.02.2020 **REGISTER No. D 15 AS 507**

## BONAFIDE CERTIFICATE

Certified that this thesis titled “**DASA BHUTHI PALANGAL**” is the bonafide work of **Mr. K.S.SUNDARA RAJAN, (REGISTER No. D15AS507)** who carried out the research under my Supervision.

**Certified further, that to the best of my knowledge the work reported herein and in the Publications by the Scholar does not form any other thesis or dissertation, on the basis of which a degree or award was conferred on an earlier occation of thesis of any other candidate.**

**SUPERVISOR.**
Signature of the Supervisor with official Seal.

பேரா.முனைவர் தி. மகாலட்சுமி எம்.ஏ.எம்.பில்.
சுவடி. மொழிபெயர்ப்பு. இதழியல் பட்டயம்
நிறுவனர் / இணைப் பேராசிரியர் (ஓய்வு)
திருமூலர் ஆய்விருக்கை
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம். தரமணி. சென்னை - 113

**JOINT SUPERVISOR.**
(if any)
Signature of the Joint-Supervisor with official Seal.

முனைவர். ம.சித்ரா[illegible]
இணைப்பேராசிரியர் மற்றும் துறைத் [illegible]
கலை மற்றும் அறிவியல் புலம்
பாரத் உயர்கல்வி மற்றும் ஆராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 126.

**ACKNOWLEGEMENT**

I would like to thank the Honorable **Chancellor Dr. J. Sundeep Aanand** and Honorable Managing Director **Dr. E. Swetha Sundeep Anand,** respected **Vice-Chancellor Dr. V. Kanagasabai** for giving me an opportunity to pursue research program in Bharath University. I express my gratitude to **Pro – Vice chancellor Dr. K.P. Thooyamani** and **Dean Engineering Dr. J. Hameed Hussain** for providing constant support to submit this thesis in time.

I would like to thank **Dr. M. Sundararajan,** Dean – R & D to fecilitate to submit the synopsis of my research work successfully. I wish to place on record my deep sense of gratitude and heart-felt thanks to **Dr. M. Prem Jeyakumar**, Controller of examinations for giving valuable suggestions.

It is great pleasure to express my deep sense of gratitude to my Supervisor **Dr. T. Mahalakshmi,** Visiting Professor, Department of Science and Humanities, Bharath Institute of Higher Education and Research, for her valuable suggestion and guidance and encouragement at every stage of work.

A special thanks to my family. Words cannot express how grateful I am to my parents S.Subramanian and S.Kanthimathi for the sacrifice that you've made on behalf. I would like to express appreciation to my beloved son S.Manikandan, Cousin S.Priya and all my TALI Students for their untiring efforts and constant support in presenting this study successfully.

Name of the Scholar

K.S. Sundara Rajan

**K.S.SUNDARA RAJAN**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

குரு - குரு

கே - கேது

சந் - சந்திரன்

சனி - சனி

சுக் - சுக்ரன்

சூரி - சூரியன்

செ - செவ்வாய்

தொ.ஆ - தொகுப்பு ஆசிரியர்

ப - பக்கம்

பக் - பக்கங்கள்

புத - புதன்

மூ.ஆ - மூல நூலாசிரியர்

மொ.பெ - மொழி பெயர்ப்பு

ராகு - இராகு

லக் - இலக்கினம்

## பொருளடக்கம்

| வ.எண் | இயல்கள் | பக்கம் |
|---|---|---|
| | முன்னுரை | 01 |
| 1. | விதிகளின் கட்டமைப்பு | 07 |
| 2. | அறம் என்ற திரிகோணப் பாவகங்கள் | 111 |
| 3. | பொருள் என்ற திரிகோணப் பாவகங்கள் | 168 |
| 4. | இன்பம் என்ற திரிகோணப் பாவகங்கள் | 225 |
| 5. | வீடு என்ற திரிகோணப் பாவகங்கள் | 282 |
| | ஆய்வு முடிவுரை | 339 |
| | துணைநூற் பட்டியல் | 342 |
| | பின் இணைப்பு | 344 |

## ஆய்வு முன்னுரை

### சோதிட அறிமுகம்

பண்டைய காலம்தொட்டுச் சோதிடம் மக்கள் வாழ்வில் செல்வாக்கைச் செலுத்தி வருகிறது. பல பல்கலைக்கழகங்களில் சோதிடம் பாடப்பகுதியாக இடம்பெற்றுள்ளது. பட்டயப்படிப்பு முதல் இளங்கலை, முதுகலை, ஆய்வியல் நிறைஞர், முனைவர் பட்டம்வரை பயின்று வருகின்றனர். உலகளவில் சோதிடத்திற்கென ஆய்வு நிறுவனங்கள் இயங்கி வருகின்றன. சோதிடம் தொடர்பான ஆய்வு நூலகங்களும், நூற்றுக்கணக்கான ஆய்வேடுகளும் வெளிவந்துள்ளன. பிற துறைகளைப் போன்று சோதிடத் துறையும் மக்களுக்குப் பயன்படும் ஒரு அறிவியல் துறையாகும். எனவே அதில் ஓரளவு ஆய்வுகள் நிகழ்ந்த வண்ணம் உள்ளன. இந்த ஆய்வுகளுக்கு வலுசேர்க்கும் வகையில் ‘‘தசாபுத்திப் பலன்கள்’’ என்னும் தலைப்பில் இவ்வாய்வு அமைகிறது.

### விம்சோத்திரி தசாபுத்திப் பலன்கள்

மானுட வாழ்வில் ஒவ்வொரு குறிப்பிட்ட நிகழ்வும் காலத்தின் அடிப்படையிலேயே நடைபெற்று வருகிறது. அப்படிப்பட்ட காலத்தைக் கணிக்க இந்தியச் சோதிடத்தில் கிட்டத்தட்ட 32 விதமான தசாபுத்திக் கணிதங்கள் இருந்துள்ளதாகப் பிரகத் பராசா ஹோரா சாத்திரம் என்னும் நூலில் முனிவர் பராசாரர் கூறி உள்ளார். அவை : 1. விம்சோத்தரி 2. அஷ்டோத்தரி 3. சோடசோத்திரி 4. துவாதசோத்திரி 5. பஞ்சோத்திரி 6. ஷதப்திகா 7. சதுராசஷ்டி சாம 8. திவிசப்தாதி சாம 9. சஷ்டிபயானி 10. ஷட்விம்சா சாம 11. கால 12. சர 13. ஸ்திர 14. இலக்கின கேந்திர 15. காரக கேந்திரா 16. காரக 17 பிரம்மகிரக அஷ்ரிதா 18. மான்டுக 19. ஸூல 20. யோகர்தா 21. த்ருக் 22. திரகோண 23. இராசி 24. பஞ்சஸ்வர 25. யோனி 26. பிண்ட 27. அம்ச 28. நைசர்கிக 29. அஷ்டகவர்கா 30. சந்திய 31. பச்சக 32 தாரதிசை ஆகும்[1]. இந்த 32 தசாபுத்திக் கணிதங்களில் இன்று நடைமுறையில் இருப்பது இரண்டு, மூன்று தசாக் கணிதங்கள் மட்டுமே, மற்ற தசாக் கணிதங்கள் பயன்படுத்தப்

---

[1] Brihat Parasara Hora Sastra of Maharishi Prarasara Volume 2, Transalated by R.Santhanam, Chapter 46, 2-5 & 6-11, Page 505, 506,

படுவதில்லை. பெரும்பாலான இந்தியச் சோதிடர்கள் விம்சோத்திரி தசாபுத்தி கணிதத்தைப் பயன்படுத்திப் பலன் கூறி வருகின்றனர். மேற்கத்திய சோதிடத்தில் இந்தத் தசாபுத்திக் கணிதம் இல்லாதது இன்றளவும் அவர்களுள் ஒரு குறையாகவே பார்க்கப்படுகிறது. தசாபுத்திக் கணிதமும், அதன்மூலம் சொல்லப்படும் பலனும் இந்தியச் சோதிடத்தின் ஒரு மைல்கல் ஆகும்.

விம்சோத்திரி தசாபுத்திக் கணிதம் மிகவும் முக்கியமானதாகும். இந்தக் கணிதத்தின் பயன்பாட்டை மிகுவிக்கும் வகையில் ஒரு புத்தியின் காலத்தில் பன்னிரு பாவகங்களுக்கும் பலன் கண்டறிவதாக இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுத்தலைப்பு**

விம்சோத்திரி தசாபுத்திக் கணிதம் என்பது பிறந்தகாலச் சாதகத்தில் உள்ள கோள்களின் நிலையைக் கொண்டு, தான் இயக்கும் பாவகங்களின் பலன்களை அறிய பயன்படக் கூடிய ஒன்றாகும்.

இதில் ஒவ்வொரு தசாபுத்திக் காலக்கட்டத்திலும் பன்னிரு பாவகங்களின் இயக்கம் மற்றும் அதன் பலன்கள் பற்றிக் கூறுவதால் தசாபுத்திப் பலன்கள் என்னும் ஆய்வுத் தலைப்பு அமைகிறது.

**ஆய்வு நோக்கம்**

பலன்கள் நடக்கும் காலக்கட்டத்தை அறிந்துகொள்ள விம்சோத்திரி தசாபுத்திக் கணிதம் பயன்படுகிறது. இந்தத் தசாபுத்திக் கணிதத்தைப் புதிய விதிமுறைகளின் அடிப்படையில் அணுகி, புத்திதரும் பன்னிரு பாவகங்களுக்குரிய பலன்களை அறிவது இவ்வாய்வின் நோக்கம் ஆகிறது.

விம்சோத்திரி தசாக்கணிதம் செய்வதில் எந்த வேறுபாடும் இந்தியச் சோதிடர்களிடத்தில் இல்லை, ஆனால் பலன் கூறுவதில் பல வேறுபாடுகள் உள்ளன. காரணம் விம்சோத்திரி பலன் கூறுவதற்குச் சரியான விதிகள் அல்லது அளவுகோல்கள் இல்லை. புத்தியை நடத்தும் கோள் ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருப்பின், அந்தப் புத்தி நாதனின் சொந்தவீட்டுப் பலன் அதாவது ஆதிபத்திய பலனைத் தான்நின்ற வீட்டின்மூலமாகக்

கொடுக்கும் என்றும், இன்னும் சிலர் புத்தியை நடத்தும் கோள் நின்ற நட்சத்திர அதிபதி நின்ற வீடு மற்றும் நட்சத்திர அதிபதியின் ஆதிபத்தியம்மூலம் கொடுக்கும் என்றும் கூறி வருகின்றனர். புத்தியை நடத்தும் கோள் நின்ற நட்சத்திர அதிபதி என்று எடுத்துக்கொண்டாலும் அதிகபட்சம் 6 பாவகங்களுக்கு மட்டுமே பலன் கூற முடியும். ஆனால் ஒரு குறிப்பிட்ட புத்தியில் பன்னிரு பாவகப் பலனையும் கேட்கும் அதிகாரம் சாதகருக்கு உண்டு.

இதனை நிறைவு செய்யும் வகையில் பன்னிரு பாவகங்களுக்கும் பலன் கூறப் பன்னிரு விதிகளை உருவாக்கி விரிவாகப் பலன் அறிவது, மேலும் பன்னிரு பாவகங்களை **அறம், பொருள், இன்பம், வீடு** என்னும் நான்கு திரிகோணப் பாவகங்களாகச் சுருக்கி பன்னிரு விதிகளுள் ஒருமித்த அளவுகோல் அடிப்படையில் நான்கு விதிகளாகச் சுருக்கிப் பலன் அறிவதும், இறுதியாகப் பன்னிரு பாவகங்களை **அகம்புறம்** என்கிற இரண்டு பிரிவுகளாகச் சுருக்கி ஒன்று மற்றொன்றை எதிர்க்கும் என்கிற இரண்டே விதிகளில் ஒரு குறிப்பிட்ட புத்திக்குப் பலன் கூறுவதே இந்த ஆய்வின் நோக்கம் ஆகும்.

பாரம்பரிய சோதிட மூலநூல்களில் உள்ள விதிகளுக்கு வலு சேர்க்கும் விதமாகவும், தசாபுத்திக் கணிதம்கொண்டு பலன்காணும் முறையில் வளர்ச்சியை மேம்படுத்துவதாகவும் இவ்வாய்வு அமைகிறது.

**ஆய்வுக் கருதுகோள்**

உருவாக்கப்பட்ட நான்கு வித திரிகோண விதிகளை 200 சாதகங்களுடன் ஒப்பிட்டு மெய்ப்பித்தலே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு எல்லை**

கொடுப்பினையும் தசாபுத்திகளும் என்னும் நூலில் இடம்பெற்றுள்ள 12 விதிகளும், ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட 200 சாதகங்களும் ஆய்வு எல்லையாக அமைகிறது.

இவ்வாய்வுக்குத் திருக்கணித முறையில் லகரியின் அயனாம்சம் கொண்டு கணிதம் செய்யப்பட்ட சாதகங்கள் பயன்படுத்தப்படுகிறது. மேலும்

இராசிக் கட்டம், மத்திமமுறையில் கணிதம் செய்யப்பட்ட பாவகக் கட்டம், பன்னிரு பாவகக் காரகப் பலன்கள் மற்றும் விம்சோத்திரி தசாபுத்திக் கணிதம் போன்றவை இவ்வாய்விற்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது.

பன்னிரு இராசிகளின் காரகம், கோள்களின் உச்சநீச பலம், கோள்களின் இணைவு, கோள்களின் பார்வை, கோள்களின் வக்கிர நிலை, கோள்களின் அஸ்தமனம், திதி சூனியம், இலக்கின யோகர், பாபர், இலக்கின சுபர், அசுபர், தசாபுத்தியை நடத்தும் கோள் நின்ற நட்சத்திர அதிபதி நின்ற நவாம்சம் போன்ற எந்தவிதப் பலன்களும் எடுத்துக்கொள்ளப்படவில்லை.

**ஆய்வு அணுகுமுறை**

தசாபுத்திக் கணிதத்தை விளக்குவதால் விளக்கமுறைத் திறனாய்வும், ஒரு புத்திப் பன்னிரு பாவகங்களுக்குப் பலன் கூறும் முறையை ஆராய்வதால் பகுப்பு ஆய்வு அணுகுமுறையும், பலன்களின் உண்மைத் தன்மையை அறிய விதிகளைச் சாதகங்களுடன் பொருத்திப் பார்க்கும் ஒப்பாய்வு அணுகுமுறையும் இவ்வாய்வில் பின்பற்றப்படுகிறது.

**முதன்மை, துணைமை ஆதாரங்கள்**

கொடுப்பினையும் தசாபுத்திகளும் என்னும் நூலில் கொடுக்கப்பட்டுள்ள பன்னிருவிதிகளும், ஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட 200 சாதகங்களும் முதன்மையாதாரங்கள் ஆகும்.

**சாதகங்களைத் திரட்டிய முறை**

2012 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் “Tamilnadu Astro Logical Institute ” (TALI) என்கிற சோதிடக் கல்வி நிறுவனம் ஏற்படுத்தி அதன்மூலம் 2019 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம்வரை தமிழகம், கர்நாடகம் மற்றும் ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் 1518 சோதிட ஆர்வலர்களுக்கு இவ்வாய்வில் கூறப்பட்டுள்ள பலன்கள் ஆய்வாளரால் கற்பிக்கப்பட்டு வருகின்றது. அவர்கள் சாட்சியாக இருந்து கொடுத்த சாதகங்களைக் கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## முன்ஆய்வு

தசாபுத்தி தொடர்பான கணிதம் எப்படிச் செய்யப்படுகிறது, இவை தரும் பொதுப் பலன்கள் யாவை என்ற வகையில் மூலநூற்களும், அதை ஒட்டிய தற்காலச் சோதிட நூல்களும், இதழ்களில் இடம்பெற்றுள்ள சில கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. ஆனால் இவற்றில் ஒரு குறிப்பிட்ட புத்தியானது எவ்வாறு பன்னிரு பாவகங்களுக்கும் பலன் அளிக்கும் என்பதாகக் கூறப்படவில்லை. எனவே தசாபுத்திப் பலன்கள் என்ற இவ்வாய்வு இந்தப் பலன்களைக் கூறுவதால் முதல் ஆய்வாகவும், தனித்தன்மையுடைய சிறந்த ஆய்வாகவும் அமைகின்றது.

## ஆய்வுப் பயன்

மனிதனுடைய ஒவ்வொரு செயலிற்கும் சாதகமான மற்றும் பாதகமான புத்திகள் எவை என அறிந்து கொள்ளமுடியும். நடப்புப் புத்தியின் அடிப்டையில் எந்தப் பாவகப் பலன்கள் நடக்கும், எந்தப் பாவகப் பலன்கள் நடக்காது எனப் பிரித்துப் பலன்களைக் கூற இயலும்.

ஒருவரின் விதி கொடுப்பினையை அறிந்து, என்ன கல்வி பயன் தரும், எந்தத் துறையில் தொழில் அல்லது வேலை செய்தால் ஆதாயம் கிடைக்கும், ஆரோக்கியம், படிப்பு, வேலை, காதல், திருமணம், குழந்தை, வீடு, வெளிநாடு போன்ற பலன்களுக்குச் சாதகமான பாதகமான காலத்தை முன்கூட்டி அறிய உதவுகிறது.

## ஆய்வேட்டின் அமைப்புமுறை

இந்த ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

இயல் 1 : விதிகளின் கட்டமைப்பு.

இயல் 2 : அறம் என்ற திரிகோணப் பாவகங்கள்.

இயல் 3 : பொருள் என்ற திரிகோணப் பாவகங்கள்.

இயல் 4 : இன்பம் என்ற திரிகோணப் பாவகங்கள்.

இயல் 5 : வீடு என்ற திரிகோணப் பாவகங்கள்.

**விதிகளின் கட்டமைப்பு** என்னும் முதல் இயலில் சோதிட வரலாறு, தசாபுத்திக் கணிதங்கள், விதி-மதி-கதி இவற்றின் விளக்கம், கொடுப்பினை நிர்ணயம் செய்யத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள விதிகள், கொடுப்பினையும் தசா புத்திகளும் என்னும் ஆதாரநூலில் இடம்பெறும் 12 விதிகளும் அவற்றை இவ்வாய்வுக்கு மாற்றி அமைத்துப் பயன்படுத்துவது தொடர்பான விளக்கங்கள், பன்னிரு விதிகளை நான்கு திரிகோணங்களாகச் சுருக்குதல், பன்னிரு பாவகங்களை அகம், புறம் என இரண்டு பிரிவுகளில் சுருக்குதல், தசாபலன் முறிவு போன்றவை விளக்கப்பெற்றுள்ளன.

**அறம் என்ற திரிகோணப் பாவகங்கள்** என்னும் இரண்டாம் இயலில் புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது ஏற்படும் பலன்கள் 50 சாதகங்களில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

**பொருள் என்ற திரிகோணப் பாவகங்கள்** என்னும் மூன்றாம் இயலில் புத்தியை நடத்தும் கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது ஏற்படும் பலன்கள் 50 சாதகங்களில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

**இன்பம் என்ற திரிகோணப் பாவகங்கள்** என்னும் நான்காம் இயலில் புத்தியை நடத்தும் கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது ஏற்படும் பலன்கள் 50 சாதகங்களில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

**வீடு என்ற திரிகோணப் பாவகங்கள்** என்னும் ஐந்தாம் இயலில் புத்தியை நடத்தும் கோள் 4, 8, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது ஏற்படும் பலன்கள் 50 சாதகங்களில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

ஆய்வேட்டின் முடிவுரையில் ஒவ்வொரு இயலிலும் கிடைக்கப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுத்து வழங்கப்படுகிறது. இதனைஅடுத்து, துணைநூற் பட்டியல் அகரவரிசையில் இடம்பெற்றுள்ளது. இறுதியாக பின் இணைப்புகள் இணைக்கப்பட்டுள்ளது.

# DASA BHUTHI PALANGAL

## தசாபுத்திப் பலன்கள்

A THESIS

*Submitted by*


**K.S. SUNDARA RAJAN**

**Reg.No:D15AS507**


*in partial fulfillment for the award of the Degree of*

**DOCTOR OF PHILOSOPHY**

under the supervison of

**Dr.T. Mahalakshmi**





**FACULTY OF ASTROLOGY**

**BHARATH INSTITUTE OF HIGHER EDUCATION AND RESEARCH**

**CHENNAI 600 073.**


**FEBRUARY 2020**

## ஆய்வு முடிவுரை

ஒரு சாதகத்திற்குப் பலன் கூற விதி, மதி இரண்டையும் இணைத்துப் பலன் கூற வேண்டும். விதியை நிர்ணயம் செய்யப் பிறந்த சாதகத்தில் உள்ள இராசிக்கட்டத்தைப் பயன்படுத்த வேண்டும். மதியை நிர்ணயம் செய்யப் பிறந்தகால மத்திமமுறை பாவகக் கட்டத்தைப் பயன்படுத்தி, விம்சோத்திரி தசாபுத்திப் கணிதங்கள் கொண்டு பலன் கூற வேண்டும். ஒரு குறிப்பிட்ட வீட்டிற்கு விதி கொடுப்பினை நன்றாக அமைந்தால், அந்த வீட்டிற்குச் சாதமாகத் தசாபுத்திக் காலத்தில் அதன் முழுமையான பலன் கிடைக்கிறது.

தசாவைவிடப் புத்தியை நடத்தக் கூடிய கோள் வலிமை வாய்ந்தது ஆகும். தசாபலனைத் தடை செய்யக் கூடிய அளவில் கூடப் புத்தியை நடத்தக் கூடிய கோள் செயல்பட முடியும் என்பதை அறியமுடிகிறது. இயல் 1 இன் மூலம் கிடைக்கப்பட்ட செய்திகள், புத்தியை நடத்தக் கூடிய கோள் ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருக்கும்போது பன்னிரு பாவகத்திற்கும் பன்னிரு விதிகளைப் பயன்படுத்திப் பலன் கூற இயலும் என்பதாகும்.

பன்னிருப் பாவகங்களை அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு திரிகோணப் பாவகங்களாகச் சுருக்கி, பன்னிரு பாவகங்களுக்குச் சொல்லப்பட்ட 12 விதிகளை ஒருமித்த அளவுகோல் உடைய 4 வித விதிகளைக் கொண்டு பலன் அறிப்பட்டுள்ளது. நான்குவித விதிகள் உருவாக்கபட்ட முறைமை குறித்து முதல்இயலில் விளக்கப்பட்டுள்ளது. அடுத்துவரும் 4 இயல்களில் இத்திரிகோணப் பாவகங்களில் புத்தியை நடத்தக் கூடிய கோள் இருக்கும்போது நடைபெற்ற சாதக பாதகப் பலன்கள் கண்டறியப்பட்டது.

மேலும் 2, 3, 4, 5 ஆகிய நான்கு இயல்களில் கிடைத்த தகவலின்படி புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற திரிகோணம் 100 விழுக்காடு இயங்கும். புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற திரிகோணத்திற்கு அடுத்த திரிகோணம் இயங்காது. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற திரிகோணத்திற்கு ஒன்றுவிட்ட அடுத்த திரிகோணம் பன்மடங்கு இயங்கும். புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற திரிகோணத்திற்கு முந்தைய திரிகோணம் ஒரு வரைமுறைக்குக் உட்டபட்டு குறைவாக இயங்கும். இவ்வகையில் முடிவுகள் எடுத்துரைக்கப்படுகிறது.

**இயல் 2, 3, 4, 5 ஆகியவற்றின்மூலம் பெறப்பட்ட முடிவுகள் அட்டவணை**

| புத்தியை நடத்தும் கோள் நின்ற நான்கு திரிகோணப் பாவகங்களும் - ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட நான்குவித இயக்க விதிகளும் | 100 விழுக்காடு இயங்கிப் பலன் அளித்த பாவகங்கள் | இயங்காமல் பலன் தடைபட்ட பாவகங்கள் | பன்மடங்கு இயங்கிப் பலன் அளித்த பாவகங்கள் | வரைமுறைக்கு உட்பட்டுக் குறைவாகப் பலன் அளித்த பாவகங்கள் |
|---|---|---|---|---|
| **அறம் (1,5,9)** | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 |
| **பொருள் (2,6,10)** | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 |
| **இன்பம் (3,7,11)** | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 |
| **வீடு (4,8,12)** | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 |

அறம் (1,5,9) கிடைத்த காலத்தில் பொருள் (2,6,10) கிடைப்பதில்லை, பொருள் (2,6,10) கிடைத்த காலத்தில் இன்பம் (3,7,11) கிடைப்பதில்லை, இன்பம் (3,7,11) கிடைத்த காலத்தில் வீடு (4,8,12) கிடைப்பதில்லை, வீடு (4,8,12) கிடைத்த காலத்தில் அறம் (1,5,9) கிடைப்பதில்லை என்பன இவ்வாய்வின் முடிவாகக் கண்டயறிப்பட்டுள்ளது.

பன்னிரு பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் அகம் என்னும் ஒற்றைப்படைப் பாவகங்களில் இருக்கும்போது அகக்காரகப் பலன்கள் நல்லமுறையில் கிடைத்தும், அதேவேளையில் புறம் என்னும் இரட்டைப்படைப் பாவகக் காரகப் பலன்கள் பாதிக்கப்பட்டுள்ளதையும் 2 ஆம் மற்றும் 4 ஆம் இயல்களின் முடிவுரைமூலம் அறியமுடிகிறது.

மேலும் புத்தியை நடத்தும் கோள் புறம் என்னும் இரட்டைப்படைப் பாவகங்களில் இருக்கும்போது புறக்காரகப் பலன்கள் நல்லமுறையில் கிடைத்தும், அதேவேளையில் அகம் என்னும் ஒற்றைப்படைப் பாவகக் காரகப் பலன்கள் பாதிக்கப்பட்டுள்ளதையும் 3 ஆம் மற்றும் 5 ஆம் இயல்களின் முடிவுரைமூலம் அறியமுடிகிறது.

இதன்மூலம் அகம் புறத்தை எதிர்க்கும் என்றும், புறம் அகத்தை எதிர்க்கும் என்றும் தெளிவுப்படுத்தப் பெற்றது. ஒரு நாணயத்தின் இருபுறம்போல், ஒன்று கிடைத்தால் மற்றொன்று கிடைக்காது. ஒரு குறிப்பிட்ட தசாபுத்திக் காலத்தில் எது கிடைக்கும் எது கிடைக்காது என்று பிரித்துக் கூற இவ்வாய்வு உதவுகிறது.

தசாவை நடத்தும் கோள் நின்ற பாவகத்தில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 4, 8, 12 ஆக இருந்தால் தசாபலன் முறிவு ஏற்படுகிறது என்பதும் கண்டறியப்பட்டது.

ஒருவரின் விதி கொடுப்பினையை ஆராய்ந்து அறிவதன்மூலம், என்ன கல்வி பயன் தரும், எந்தத் துறையில் தொழில் அல்லது வேலை செய்தால் ஆதாயம் கிடைக்கும் போன்றவற்றை அறியமுடியும். அதேபோல் ஆரோக்கியம், படிப்பு, வேலை, காதல், திருமணம், குழந்தை, சொத்து வாங்க விற்க, வெளிநாடு போன்ற அனைத்து விதமான பலன்களுக்கும் சாதகமான பாதகமான காலத்தை முன்கூட்டிக் கூற இயலும்.

இந்த ஆய்வின் முடிவுகள்மூலம் மானுட வாழ்வில் ஏற்படும் ஒவ்வொரு செயலிற்குமான சாதக பாதகக் காலங்களைத் தெளிவாகத் தேர்ந்தெடுத்து அவர்களை வழிநடத்த முடியும்.

**மேலாய்வுக் களங்கள்**

கோள்களுக்குரிய காரகத்துவத்தையும் இணைத்துத் தசாபுத்தியின் இயக்கத்தை ஆய்வுக்கு உட்படுத்த வேண்டும்.

இத்திரிகோணத் தசாபுத்தி விதிகளைப் பயன்படுத்தி இராசிக் கட்டத்தில் உள்ள 12 வீடுகளுக்கும் தனித்தனியாக ஆய்வு செய்ய வேண்டும்.

புதிய பாவகக் காரகத்துவங்கள் பற்றிய ஆய்வு நிகழ்த்தப்பட வேண்டும்.

## இயல் 1

## விதிகளின் கட்டமைப்பு

**முன்னுரை:**

இயல் 1 இல் சோதிட வரலாறு, தசாபுத்தி விளக்கம் மற்றும் கணிதங்கள், விதி, மதி, கதி விளக்கம், கொடுப்பினை நிர்ணயம் செய்ய பயன்படுத்தப்படும் 4 விதிகள், இவ்வாய்வுக்குத் தேர்தெடுக்கப்பட்டுள்ள பன்னிரு விதிகள், பன்னிரு விதிகளை நான்கு விதிகளாகச் சுருக்குதல், பன்னிரு பாவகங்களை அகம்புறம் என இரண்டு பிரிவுகளில் சுருக்குதல், கொடுப்பினையும் தசாபுத்தியும் இணைத்துப் பலன் காணுதல், தசாபலன் முறிவு போன்ற விளக்கங்கள் இடம்பெறுகிறது.

**சோதிட வரலாறு**

வானில் உள்ள கோள்கள் மனிதவாழ்வில் ஏற்படுத்தும் மாற்றங்களைத் தேற்றமாகக் கூறுவதே சோதிடம். சோதிடம் என்பது தோற்றத்தில் அறிவியல் போன்ற ஒன்று என்கிறது பிரிட்டானிகா கலைக்களஞ்சியம். சோதிடம் ஒரு தெய்வீகமான விஞ்ஞானம் என்கிறார் கே.எஸ். கிருஷ்ணமூர்த்தி 1972.

மனிதன் சிந்திக்கத் தொடங்கிய பின் எதைக் கண்டாலும் அது தன் நிகழ்காலத்தை, எதிர்காலத்தைப் பாதிக்குமோ என்ற அச்சம் அவனுக்கு ஏற்பட்டு இருக்கிறது. இதில் விண்வெளி அச்சம் சற்று அதிமாகவே இருந்துள்ளது. எனவே வின்வெளிச் சகுனங்களை உன்னிப்பாகக் கவனிக்கத் தொடங்கினான். ஞாயிறை வைத்துக் காலம் அறிந்தான். இப்படித் தோன்றிய சகுனச் சோதிடம் உலகின் பல நாடுகளில் ஒரே நேரத்தில் வளர்ச்சி பெற்றது. இருப்பினும் கி.மு. 2000 ஆண்டுகளுக்கு முன்பு சால்தியர்களின் குருமார்களும், இடையர்களும் ஊக்கமாக ஆராய்ந்து இச்சோதிடச் சாத்திரத்தை விருத்தி செய்தனர். அவர்களின் காலமே சோதிடத்தின் பொற்காலம் எனப்பட்டது.

கி.மு. 2 ஆம் நூற்றாண்டுக்கு முன்னரே மெசப்டோமியர் விண்வெளிச் சகுனங்களைத் தொகுத்தனர். அரசவையில் இருந்த பாரு (சோதிடர்) என்பவர் நிகழவிருக்கும் கெட்ட நிகழ்ச்சிகளை முன்னறிந்து அரசனுக்கு

அறிவிக்கும் பணியைச் செய்து வந்தார். எனுமா அனு என்லில் என்னும் முதல் சோதிட நூல் பாபிலோனியாவில்தான் உருவாகியது. இங்கிருந்து பல நாடுகளுக்குப் பரவிய போதும் கிரேக்கத்தில் பல நிலைகளில் வளர்ச்சி அடைந்தது.

இந்தியாவில் சிந்துவெளிக்கரையில் சோதிடக் குறியீடுகள் கிடைத்தன. வேதத்தில் சோதிடம் பற்றி கூறப்பற்றுள்ளது. சுவாயம்பு மனு, பராசரர் முதலான 18 பேர் சோதிடத்தின் முதல்நூல் ஆசிரியர்கள். இவர்கள் இயற்றிய மொத்தச் சுலோகங்கள் 4 இலட்சத்து 50 ஆயிரம் ஆகும் (சாதக அலங்காரம்).

இந்திய சோதிடத்தைக் கட்டமைத்துக் கொடுத்தவர் வராகமிகிரர் (கி.பி 6 ஆம் நூற்றாண்டு). பிருகத் சம்கிதா, பிருகத் சாதகம், பஞ்சசித்தாந்திகா முதலான நூல்களை எழுதியுள்ளார். இவரது பிருகத் சாதகம், பிருகத் சமிதை போன்ற நூல்களுக்கு ஸ்ரீபதி பட்டாச்சாரியார் விளக்கவுரை எழுதினார். ஸ்ரீபதி பத்ததி முறை எனப்படுகிறது. இவருடைய கணிதமுறைதான் இந்துதுறைச் சோதிடக் கணிதத்தில் பின்பற்றப்படுகிறது.

வராகமிகிரருடன் பணியாற்றிய ஆரியபட்டர் குப்தப் பேரரசு காலத்தில் (கி.பி. 476 – 550) வாழ்ந்தவர். இவர்தான் உலகிலேயே முதன் முதலாகப் பஞ்சாங்கத்தை வெளியிட்டார். வானசாத்திரம், பஞ்சாங்கம் போன்ற துறைகளுக்கு இவர் வழிகாட்டியாக இருந்ததால் இந்தியா பறக்க விட்ட முதல் விண்வெளிக் கப்பலுக்கு ஆரியபட்டா என்ற பெயர் சூட்டப்பெற்றது.

தமிழகத்தில் சோதிட வரலாற்றை அறியத் தமிழ் இலக்கியங்கள் துணைபுரிகின்றன. சங்ககாலம் முதல் சிற்றிலக்கியக் காலம் வரை காலம் பற்றியும், வானியல் பற்றியும், சாதகம் கணித்துப் பலனறிதல் பற்றியும், நல்லநாள் பார்த்தல் பற்றியும் வரிவாகக் குறிப்புகள் காணப்படுகின்றன. இவை தமிழகத்தில் தொன்மைக்காலம் தொடங்கி சோதிடம் பயன்பாட்டில் இருந்தமையைக் காட்டுகிறது.

உலகஅரங்கில் எகிப்து, பாபிலோனியா, சுமேரியா, இந்தியா முதலிய பழம்பெருமை வாய்ந்த நாடுகளில் பழங்காலந் தொட்டுச் சோதிடம் பற்றிய செய்திகளை வானியல் மற்றும் வரலாற்று நிகழ்வுகளாக அறிய முடிகிறது. உலகின் பல பகுதிகளில் சோதிடம் ஒரே காலத்தில் தோன்றி இருப்பினும்

பாபிலோனியா, கிரேக்கம் போன்றவற்றில் இதன் வளர்ச்சி அதிகமாக இருந்துள்ளது. ஒரு நாட்டில் பின்பற்றப்படும் சோதிடம் வேறு நாடுகளுக்குச் சென்றுள்ளது. அங்குள்ள முறையுடன் கலந்த கலவை சோதிடம் பல நாடுகளுக்குச் சென்றுள்ளது. இப்படிச் சோதிடம் பல வகைகளில் தோற்றம் பெற்று வளர்ந்து இருக்கின்றது[2].

1993 தொடங்கி மூவாயிரத்திற்கும் மேற்பட்டவர்கள் சோதிடவியலில் பட்டயம் பெற்றுள்ளனர். 2002 முதல் இளங்கலை, முதுகலை முடித்தவர்கள் 3000 இக்கும் மேற்பட்டவர்கள், ஆய்வியல் நிறைஞர் 300 இக்கும் மேற்பட்டவர்கள், தற்போது முனைவர்பட்டம் பயின்று வருபவர்கள் 100 இக்கும் மேற்பட்டவர்கள் ஆவர். ஆய்வேடு பொதுமக்கள் பயன்பெறும் வகையிலும், விழிப்புணர்வு பெறும் வகையிலும் பல ஆய்வு முடிவுகளை வெளிப்படுத்தி உள்ளன. இருப்பினும் சோதிடவியல் துறையில் இதுவரை நடைபெற்று வந்துள்ள வளர்ச்சிகளைத் தொகுத்தல், அவற்றை ஒருங்கிணைத்தல், பல்துறை நோக்கில் சோதிடவியலை உயர்ஆய்வுக்கு உட்படுத்துதல், பொதுவான வரையறுக்கப்பட்ட சோதிடக் கோட்பாடுகளை உருவாக்குதல், சோதிடவியல் முறையாகக் கற்பிக்கப்படுதல் என்றவாறு பல்வேறு தேவைகளை நிறைவு செய்யும் நோக்கில் ஆய்வுகள் மேற்கொள்ளப்படுதல் வேண்டும். அப்போது பிறதுறைகளைப் போன்று சோதிடத் துறையும் பயனுடைய துறைதான் என்ற உண்மை தெளிவுபெறும்[3].

**விம்சோத்திரி தசா விளக்கம்**

சோதிடச் சாத்திரம் இப் பூமியிலுள்ள உயிரினங்களுக்குக் கோள்கள், நட்சத்திரங்கள் ஆகியவற்றால் ஏற்படும் நன்மை தீமை பற்றி எடுத்துரைக்கின்றது. இந்த நன்மைதீமை எக்காலத்தில் நடைபெறும் என்பதைத் தசாபுத்தி வாயிலாகக் கணிக்கப்படுகிறது. பிருகத் பராசாரா ஹோரா சாத்திரத்தில் 32 விதமான தசாபுத்தி கணிதங்கள் இருந்துள்ளதாகக் காணமுடிகிறது. அவற்றில் வித்சோத்திரி தசாபுத்திக் கணிதம் மட்டுமே தற்காலத்தில் புழக்கத்தில் உள்ளது.

[2] தி. மகாலட்சுமி, சோதிடவியல், பக் 15 - 30
[3] தி. மகாலட்சுமி, கலைத்தமிழ் ஆய்வுக் களகங்கள், பக் 30 - 58

இந்த விம்சோத்திரி தசா என்பது மொத்தம் 120 ஆண்டுகள் கொண்டவையாக உள்ளன. அவை சூரியனுக்கு 6 ஆண்டுகள், சந்திரனுக்கு 10 ஆண்டுகள், செவ்வாய்க்கு 7 ஆண்டுகள், இராகுவிற்கு 18 ஆண்டுகள், குருவிற்கு 16 ஆண்டுகள், சனிக்கு 19 ஆண்டுகள், புதனுக்கு 17 ஆண்டுகள், கேதுவிற்கு 7 ஆண்டுகள், சுக்கிரனிற்கு 20 ஆண்டுகள் ஆகும். இந்த விம்சோத்திரி தசாவிற்கு உடுமகாதிசை அதாவது நட்சத்திர திசை என்ற பெயரும் உண்டு. இந்தத் தசா சந்திரன் இருக்கின்ற நட்சத்திரத்தை அனுசரித்து வருகிறது என்பதால் உடு அல்லது நட்சத்திர திசை என்ற பெயர் வருகிறது. கார்த்திகை முதல் பரணி வரை உள்ள 27 நட்சத்திரங்களுக்கு மேலே சொல்லி வரிசைப்படி ஒவ்வொரு கோளிற்கும் மூன்று நட்சத்திரங்கள் வீதம் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளது. ஒரு கோளிற்குரிய மூன்று நட்சத்திரங்களில் ஒன்றில் சந்திரன் இருக்கப் பிறந்தவர்களுக்கு அந்தக் கோளின் தசா சனனகால தசா இருப்பாக இருக்கும். ஒவ்வொரு தசாவும் 9 ஆல் வகுக்கப்பட்டுப் புத்தி, அந்தரம், சூட்சமம், பிராணன், உபபிராணன், எனச் சாதகர் சுவாசிக்கும் ஒவ்வொரு சுவாசம் வரை பிரித்துக் காலம் கணிக்கப்படுகிறது[4].

| **நட்சத்திரங்கள்** | **கோள்** | **ஆண்டுகள்** |
|---|---|---|
| கார்த்திகை, உத்திரம், உத்திராடம் | சூரியன் | 6 |
| ரோகினி, அஸ்தம், திருவோனம் | சந்திரன் | 10 |
| மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம் | செவ்வாய் | 7 |
| திருவாதிரை, சுவாதி, சதயம் | ராகு | 18 |
| புனர்பூசம், விசாகம், பூரட்டாதி | குரு | 16 |
| பூசம், அனுசம், உத்திரட்டாதி | சனி | 19 |
| ஆயில்யம், கேட்டை, இரேவதி | புதன் | 17 |
| அசுவினி, மகம், மூலம் | கேது | 7 |
| பரணி, பூரம், பூராடம் | சுக்ரன் | 20 |
| **மொத்தம்** | | **120** |

[4] சி.ஜி.ராஜன், தெசாபுத்தி சிந்தாமணி, ப - 1

**விம்சோத்திரி தசாபுத்திக் கணிதம்**

விம்சோத்திரி தசா இருப்பைக் கண்டுபிடிப்பதற்குத் தேவையான விபரங்கள், சாதகர் பிறந்த நேரத்தில் சந்திரன் சென்று கொண்டிருக்கின்ற நட்சத்திரத்தின் மொத்த அளவும், பிறந்த நாழிகை கழித்ததுபோக மீதி உள்ள நட்சத்திர இருப்பு அளவுமாகும். இவ்வடிப்படையில் மீதியுள்ள நட்சத்திர இருப்பை அந்த நட்சத்திரத்திற்குரிய கோள்களின் விம்சோத்திரி தசா ஆண்டால் பெருக்கி வந்த விடையை நட்சத்திரத்தின் மொத்த அளவால் வகுக்க வேண்டும். வகுத்து வந்த ஈவு கோளின் தசா ஆண்டாகும். மீதியை 12 ஆல் பெருக்கி மொத்த அளவில் வகுத்து, வகுத்து வரும் ஈவு மாதமாகும். மீதியை 30 ஆல் பெருக்கி மொத்த அளவால் வகுத்து வந்த ஈவு நாட்களாகும். இவ்வாறு கணித்து வந்த ஈவுகளில் விம்சோத்திரி தசாவின் இருப்பு ஆண்டு, மாதம், நாட்கள் என்ற அமைப்பில் கிடைத்துவிடும்.

இந்தத் தசாவின் அளவைச் சாதகர் பிறந்த நாள் முதலாகக் கணக்கிட்டுப் பின்னர் வரும் 8 கோள்களின் தசா ஆண்டுகளாக வரிசையாகக் கணித்து எதிர்காலப் பலன்களை 120 வயது வரை கூறலாம். இவ்வொவ்வொரு கோளின் தசாக்குள்ளும் 9 கோள்களின் புத்திகளும், ஒரு புத்திக்குள் 9 அந்தரங்களும், ஒரு அந்தரத்திற்குள் 9 சூட்சம காலங்களையும் கணிக்கலாம். இவ்அமைப்பில் பொதுவான மனித ஆயுளான 120 ஆண்டிற்கு விம்சோத்திரி தசா பிரிக்கப்பட்டுள்ளது. இதில் ஒன்பது கோள்களும் எதிர்கால வாழ்வில் பங்கெடுத்து முன்னின்று செயல்படுத்தும் விதமாகப் பகுக்கப்பட்டுள்ளன[5]. ஒரு கோளிற்கு மூன்று நட்சத்திரங்கள் வீதம் பிரித்து அவற்றிற்குரிய விம்சோத்திரி தசா அளவும் கொடுக்கப்பட்டுள்ளது[6].

[5] தி.விமலன், வால்மீகி இராமாயணத்தில் சோதிடவியலின் கோட்பாடுகள். ப - 87

[6] பின்னிணைப்பு 1, விம்சோத்திரி தசாபுத்திக் கணிதம்.

## விதி, மதி, கதி

ஒரு சாதகத்திற்குப் பலன் கூற மூன்று பிரிவுகளில் ஆய்வு செய்ய வேண்டும். அவை

1. விதி - (இராசிக் கட்டம் - கொடுப்பினை)
2. மதி - (பாவகக் கட்டம் - தசாபுத்தி)
3. கதி - (கோட்சார கிரகநிலை)

**விதி** : ஒரு சாதகருக்குப் பன்னிரு வீடுகளின் கொடுப்பினை என்னென்ன உள்ளன என்பதை அவரது சாதகத்தில் உள்ள இராசிக்கட்டத்தைவைத்து முடிவு செய்யலாம்.

**மதி** : கொடுப்பினை உள்ளதென்றால் எப்போது நடக்கும் என்பதைத் தசாபுத்தி மற்றும் கோட்சார கிரகநிலை மூலம் அறிய வேண்டும்.

**கதி** : பிறந்தகால கோள்நிலைக்கும் கோட்சார கோள்நிலைக்கும் தொடர்பு உண்டு, இது நாடி சோதிடத்தில் முக்கியமாகக் கூறப்படுகிறது.

இவ்வாய்வுக்குக் கொடுப்பினை மற்றும் தசாபுத்திப் பலன்கள் மட்டுமே எடுத்துக்கொள்ளப்படுகிறது. கோட்சார கோள்நிலை எடுக்கப்படவில்லை. ஒரு சாதகத்தில் உள்ள யோக பலன்களையோ அல்லது தோச பலன்களையோ வெளிப்படுத்துவது தசாபுத்தியே ஆகும். அதனால் காலத்தைத் தீர்மானம் செய்வதில் தசாபுத்தியின் பங்கு மிக முக்கியமானதாகும். சோதிடத்தில் எத்தனை விதமான ஆய்வுகள் செய்தாலும் தசாபுத்தியைச் சாராமல் முடிவுவோ பலன்களோ கூற இயலாது. அந்த அளவிற்கு முக்கியத்துவம் தசாபுத்திப் பலனிற்கு உண்டு.

ஒரு சாதகருக்குப் பன்னிரு வீடுகளின் கொடுப்பினை என்ன என்ன உள்ளன என்பதை அவரது சாதகத்தில் உள்ள இராசிக்கட்டத்தை வைத்து முடிவுசெய்ய வேண்டும். கொடுப்பினை உள்ளதென்றால் எப்போது நடக்கும் என்பதைத் தசாபுத்தி மற்றும் கோட்சார கோள்நிலை மூலம் அறியலாம். இவ்வாய்வுக்குக் கொடுப்பினை மற்றும் தசாபுத்திப் பலன்கள் மட்டுமே எடுத்துக் கொள்ளப்படுகிறது. கோட்சார கோள்நிலை எடுக்கப்படவில்லை.

ஒரு சாதகத்தில் உள்ள யோகபலன்களோ அல்லது தோச பலன்களோ அதை வெளிப்படுத்துவது தசாபுத்தியே ஆகும்.

**கொடுப்பினை**

ஒரு சாதகரின் வாழ்க்கை பன்னிரு வீடுகளாய்ப் பிரிக்கப்பட்டு உள்ளது. அதாவது பிறப்பு முதல் இறப்புவரை நடைபெறும் அனைத்துச் சம்பவங்களையும் பன்னிரு பாவகக் காரகங்களாகப் பிரித்துப் பலன் கூறப்படுகின்றது. பன்னிரு பாவகக் கொடுப்பினையின்படி சாதகரின் வாழ்க்கை அமையும்.

# பன்னிரு பாவகக் காரகத்துவங்கள்

## 1 ஆம் பாவகக் காரகத்துவம்

சாதகரின் தனித்தன்மை, தலை, தலையின் மேல்பகுதி, நெற்றி, மூளை, அனைத்துப் பாவங்களின் கட்டுப்பாட்டு அறையாகும், எல்லாப் பாவகத்தின் காரகங்களையும் தன்னுள் வைத்துள்ளது, உயிர், துவக்கம், பொதுவான தோற்றம், தனித்திறமைகள், தலைவர்கள், தலைமை, திறமைசாலிகள், கௌரவம், பொதுவான எண்ணஓட்டம், சுயமுயற்சிகள், செயல்திறன், ஆரோக்கியம், பெருந்தன்மை, ஒழுக்கம், புகழ், நிர்வாகத் திறன், வெற்றி அல்லது தோல்வி, உடலின் நோய் எதிர்ப்புத் திறன், கௌரவத்தை நிலைநாட்ட எடுக்கப்படும் முயற்சிகள்.

## 2 ஆம் பாவகக் காரகத்துவம்

முகம், கண், மூக்கு, வாய், நாக்கு, பற்கள், தாடை, கன்னம், தொண்டை, பேச்சுத்திறன், பார்வை, சுவை, முகலட்சணம், கையிருப்புப் பணம், எளிதில் மாற்றத் தக்க பொருட்கள், பணத்தைச் செலவு செய்யும் விதம், தானியங்கள், உலோகங்கள், இரத்தினங்கள், நகைகள், தங்கம், வெள்ளி, விற்பனை செய்திட டாக்குமெண்ட் தேவையில்லாத பொருட்கள், குடும்பத்தில் உள்ள நபர்கள், வாழ்க்கைத் துணையின் மரணம், உணவை உட்கொள்ளும் திறன்.

## 3 ஆம் பாவகக் காரகத்துவம்

காது, தோள் பட்டை, கைகள், கழுத்தெலும்பு, கழுத்துக்குக்கீழ் செல்லும் நரம்புமண்டலம், இரத்தநாளங்கள், உணர்வுப் புலன்கள், எழுத்து, எல்லாவிதத் தகவல் தொடர்பு மற்றும் தகவல் பரிமாற்றம், ஒப்பந்தம், தைரியம், தன்னம்பிக்கை, மனோபலம், உறுதிப்பாடு, விடாமுயற்சி, இடமாற்றம், சிறுபயணம், பக்கத்துவீடு, பக்கத்துஊர், அண்டை மாநிலம், அண்டைநாடு, சொத்துக்கள் இழத்தல், விற்பனை செய்தல், பண்டமாற்று, இளைய சகோதரம், சாலை, கடிதம், தபால், கைபேசி, தொலைக்காட்சி, ரேடியோ செய்திகள், அடையாளச் சின்னங்கள், சான்றிதழ், காசோலைகள், உலகில் உள்ள அனைத்துப் பதிவுகள், தூதுசெல்லுதல், பத்திரிகைகள்,

விளம்பரம், கையெழுத்து, நூலகம், அச்சு, குத்தகை, வதந்திகள், கோள் சொல்லுதல், புத்தி பேதலிப்பு, புதிய பரிமாணம்.

### 4 ஆம் பாவகக் காரகத்துவம்

உடலில் எப்போதும் இயங்கிகொண்டிருக்கும் நுரையீரல், இதயம், சிறுநீரகம், சொத்துக்கள், சொந்தஊர், உறவினர்கள், கற்பு, உடல் சார்ந்த ஒழுக்கம், அலித்தன்மை, மிகைப்படுத்தாமல் அப்படியே கூறுதல், மனப்பாடம் செய்தல், ஒப்பனை இல்லாத எளிமையான தோற்றம், அறிவுபூர்வமாகச் சிந்தித்தல், யூகங்களை நம்பாதிருத்தல், நாத்திகம், புரட்சிகரமான சிந்தனைகள், இருப்பதை அப்படியே பயன்படுத்துதல், தாய், கல்வி, வீடு, நிலம், வாகனங்கள், பண்ணைகள், கட்டடங்கள், ஞாபகச்சின்னங்கள், புராதனப்பொருள்கள், இயந்திரங்கள், சுரங்கம், வீட்டு உபயோகப்பொருட்கள், தேவைக்கு அதிகமான கையிருப்புப் பணம்.

### 5 ஆம் பாவகக் காரகத்துவம்

இதயம், முதுகுப்பகுதி, பாலியல், சுரப்பி, புத்திர உற்பத்திக்கான உயிர் அணுக்கள், யூகம், மதிநுட்பம், குழந்தை வாரிசுகள், பொழுதுபோக்கு விஷயங்கள், அழகுபடுத்திக் கொள்ளுதல், இரசனை, உல்லாசம், விளையாட்டு, கலைகளில் ஆர்வம், உடலை வருத்திக்கொள்ளாமல் இருத்தல், ஆழ்ந்த சிந்தனை, சிற்றின்பத்தில் அதிக நாட்டம், தரகு, கவர்ச்சி, காதல் வயப்படுதல், எதையும் உணர்வுபூர்வமாகச் சிந்தித்தல், கற்பனைவளம், உடல் வளையாது, கடன் தொல்லை இல்லை, ஆரோக்கியம், கேளிக்கை, சூதாட்டம், சினிமா, நாடகம், இசை, மந்திரம், தெய்வீக பாசுரம், இலக்கியப் படைப்பு, மிகைப்படுத்திய வர்ணனை, உடைதானம், உணவுதானம், மருந்து தானம்.

### 6 ஆம் பாவகக் காரகத்துவம்

வயிறு, இரைப்பை, கல்லீரல், மருந்துக்குக் கட்டுப்படும் நோய், மருந்து, மருத்துவர், உணவு, உடை, உடல் உழைப்பு, அந்தஸ்துக்குச் சமம் இல்லாத வேலையாட்கள், அடிமைகள், செல்லப்பிராணிகள், வீட்டு விலங்குகள், சாதகருக்குக் கட்டுப்படும் நபர்கள், ஸ்பரிசசுகம் இல்லாதிருத்தல், திருமண பந்தத்தினை முறித்துக் கொள்ளுதல், திருமணம் ஆகாதிருத்தல், வாழ்க்கை துணைமீது ஆதிக்கம் செலுத்துதல், பொது

மக்கள் தொடர்பில் இருந்து விலகித் தனித்து இருத்தல், எதிரிகள், வழக்கு, நண்பர்களை உதாசீனப்படுத்துதல், சமூகக் கட்டுப்பாட்டை மீறுதல், மற்றவரிடம் பணிபுரிதல், மாதச்சம்பளம், தொழிலாளர்கள், நோய், பகைமை, கஞ்சத்தனம், பேராசை, ஆணவம், தற்பெருமை, மற்றவர் பொருட்களை அபகரித்தல், மற்றவரைத் தோல்வி அடையசெய்து வெற்றி பெறுதல், எதையும் மற்றவரை விடச் சிறப்பாககச் செய்தல், தற்காலிகப் பணவரவு அல்லது திருப்பித் தரக்கூடிய பணம்(கடன்), ஒன்றுக்கு மேற்பட்ட சொத்துக்கள், சொத்துமூலம் வரும் வாடகைப் பணம், வாடகை தருதல்.

### 7 ஆம் பாவகக் காரகத்துவம்

அடிவயிறு, உடலில் நடுப்பகுதி, தொப்புள், சிறுநீரகம், கர்ப்பப்பை, சாதகருக்கு எதிரில் உள்ள நபர்கள், சாதகரைச் சந்திக்கும் நபர்கள், வாடிக்கையாளர்கள், வாழ்க்கைத் துணை, பொதுஜனத் தொடர்பு, சமூக அங்கீகாரம், திடீர்மரணம், இழந்த பொருட்களை மீட்பது, திருமண வாழ்க்கை, வாழ்க்கைத் துணை பற்றின விபரங்கள், பொதுமக்களின் ஆதரவு, பொதுக்கூட்டம், எதிர்பாலின ஸ்பரிசசுக பரிமாற்றங்கள், வியாபாரத்தில் பங்குதாரர், மற்றவரை இணைத்துக் கொள்ளுதல்.

### 8 ஆம் பாவகக் காரகத்துவம்

மர்ம உறுப்புக்களைக் குறிக்கும், ஆயுள், வலி, வேதனை, துரோகம், துக்கம், துரதிஷ்டம், போராட்டம், விபத்து, உடல் உறுப்புக்கள் பழுது, தெய்வக்குற்றம், அதர்ம சிந்தனை, அவமானம், கெட்டபெயர், எதையும் பெற முடியாமல் போவது, முயற்சிகள் வீணாகுதல், தெய்வவழிபாடு கூடப் பயனற்றுப் போகுதல், தற்கொலை, கொலை, துர்மரணம், உடல் உறுப்புகள் சேதப்படுதல், கொள்ளை, எதிரிகள் தொல்லை, எல்லாவித் தடைகள், வீண் பழி, நஷ்டப்படுதல், இன்சூரன்ஸ் பணம், இலஞ்சம், இறந்தவரின் பணம், அறுவை சிகிச்சை, பெருங்கடன், தன்னிலை தாழ்த்திக் கடுமையாக உழைத்தல், பல நோய், சட்ட விரோதமாகக் கிடைக்கக் கூடிய பொருள்கள், அதிகப்படியான கோபம், இளமையிலேயே தந்தையை இழத்தல், இயற்கைச் சீற்றங்கள், போர், தெய்வநிந்தனை.

## 9 ஆம் பாவகக் காரகத்துவம்

இடுப்பு, புட்டம், மலத்துவாரம், நேர்மை, நம்பிக்கை, விசுவாசம், தெய்வ நம்பிக்கை, கருணை, மனிதாபிமானம், ஆராய்ச்சித் திறன், உள்ளுணர்வு, உபாசனை, மதநம்பிக்கை, தானதருமம், தியாகசிந்தனை, உயர்கல்வி, அதிர்ஷ்டம், செல்வந்தருக்கு மகனாகப் பிறத்தல், பூர்வீகச் சொத்து கிடைத்தல், செல்வத்தை மற்றவரிடம் இருந்து தானமாகப் பெறுதல், ஆன்மீகம், சாதகரைத் தொழில் செய்ய விடாமல் தடுக்கும், ஆழ்ந்த உறக்கம், தியானம், குருவிடம் இருந்து உபதேசம் பெறுதல், ஆன்மிக வாதிகளை சந்தித்தல், தெய்வத் திருப்பணிகள், தந்தை, தந்தையின் மூதாதையர்களைக் குறிக்கும், பெருந்தன்மை, முன்யோசனை, நீண்ட தூரப்பயணம், தீர்த்தயாத்திரை, கடற்பயணம், வெளிநாடு, அந்நிய நபர்கள், பல்கலைக்கழகம், இயற்கை, தெய்வ அனுக்கிரகம், கோவில், சர்ச், மசூதி, குலதெய்வம், வணங்கக் கூடிய நபர்கள், குரு, வெளிநாட்டுச் செய்திகள், வானொலி, தொலைக்காட்சி, கம்பியில்லாத் தந்தி, ஆவியுலகத் தொடர்புகள், உலக அனுபவங்கள், சட்டம் ஒழுங்கு, நீதித்துறை, நீதிநெறி, ஏற்றுமதி, இறக்குமதி, சர்வதேச வர்த்தகம், பரம்பரைச் சொத்து, பண முடக்கம், தொழில் நட்டம்.

## 10 ஆம் பாவகக் காரகத்துவம்

தொடைப்பகுதி, குடல், அந்தஸ்து, புகழ், அங்கீகாரம், சுய சம்பாத்தியம், பணத்திற்கு அதிர்ஷ்ட ஸ்தானம், சாதகரின் உச்சி, தொழில், அதிகாரப் பதவிகள், தொழிலில் நீடித்தநிலை, சீவனம், சமூக அந்தஸ்து, நிர்வாகத் திறன், அரசாங்கத்திடம் இருந்து வெகுமதி, சங்கக் கூட்டத்திற்குத் தலைமை தாங்குதல், எப்போதும் ஒரு பொருளை உற்பத்தி செய்து கொண்டிருத்தல்.

## 11 ஆம் பாவகக் காரகத்துவம்

முழங்கால், மூட்டு, உடலில் உள்ள வைட்டமின்கள், திருப்தி, வெற்றியடைதல், நிகரக் கையிருப்பு இலாபம், எதிலும் முதலீடு செய்யாமல் கையில் பணமாக வைத்திருத்தல், சுறுசுறுப்பாக மகிழ்ச்சியாக இருத்தல், இரகசியம் அறிதல், நண்பர்களுடன் மகிழ்ச்சியாக இருத்தல், வரவுக்குள்ளே செலவு செய்தல், தடைகள் இன்றி முன்னேறுதல், நலம் விரும்பிகளைக்

குறிக்கும், கொடுத்த கடனை அசல் வட்டியுடன் பெறுவது, ஆசைகள் நிறைவேறுமா அல்லது ஆகாதா என்பதைத் தெரிவிக்கும், மூத்த சகோதரம், விருப்பம், அபிலாசைகள், குறிக்கோள், வெற்றிகள், முகஸ்துதி செய்பவர்கள், சேமிக்கும் பழக்கம், முயற்சிகள் சித்தியாகுதல், ஆசை நிறைவேறியபின் கிடைக்கும் திருப்தி, நீடித்தநட்பு, ஒருமித்த கருத்து உடையவர்களின் குழு, சங்கம், கூட்டம், மாநாடு, உச்சநிலை கல்வி, முழு அறிவைப் பெறுதல், பாராளுமன்றம், சட்டமன்றம், நகராட்சிகள், வியாதி குணமடைதல், மருத்துவமனையில் இருந்து வீடுதிரும்புதல்.

### 12 ஆம் பாவகக் காரகத்துவம்

பாதங்கள், உடலில் இருந்து வெளியேறும் கழிவுப் பொருள்கள், சாதகரின் செயல்பாடுகளை முடிவுக்கு கொண்டுவரும் பாவமாகும், மறைத்து வைக்கப்பட்டது, இரகசியம், சதி வேலைகள், இரகசியத் திட்டங்கள், சதி, ஆலோசனைகள், இரகசிய எதிரிகள், அரசியல் காரணங்களுக்காகச் செய்யப்படும் கொலைகள், புரியாதப் புதிர்கள், துப்பறியும் வேலை, இரகசிய முதலீடுகள், உடல் உறுப்புகள் அல்லது மூளை செயல்இழந்து போகுதல், தாழ்வு மனப்பான்மை, தனிமையில் இருத்தல், செயல்படாதிருத்தல், தோல்வி, மறைந்து வாழ்தல், பிற மக்களால் தள்ளி வைக்கப்படுதல், சிறைச்சாலை, அனாதை விடுதிகள், நஷ்டங்கள், வரவுக்கு மீறிய செலவு, அதிக வட்டியுடன் கடனைத் திருப்பித் தருதல், மறைமுக எதிர்ப்புகளைச் சமாளிக்க முடியாமல் திணறுதல், இரகசிய சிறையில் இருத்தல், மருத்துமனையில் சிகிச்சை பெறுதல், தண்டனை, அபாராதங்கள், துறவு போகுதல், இடமாற்றம், வெளிநாடு செல்லுதல், வெளிநாட்டுக் குடியுரிமை பெறுதல், பணத்தைச் சொத்துகளில் முதலீடு செய்தல், பணத்தை முதலீடு செய்தல், தனது வேலையை மற்றவரிடம் தந்துவிட்டு நிம்மதியாக இருத்தல், இரண்டாவது தொழில் செய்தல், படுக்கைக்குச் செல்லுதல்.

## கொடுப்பினை நிர்ணயம் செய்யும் நான்கு விதிகள்

இராசிக் கட்டத்தில் அவை 1. பாவகம், 2. பாவக அதிபதி, 3. பாவகக் காரகக் கோள், 4. சர்வாஷ்டகவர்க்கம் ஆகும்.

1. **பாவகம்** : உபஜெய (3, 6, 10, 11) ஸ்தானங்களைத் தவிற மற்ற பாவகங்களில் (1, 2, 4, 5, 7, 8, 9, 12) இயற்கை தீய கோள்களான சூரியன், செவ்வாய், சனி, இராகு, கேது ஆகிய கோள்கள் ஏதும் இருக்க கூடாது. அவ்வாறு இருந்தால் அந்தப் பாவகம் பாதிக்கப்படும்.
2. **பாவக அதிபதி** : பன்னிரு பாவக அதிபதிகளும் இலக்கினத்திற்கோ அல்லது தனது ஸ்தானத்திற்கோ 8 அல்லது 12 இல் மறையக் கூடாது. அவ்வாறு மறைந்தால் அந்தப் பாவகம் பாதிக்கப்படும். (இலக்கினத்திற்குத் தீமை செய்யக் கூடிய 8 மற்றும் 12 ஆம் பாவக அதிபதி தனது ஸ்தானத்திற்கு 8 மற்றும் 12 இல் மறையலாம்)
3. **பாவகக் காரகக் கோள்** : பன்னிரு வீட்டிற்கும் ஒவ்வோரு காரகக் கோள் உண்டு. அந்த அந்தப் பாவகத்தின் காரகக் கோள் இலக்கினத்திற்கோ அல்லது அந்தக் குறிப்பிட்ட பாவகத்திற்கு 8 அல்லது 12 இல் மறையக் கூடாது. அவ்வாறு மறைந்தால், அந்தப் பாவகம் பாதிக்கப்படும்.
4. **சர்வாஷ்டக வர்க்கம்** : ஒவ்வொரு பாவகத்திலும் சர்வாஷ்டகவர்க்கம் 28 பரல்களுக்குக் குறையாமல் இருக்க வேண்டும். அவ்வாறு 28 பரல்களுக்குக் குறைந்தால் அந்தப் பாவகம் பாதிக்கப்படும். (இலக்கினத்திற்குத் தீமை செய்யக் கூடிய 8 மற்றும் 12 ஆம் பாவகங்களின் பரல்கள் 28 க்குக் குறைவாக இருப்பது நலமாகும். அதாவது தீமையான பலன்கள் குறையும்.

இந்நான்கு விதிகளின்படி ஒவ்வாரு பாவகத்தையும் கணக்கீடு செய்து, பன்னிரு பாவகங்களின் கொடுப்பினையை (வலுவை) அறிந்து கொள்ள வேண்டும்.

**கொடுப்பினையும் தசாபுத்தியும்**

பன்னிரு பாவகக் கொடுப்பினையில் சில பாவகக் கொடுப்பினை நன்றாக அமைந்து இருக்கும். சில பாவகக் கொடுப்பினை மத்திமமாக அமைந்து இருக்கும். சில பாவகக் கொடுப்பினை இல்லாமல் பலன் மறுக்கப்பட்டு இருக்கும். இதன்படி, நல்ல கொடுப்பினை உடைய பாவகங்கள் தசாபுத்தியின் தாக்கம் ஏதும் இல்லாமல் எப்போதும் இயங்கிக் கொண்டே இருக்கும். அதாவது தசாபுத்தியின் தாக்கம் பெரியமாற்றத்தைக் கொடுக்காது.

மத்திம கொடுப்பனை உடைய பாவகங்கள் தசாபுத்தியைச் சார்ந்தே இயங்கும். அதாவது அந்தப் பாவகத்திற்குச் சாதகமானத் தசாபுத்திக் காலத்தில் அந்தப் பாவகம் நல்லமுறையில் இயங்கும், அந்தப் பாவகத்திற்குப் பாதகமான தசாபுத்திக் காலத்தில் அந்தப் பாவகம் இயங்காது.

கொடுப்பினை இல்லாத பாவகங்களானது எந்தத் தசாபுத்தி வந்தாலும் இயங்காது.

**விம்சோத்திரி தசாபுத்திப் பயன்பாடு**

இந்தியச் சோதிடத்தில் பல விதமான தசாபுத்தி கணிதங்கள் பயன்பாட்டில் இருந்துள்ளன. ஆனால், தற்காலத்தில் விம்சோத்திரி (120 ஆண்டுகள்) தசாபுத்திக் கணிதங்கள்தான் பெரும்பாலான சோதிடர்கள் பயன்படுத்தி வருகின்றனர். எனவே இவ்வாய்வுக்கு விம்சோத்திரி தசாபுத்திக் கணிதமே எடுத்துக்கொள்ளப்படுகிறது.

இராசிக்கட்டத்தைக் கொண்டு பலன் நிர்ணயம் செய்ய வேண்டியவை

1. பன்னிரு இராசிகளில் ஒன்பதுகோள்கள் நின்ற பலன்.
   (உம்) மேஷ இராசியில் சூரியன்
   இடப இராசியில் சூரியன்
   மிதுன இராசியில் சூரியன்.

இவ்வாறு பன்னிரு இவ்வாறு பன்னிரு இராசிகளில் ஒன்பது கோள்கள் நின்ற பலன்கள் என 108 விதமான பலன்கள் தனித்தனியாக உள்ளன.

2. ஒன்பது கோள்களின் பலம் குறித்த பலன்கள்.

   (உ.ம்) சூரியன் உச்சம் அடைந்த பலன்கள்.

   சூரியன் நீசம் அடைந்த பலன்கள்.

   சூரியன் நட்பு இராசிகளில் நின்ற பலன்கள்.

   சூரியன் பகை இராசிகளில் நின்ற பலன்கள்.

   சூரியன் சம இராசிகளில் நின்ற பலன்கள். இவ்வாறு ஒன்பது கோள்களுக்கும் தனது பலத்தின் அடிப்படையில் கூறப்படும் பலன்களும் இராசிக்கட்டத்தைவைத்தே கூறப்படுகிறது.

3. பன்னிரு பாவக அதிபதி

   (உ.ம்) ஒன்றாம் பாவக அதிபதி, இரண்டாம் பாவக அதிபதி, மூன்றாம் பாவக அதிபதி

   இவ்வாறு பன்னிரு பாவக அதிபதியும் இராசிக் கட்டத்திற்குத்தான் பொருந்தும்.

4. பன்னிரு பாவக அதிபதி மாறி நின்ற பலன்கள்

   (உ.ம்) ஒன்றாம் பாவக அதிபதி ஒன்றில் நின்ற பலன்,

   ஒன்றாம் பாவக அதிபதி இரண்டில் நின்ற பலன்,

   ஒன்றாம் பாவக அதிபதி மூன்றில் நின்ற பலன்..

   எனப் பன்னிரு பாவக அதிபதியும் பன்னிரு பாவகங்களில் நின்ற பலன்கள் என மொத்தம் 144 பலன்கள் தனித்தனியாகக் கூறப்பட்டுள்ளன.

5. அரசயோகப் பலன்கள் பெரும்பாலும் இராசிக் கட்டத்திற்கே கூறப்பட்டுள்ளது.

6. அனைத்து விதமான தோசங்களும் இராசிக் கட்டத்திற்கே கூறப்பட்டுள்ளன.

7. கோள்கள் இணைவு மற்றும் பார்வைப் பலன்கள் இராசிக் கட்டத்திற்கே பொருந்தும்.

8. கோள்களின் அஸ்தமனம், வக்கிரம் போன்ற பலன்களும் இராசிக் கட்டத்திற்குத் தான் சொல்லப்பட்டுள்ளது.

9. லக்கின சுபர், இலக்கின அசுபர், யோகாதிபதி, பாதாகாதிபதி, மாரகாதிபதி போன்ற பலன்களும் இராசிக்கட்டத்திற்குதான் உண்டு.

ஆனால் தசாபுத்திப் பலன்கள் காணப் பாவகக் கட்டம்தான் பயன்படுத்தப்பட வேண்டும். பலவிதமான பாவகக் கணிதமுறை உள்ளது. இங்கு ஆய்வுக்கு ஸ்ரீபதி பாவக முறை (பாவக மத்திம முறை) தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

விம்சோத்திரி தசாபுத்திப் பலன்கள் எனும்போது தசா பலன், புத்தி பலன், அந்தரப் பலன் எனப் பிரித்துப் பலன்கள் கூற வேண்டும். நமது ஆய்வுப்படி தசாபலன் உண்டா இல்லையா என்பதைப் புத்தியை நடத்தும் கோள்தான் தீர்மானம் செய்கிறது. எனவே புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகமே முக்கியமானதாகும்.

ஒரு பாவகத்தில் இருந்து ஒரு கோள் புத்தியை நடத்தும் பொழுது அந்தப் பாவகத்திற்கு மட்டும் பலன் செய்வதில்லை, மற்ற 11 பாவகங்களுக்கும் பலன் அளிக்கும். அதன்படி சில பாவகங்களுக்கு நன்மையான பலன்களும், சில பாவகத்திற்கு மத்திமப் பலனையும், சில பாவகங்களுக்குத் தீமையான பலனையும் செய்யத் தவறுவதில்லை. ஒவ்வொரு பாவத்திலிருந்து கோள் நின்ற பாவகம் எத்தனையாவது பாவம் என்று எண்ணி அதற்குத் தகுந்தாற்போல் 12 பாவகத்திற்கும் பலன் கூற வேண்டும்.

**இவ்வாய்வுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள 12 விதிகள்**

1. ***"ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, தன்னுடைய பாவ பலனை எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படியே செய்யும்"*** [7] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.
   **ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 1 ஆக இருந்தால், அந்தப் பாவகத்திற்கு எப்படி பலனைச் செய்ய வேண்டுமோ அப்படியே செய்யும் (சுயமுயற்சி) அதாவது நூறு விழுக்காடு எனக் கொள்ளலாம்.**
2. ***"ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 2 ஆவது பாவமாக வருகின்றதோ அந்தப் பாவத்தைக் குறிப்பிட்ட அளவுக்குமேல் அதிகமாக வளரவிடாமல் அதற்கு முட்டுக்கட்டையாகச் செயல்படும்"*** [8] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.
   **ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 2 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தைக் குறிப்பிட்ட அளவுக்குமேல் வளரவிடாமல் (சராசரி அளவைவிடச் சற்றுக் கூடுதலாக மட்டும் வளர்த்து) அதற்கு முட்டுக்கட்டையாகச் செயல்படும்.**
3. ***"ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 3 ஆம் பாவமாக வருகின்றதோ அந்தப் பாவத்தை, மிக அதிகளவில் பல மடங்கு வளர்த்துவிடும். மேலும் அந்தப் பாவத்தை அதன் அடுத்த பரிமாணத்திற்கும் எடுத்துச் செல்லும்"*** [9] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.
   **ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 3 ஆக இருந்தால், அந்தப் பாவத்தை மிக அதிக**

---

[7] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 114
[8] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 115
[9] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 116

**அளவில், அதாவது பலமடங்கு வளர்த்துவிடும். மேலும் அந்தப் பாவகத்தை அடுத்த பரிமாணத்திற்கு எடுத்துச் செல்லும் ஆற்றல் ஏற்படும்.**

4. ***“ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 4 ஆம் பாவமாக வருகின்றதோ, அந்தப் பாவத்தைத் தொடர்ந்து இயங்கவிடாமல் தடுத்து நிறுத்திவிடும். குறிப்பாக ஒரு குறிப்பிட்ட பாவம் எந்தப் பாவத்திற்கு 4 ஆம் பாவமாக வருகின்றதோ அந்த பாவத்தை 30 விழுக்காடு வரை மட்டுமே இயங்கவிட்டுப் பிறகு அது தொடர்ந்து இயங்குவதைத் தடுத்து நிறுத்திவிடும்”*** [10] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

   **ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 4 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தைத் தொடர்ந்து இயங்கவிடாமல் தடுத்து நிறுத்திவிடும். அதாவது 30 விழுக்காடு வரை இயக்கி, பின்னர் துண்டித்து விடும்.**

5. ***“ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 5 ஆம் பாவமாக வருகின்றதோ அந்தப் பாவத்தின் காரகங்களுக்கு எந்த விதச் சிரமங்களையும் தராமல் இயங்கும்”*** [11] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

   **ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 5 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தின் காரகங்களுக்கு எந்த விதச் சிரமமும் தராமல் இயங்கும் ஆற்றல் பெற்றுவிடும். (அறிவாற்றல்) நூறு விழுக்காடு எனக் கொள்ளலாம்.**

6. ***“ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 6 ஆம் பாவமாக வருகின்றதோ, அந்தப் பாவத்தின் காரகங்களுக்கு அதிகம் சிரமங்களைக் கொடுத்தாலும் அதனை எப்படியாவது இயக்க வைத்துவிடும்”*** [12] பாவகத் தொடர்புக்காகக்

---

[10] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 117

[11] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 118

[12] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 119

கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

**ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 6 ஆக இருந்தால், அந்தப் பாவகத்திற்கு அதிகம் சிரமங்களைக் கொடுத்தாலும், அதனை எப்படியாவது இயங்க வைத்துவிடும். கட்டுப்பாடு என்பது இருக்கும்.**

7. ***"ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 7 ஆம் பாவமாக வருகின்றதோ, அந்தப் பாவத்தை நடுநிலை தன்மையுடன் செயல்படுத்தும், அதாவது ஒரு குறிப்பிட்ட பாவத்தின் 7 ஆம் பாவம், தன்னுடைய பாவத்தினை எப்படிச் செயல்படுத்துகின்றதோ அதேபோல் தன்னுடைய ஏழாம் பாவத்தையும் செயல்படுத்தும். ஆய்வுக்குரிய பாவம் ஒற்றைப்படையாக இருந்தால் அதன் 7 ஆம் பாவம் செயல்படும்போது ஆய்வுக்குரிய பாவத்தை மிகச் சிறப்பாகச் செயல்படுத்தும். அதேநேரத்தில் ஆய்வுக்குரிய பாவம், இரட்டைப்படைப் பாவமாக இருந்தால் அதிகம் வளரவிடாமல் கட்டுப்படுத்திச் செயல்படும் "***[13] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

   **ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 7 ஆக இருந்தால், ஒற்றைப்படைப் பாவகமாக இருந்தால், அந்தப் பாவகப் பலனை வளர்க்கும் ஆற்றல் பெற்றுவிடும். மாறாக இரட்டைப்படைப் பாவகமாக இருந்தால் கட்டுப்படுத்தும். இங்கு ஒற்றைப்படை, இரட்டைப்படை இலக்கினத்தில் இருந்து கணக்கிடப்பட வேண்டும்.**

8. ***"ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 8 ஆம் பாவமாக வருகின்றதோ, அந்தப் பாவத்தின் காரகங்களை எப்படி செயல்படுத்த வேண்டுமோ அப்படிச் செயல்படுத்தாமல், அந்தப் பாவத்திற்கு எதிரான நிலையில் செயல்படுத்திவிடும்"***[14] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி

---

[13] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 120

[14] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 121

தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

**ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 8 ஆக இருந்தால், அந்தப் பாவகப் பலனை எப்படி செயல்படுத்த வேண்டுமோ அப்படிச் செயல்படுத்தாமல், அந்தப் பாவகத்திற்கு எதிரான நிலையில் செயல்படுத்திவிடும்.**

9. ***"ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 9 ஆம் பாவமாக வருகின்றதோ, அந்தபாவத்தின் காரகங்களுக்குச் சாதகர் எந்தவித முயற்சியும் செய்யாமல் இருந்தாலும் கூட, தானாகவே அது சாதகரைத் தேடி வரும்."*** [15]

   பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

   **ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 9 ஆக இருந்தால், அந்தப் பாவகப் பலனை எந்தவித முயற்சியும் செய்யாமலே அந்தப் பாவகப் பலனைச் செய்துவிடும். தெய்வ அனுக்கிரகம் நூறு விழுக்காடு எனக் கொள்ளலாம்.**

10. ***"ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 10 ஆம் பாவமாக வருகின்றதோ, அந்தப் பாவத்தை 70 விழுக்காடு வரை இயங்க விட்டு, பிறகு அது தொடர்ந்து இயங்குவதைத் தடுத்தி நிறுத்தி விடும்"*** [16] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

    **ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 10 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தை 70 விழுக்காடு வரை இயக்கி, பின்னர் துண்டித்து விடும்.**

11. ***"ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 11 ஆம் பாவமாக வருகின்றதோ, அந்தப் பாவத்தை முழுவதுமாக இயக்கும்"*** [17] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட

[15] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 122
[16] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 123
[17] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 124

இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

**ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 11 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தை முழுவதுமாக இயக்கும் ஆற்றல் உண்டு. ஊக்கம் அளிக்கும் எனக் கொள்ளலாம்.**

12. " ***ஒரு குறிப்பிட்ட பாவம் இயங்கும்போது, அந்தப் பாவம் எந்தப் பாவத்திற்கு 12 ஆம் பாவமாக வருகின்றதோ, அந்தப் பாவத்தைச் சிறிது கூட இயங்க விடாது நசித்து விடும் அல்லது முழுவதுமாகச் செயலிழக்கச் செய்துவிடும்*** "[18] பாவகத் தொடர்புக்காகக் கூறப்பட்ட இவ்விதி தசாபுத்திப் பலன்களுக்காகக் கீழ்கண்டவாறு மாற்றி அமைக்கப்பட்டுள்ளது.

**ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 12 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தைச் சிறிது கூட இயங்க விடாமல் முழுவதுமாக நசுக்கிவிடும்.**

புத்தியை நடத்துகின்ற ஒரு கோள் ஒரு பாவகத்தில் இருந்தாலும் பன்னிரு பாவகங்களுக்கும் எவ்விதம் பலன் அளிக்கும் என ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பன்னிரு விதிகள்மூலம் அளந்து தனித்தனியே பலன்கள் கூற முடியும்.

[18] ஏ. தேவராஜ், கொடுப்பினையும் தசா புத்திகளும், ப 125

**12 விதிகளைப் பயன்படுத்தும் முறை :**

இலக்கினம் இல்லாமல் பன்னிரு விதிகளைப் பயன்படுத்தும் முறை

வரைபடம்-1 : கீழே கொடுக்கப்பட்டுள்ள வரைபடம்-1 பாவகக் கட்டத்தில் குருபுத்தி நடக்கிறது என வைத்துக்கொண்டு, இந்தக் குருபுத்தியில் பன்னிரு விதிகளை எவ்வாறு பயன்படுத்த வேண்டும் எனப் பார்ப்போம். பாவகக் கட்டத்திற்கு வெளியே விதிஎண் பயன்படுத்தப்பட்டுள்ளது.




மேச இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 5 ஆக வருவதால், மேச இராசிக்கு விதி 5 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்,

இடப இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 4 ஆக வருவதால், இடப இராசிக்கு விதி 4 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்.

மிதுன இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 3 ஆக வருவதால், மிதுன இராசிக்கு விதி 3 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்.

கடக இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 2 ஆக வருவதால், கடக இராசிக்கு விதி 2 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்.

சிம்ம இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 1 ஆக வருவதால், சிம்ம இராசிக்கு விதி 1 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்.

கன்னி இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 12 ஆக வருவதால், கன்னி இராசிக்கு விதி 12 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்.

துலாம் இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 11 ஆக வருவதால், துலாம் இராசிக்கு விதி 11 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்.

விருட்சிக இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 10 ஆக வருவதால், விருட்சிக இராசிக்கு விதி 10 ஐப் எடுத்துக்கொள்ள வேண்டும்.

தனுசு இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 9 ஆக வருவதால், தனுசு இராசிக்கு விதி 9 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்.

மகர இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 8 ஆக வருவதால், மகர இராசிக்கு விதி 8 ஐப் எடுத்துக்கொள்ள வேண்டும்.

கும்ப இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 7 ஆக வருவதால், கும்ப இராசிக்கு விதி 7 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்.

மீன இராசியில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 6 ஆக வருவதால், மீன இராசிக்கு விதி 6 ஐ எடுத்துக்கொள்ள வேண்டும்.

### இலக்கினத்துடன் பன்னிரு விதிகளைப் பயன்படுத்தும் முறை

வரைபடம்-2 : கீழே கொடுக்கப்பட்டுள்ள வரைபடம்-2 இல் மேச இலக்கின சாதகம் ஆகும். இங்குப் புத்தியை நடத்தக்கூடிய கோள் சுக்கிரன் என எடுத்துக்கொண்டு, இந்தச் சுக்கிர புத்தியில் எவ்வாறு பன்னிரு பாவகத்திற்கும் பலன் அளிக்கும் என ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பன்னிரு விதிகள்மூலம் பார்க்கலாம். பாவகக் கட்டத்திற்கு வெளியே விதிஎண் பயன்படுத்தப்பட்டுள்ளது.

| | 12 | 11 | 10 | 9 | |
|---|---|---|---|---|---|
| | 12 | லக் | 2 | 3 | |
| 1 | சுக் 11 | பாவகம் | | 4 | 8 |
| 2 | 10 | வரைபடம்-2 | | 5 | 7 |
| | 9 | 8 | 7 | 6 | |
| | 3 | 4 | 5 | 6 | |

ஒன்றாம் பாவகமாகிய மேச இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 11 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 11 ஐ பயன்படுத்த வேண்டும்.

இரண்டாம் பாவகமாகிய இடப இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 10 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 10 ஐ பயன்படுத்த வேண்டும்.

மூன்றாம் பாவகமாகிய மிதுன இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 9 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 9 ஐ பயன்படுத்த வேண்டும்.

நான்காம் பாவகமாகிய கடக இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 8 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 8 ஐ பயன்படுத்த வேண்டும்.

ஐந்தாம் பாவகமாகிய சிம்ம இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 7 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 7 ஐ பயன்படுத்த வேண்டும்.

ஆறாம் பாவகமாகிய கன்னி இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 6 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 6 ஐ பயன்படுத்த வேண்டும்.

ஏழாம் பாவகமாகிய துலா இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 5 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 5 ஐ பயன்படுத்த வேண்டும்.

எட்டாம் பாவகமாகிய விருட்சிக இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 4 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 4 ஐ பயன்படுத்த வேண்டும்.

ஒன்பதாம் பாவகமாகிய தனுசு இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 3 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 3 ஐ பயன்படுத்த வேண்டும்.

பத்தாம் பாவகமாகிய மகர இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 2 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 2 ஐ பயன்படுத்த வேண்டும்.

பதினொன்றாம் பாவகமாகிய கும்ப இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 1 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 1 ஐ பயன்படுத்த வேண்டும்.

பன்னிரெண்டாம் பாவகமாகிய மீன இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் சுக்கிரன் நின்ற பாவகம் 12 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 12 ஐ பயன்படுத்த வேண்டும்.

## பன்னிரு விதிகளின்படி பலன் விளக்கம்

வரைபடம்-3 : கீழே கொடுக்கப்பட்டுள்ள வரைபடம்-3 இல் மிதுன இலக்கின சாதகம் ஆகும். இங்குப் புத்தியை நடத்தக்கூடிய கோள் இராகு என எடுத்துக்கொண்டு, இந்த இராகு புத்தியில் எவ்வாறு பன்னிரு பாவகத்திற்கும் பலன் அளிக்கும் என ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பன்னிரு விதிகள் மூலம் பார்க்கலாம். பாவகக் கட்டத்திற்கு வெளியே விதிஎண் பயன்படுத்தபட்டுள்ளது.

| | 7 | 6 | 5 | 4 | |
|---|---|---|---|---|---|
| | 10 | 11 | 12 | லக் | |
| 8 | 9 | பாவகம் | | 2 | 3 |
| 9 | 8 | வரைபடம்-3 | | 3 | 2 |
| | 7 | 6 | 5 | ராகு 4 | |
| | 10 | 11 | 12 | 1 | |

ஒன்றாம் பாவகமாகிய மிதுன இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 4 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 4 ஐப் பயன்படுத்த வேண்டும். விதிஎண் 4 இன் படி அந்தப் பாவகத்தைத் தொடர்ந்து இயங்கவிடாமல் தடுத்து நிறுத்திவிடும். அதன்படி இங்கு ஒன்றாம் பாவகக் காரகப் பலன்களாகிய சாதகரின் தனித்தன்மை, மூளை, பொதுவான தோற்றம், சுதந்திர மனப்பான்மை, சுயகௌரவம், சுயமுயற்சி, செயல்திறன், ஆரோக்கியம், பெருந்தன்மை, தன்னம்பிக்கை போன்ற பலன்களில் 30 விழுக்காடு மட்டுமே இயங்கும். 70 விழுக்காடு ஒன்றாம் பாவகப் பலனைத் தர மறுக்கும்.

இரண்டாம் பாவகமாகிய கடக இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 3 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 3 ஐப் பயன்படுத்த வேண்டும். விதிஎண் 3 இன் படி அந்தப் பாவகத்தை மிகஅதிக அளவில், அதாவது பலமடங்கு

வளர்ந்துவிடும். மேலும் அந்தப் பாவகத்தை அடுத்த பரிணாமத்திற்கு எடுத்துச் செல்லும் ஆற்றல் ஏற்படும். அதன்படி இங்கு இரண்டாம் பாவகக் காரகப் பலன்களாகிய சாதகரின் பொருளாதாரம், பேச்சுத் திறன், கையிருப்பு பணம், எளிதில் பணமாக மாற்றத் தக்க பொருள்கள், பணம் உற்பத்தி செய்யும் திறன் போன்ற பலன்கள் பல மடங்கு இருக்கும்.

மூன்றாம் பாவகமாகிய சிம்ம இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 2 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 2 ஐப் பயன்படுத்த வேண்டும். விதிஎண் 2 இன் படி அந்தப் பாவகத்தைக் குறிப்பிட்ட அளவுக்குமேல் வளரவிடாமல், அதாவது சராசரி அளவைவிடச் சற்றுக் கூடுதலாக மட்டும் வளர்த்துப் பின் அதற்கு முட்டுக்கட்டையாகச் செயல்படும். அதன்படி இங்கு மூன்றாம் பாவகக் காரகப் பலன்களாகிய காது, கழுத்தெலும்பு, கழுத்துக்குக் கீழ் செல்லும் நரம்பு மண்டலம், உணர்வுப் புலன்கள், எழுத்து, எல்லாவிதத் தகவல் தொடர்பு மற்றும் தகவல் பரிமாற்றம், ஒப்பந்தம், சிறு பயணம், பதிவுகள் போன்ற பலன்கள் முட்டுக்கட்டையோடு ஒரு வரைமுறை மட்டும் செயல்படும்.

நான்காம் பாவகமாகிய கன்னி இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 1 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 1 ஐ பயன்படுத்த வேண்டும். விதிஎண் 1 இன்படி அந்தப் பாவகத்திற்கு எப்படிப் பலனைச் செய்ய வெண்டுமோ அப்படியே செய்யும். அதன்படி இங்கு நான்காம் பாவகக் காரகப் பலன்களாகிய உடலில் எப்பொதும் இயங்கிக்கொண்டிருக்கும் நுரையீரல், சிறுநீரகம், அசையும் மற்றும் அசையாச் சொத்துக்கள், தாயகம், உடல்சார்ந்த ஒழுக்கம், மிகைப்படுத்தாமல் அப்படியே கூறுதல், மனப்பாடம் செய்தல், ஒப்பனை இல்லாத எளிமையான தோற்றம், அறிவுபூர்வமாகச் சிந்தித்தல், யூகங்களை நம்பாதிருத்தல், நாத்திகம், புரட்சிகரமானச் சிந்தனை, இருப்பதை அப்படியே பயன்படுத்துதல், வீட்டு உபயோகப்பொருட்கள், இயந்திரத்தனமானச் செயல் போன்ற பலன்கள் நூறுவிழுக்காடு நடைபெறும்.

ஐந்தாம் பாவகமாகிய துலா இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 12 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 12 ஐப் பயன்படுத்த வேண்டும். விதிஎண் 12 இன்படி

அந்தப் பாவகத்தைச் சிறிதுகூட இயங்கவிடாமல் முழுவதுமாக நசுக்கி விடும். அதன்படி இங்கு ஐந்தாம் பாவகக் காரகப் பலன்களாகிய இதயம், முதுகுப்பகுதி, பாலியல், ஹார்மோன்கள், புத்திர உற்பத்திக்கான உயிர் அணுக்கள், யூகம், மதிநுட்பம், குழந்தை, பொழுதுபோக்கு விசயங்கள், தன்னை அழகுபடுத்திக் கொள்ளுதல், உல்லாசம், விளையாட்டு, கலைகளில் ஆர்வம், உடலை வருத்திக்கொள்ளாமல் இருத்தல், சிற்றின்ப நாட்டம், காதல், கற்பனை, சூதாட்டம், மிகைபடுத்திய வர்ணனை போன்ற பலன்கள் நடைபெறுவதில் தடை ஏற்படும் அல்லது நடைபெறாது.

ஆறாம் பாவகமாகிய விருட்சிக இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 11 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 11 ஐ பயன்படுத்த வேண்டும். விதிஎண் 11 இன்படி அந்தப் பாவகத்தை ஊக்கம் அளிக்கும் விதமாகப் பலன்கள் அமையும், அதன்படி இங்கு ஆறாம் பாவகக் காரகப் பலன்களாகிய வயிறு, இரைப்பை, கல்லீரல், மருந்துக்குக் கட்டுப்படும் நோய்கள் வரக்கூடும், உணவு, உடை, உடல்உழைப்பு, ஒன்றுக்கு மேற்பட்ட சொத்துக்கள், போட்டி மற்றும் போட்டித் தேர்வுகளில் வெற்றி, மற்றவர்கள்மீது ஆதிக்கம் செலுத்தல், ஸ்பரிச சுகத்தை மறுத்தல், திருமணப் பந்தத்தினைத் தானே முறித்துக்கொள்ளுதல், திருமணத் தடை, பொதுமக்கள் தொடர்பில் இருந்து விலகி இருத்தல், போட்டி பொறாமையோடு எதிரிகளை உருவாக்கிக் கொள்ளுதல், வழக்கு, கடன் போன்ற பிரச்சினைகள், மாதச் சம்பளம் வாங்குதல், ஒழுங்காக வேலைக்குச் செல்லுதல், பேராசை, ஆணவம், தற்பெருமை, மற்றவர்கள் பொருள்களை அபகரித்தல், ஒன்றுக்கு மேற்பட்ட சொத்துக்கள்மூலம் வாடகை பெறுதல் போன்ற பலன்கள் நடைபெறும்.

ஏழாம் பாவகமாகிய தனுசு இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 10 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 10 ஐ பயன்படுத்த வேண்டும். விதிஎண் 10 இன் படி அந்த பாவகத்தை 70 விழுக்காடு வரை இயக்கிப் பின்னர் துண்டித்துவிடும். அதன்படி இங்கு ஏழாம்பாவகக் காரகப் பலன்களாகிய அடிவயிறு, உடலில் நடுப்பகுதி, சிறுநீரகம், கர்ப்பபை போன்ற அகம் சார்ந்த பலன்களில் சில பிரச்சினைகள் வரக்கூடும், சாதகருக்கு எதிரில் உள்ள நபர்கள், சாதகரை சந்திக்கும் நபர்கள், வாடிக்கையாளர்கள், வாழ்க்கைத் துணை, பொதுசனத் தொடர்பு, சமூகஅங்கீகாரம், இழந்த பொருட்களை மீட்பது, திருமண

வாழ்க்கை, பொதுமக்கள் தொடர்பு, வியாபாரத்தில் பங்குதாரர் போன்ற பலன்கள் 70 விழுக்காடு வரை நல்லமுறையில் செயல்படும். 30 விழுக்காடு வரை பாதிக்கவும் கூடும்.

எட்டாம் பாவகமாகிய மகர இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 9 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 9 ஐ பயன்படுத்த வேண்டும். விதிஎண் 9 இன்படி அந்தப் பாவகத்தை எந்தவித முயற்சியும் செய்யாமலே அந்தபாவகப் பலனைச் செய்யும். அதன்படி எட்டாம் பாவகக் காரகப் பலன்களாகிய ஆயுள், வலி, வேதனை, போராட்டம், ஏமாற்றப்படுதல், துரதிருஷ்டம், விபத்து, உடல் உறுப்புகள் பழுதுஅடைதல், அவமானம், கெட்டபெயர், எதையும் பெற முடியாமல் போவது, முயற்சிகள் வீணாவது, தற்கொலை சிந்தனை, எதிரிகள் தொல்லை, எந்தக் காரியத்திலும் தடைகள் போன்ற பலன்கள் நடைபெறக்கூடும்.

ஒன்பதாம் பாவகமாகிய கும்ப இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 8 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 8 ஐப் பயன்படுத்த வேண்டும். விதிஎண் 8 இன் படி அந்தப் பாவகத்தை எப்படிச் செயல்படுத்த வேண்டுமோ அப்படிச் செயல்படுத்தாமல், அந்தபாவகதிற்கு எதிரான நிலையில் செயல்படுத்திவிடும். அதன்படி ஒன்பதாம் பாவக காரகப் பலன்களாகிய இடுப்பு, மலத்துவாரம் போன்ற பகுதியில் நோய்களும், நேர்மையின்மை, தன்னம்பிக்கை இன்மை, தெய்வ நம்பிக்கை, கருணை, மனிதாபிமானம், நெறி ஒழுக்கம், ஆராய்ச்சித் திறன், உள்ளுணர்வு, உபாசனை, மதநம்பிக்கை, தானதர்மம், தியாக சிந்தனை, அதிர்ஷடம், ஆன்மிகம், நீண்டதூரப் பயணம், தீர்த்தயாத்திரை, வெளிநாடு, சட்டம் ஒழுங்கு, ஏற்றுமதி இறக்குமதி வணிகம் போன்ற பலன்கள் நல்லபலன்கள் கிடைக்காமல் தடையைக் கொடுப்பதோடு, இவற்றிக்கு எதிராகவும் செயல்படும்.

பத்தாம் பாவகமாகிய மீன இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 7 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 7 ஐ பயன்படுத்த வேண்டும். விதி 7 ஐப் பயன்படுத்தும்போது ஆய்வுக்குரிய பாவகம் ஒற்றைப்படையாக (1,3,5,7,9,11) வருகிறதா அல்லது

இரட்டைப்படையாக (2,4,6,8,10,12) வருகிறதா எனப் பார்க்க வேண்டும். ஒற்றைப்படையாக இருந்தால் ஆய்வுக்குரிய பாவகப் பலன் வளரும், இரட்டைப்படைப் பாவகமாக இருந்தால் ஆய்வுக்குரிய பாவகப் பலன் கட்டுப்படுத்தப்படும். இங்கு ஆய்வுக்குரிய பாவகம் 10 என்பது இரட்டைப்படையாக வருகிறது. அதன்படி சாதகரின் அந்தஸ்து, புகழ், பொதுவாழ்வில் கிடைக்கும் கௌவரம், பதவிஉயர்வு, நிர்வாகத் திறன், தலைமை தாங்குதல் போன்ற பலன்கள் கட்டுப்பாட்டுடன் இயங்கும்.

பதினொன்றாம் பாவகமாகிய மேச இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 6 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 6 ஐ பயன்படுத்த வேண்டும். விதிஎண் 6 இன் படி அந்தப் பாவகத்தை இயக்குவதில் சிரமங்களைக் கொடுத்தாலும் போட்டிபோட்டு அந்தப் பாவகப் பலனை இயக்கும். கட்டுப்பாடு என்பது இருக்கும். அதன்படி இங்கு 11 ஆம் பாவகக் காரகப் பலன்களாகிய முழங்கால், மூட்டு, உடலில் உள்ள வைட்டமின்கள் ஆகியவற்றில் சில குறைபாடுகள் ஏற்பட வாய்ப்பு உள்ளது. நிகர கையிருப்பு பணம், எதிலும் முதலீடு செய்யாமல் பணமாகக் கையில் வைத்து இருத்தல், வரவுக்குள்ளே செலவு செய்தல், கொடுத்த கடனை அசல் வட்டியுடன் திரும்பப் பெறுதல், ஆசை நிறைவேறிய பிறகு கிடைக்கும் நிறைவு போன்ற பலன்களைப் போராடிப் பெற வேண்டியது இருக்கும்.

பன்னிரெண்டாம் பாவகமாகிய இடப இராசியில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் இராகு நின்ற பாவகம் 5 ஆக வருகிறது. எனவே இங்கு விதிஎண் 5 ஐ பயன்படுத்த வேண்டும். விதிஎண் 5 இன்படி எந்த விதச் சிரமங்களையம் கொடுக்காமல் அந்தப் பாவகக் காரகப் பலன்களை செயல்படுத்தும். அதன்படி இங்கு 12 ஆம் பாவகக் காரகப் பலன்களாகிய பாதங்கள், உடலில் இருந்து வெளியேறும் கழிவு பொருட்கள், உடலில் இருந்து உறுப்புக்கள் அகற்றப்படுதல், சாதகருக்குத் தீமை செய்யும் பலன்களும் தங்கு தடையின்றி நடக்கக் கூடும். இரகசியம், சதி, இரகசிய எதிரிகள், புரியாதபுதிர்கள், உடல்உறுப்புக்கள் அல்லது மூளை செயல் இழந்து போகுதல், தாழ்வு மனப்பான்மை, தனிமையில் இருத்தல், மருத்துவமனையில் சிகிச்சை பெறுதல், பணத்தைச் சொத்துக்களில், முதலீடு செய்தல், ஒன்றுக்கு மேற்பட்ட தொழில், பணத்தை முதலீடு செய்தல் போன்ற பலன்கள் நடைபெறும்.

இவ்வாறு புத்தியை நடத்துகின்ற ஒரு கோள் ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்தாலும் பன்னிரு பாவகப் பலன்களையும் எவ்வாறு அளிக்கும் என ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட பன்னிரு விதிகள்மூலம் தெளிவாகப் பலன்களைப் பிரித்து கூறமுடியும்.

## பன்னிரு விதிகளை நான்கு விதிகளாகச் சுருக்குதல்

ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட 12 விதிகளை ஒருமித்த அளவுகொண்ட அல்லது சம விழுக்காடு கொண்ட விதிகளைத் திரிகோணத்தின் அடிப்படையில் 4 விதிகளாக மாற்றி அமைத்தால் பலன் நிர்ணயம் இன்னும் சுலபமாக ஆகிவிடும். அவை வருமாறு:

விதிஎண் 1:

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 1 ஆக இருந்தால், அந்தப் பாவகத்திற்கு எப்படி பலனைச் செய்ய வேண்டுமோ அப்படியே செய்யும் (சுயமுயற்சி). அதாவது 100 விழுக்காடு எனக் கொள்ளலாம்.

விதிஎண் 5:

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 5 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தின் காரகங்களுக்கு எந்த விதச் சிரமமும் தராமல் இயங்கும் ஆற்றல் பெற்று விடும் (அறிவாற்றால்). 100 விழுக்காடு எனக் கொள்ளலாம்.

விதிஎண் 9:

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 9 ஆக இருந்தால், அந்தப் பாவகப் பலனை எந்தவித முயற்சியும் செய்யாமலே அந்தப் பாவகப் பலனைச் செய்துவிடும். (தெய்வ அனுக்கிரகம்). 100 விழுக்காடு எனக் கொள்ளலாம்.

விதிஎண் 1, 5, 9 ஆகியவற்றில் ஒன்று போல் 100 விழுக்காடு பலன் என உள்ளன, **ஆகவே விதிஎண் 1, 5, 9 ஆகியவற்றை ஒன்றாக இணைத்து "நூறு விழுக்காடு" பலன் அளிக்கும் திரிகோணம் எனக் கொள்ளலாம்.**

விதிஎண் 2 :

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 2 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தைக் குறிப்பிட்ட

அளவுக்குமேல் வளரவிடாமல் (சராசரி அளவைவிடச் சற்றுக் கூடுதலாக மட்டும் வளர்த்து) அதற்கு முட்டுக்கட்டையாகச் செயல்படும்.

விதிளண் 6 :

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 6 ஆக இருந்தால், அந்தப் பாவகத்திற்கு அதிகமானச் சிரமங்களைக் கொடுத்தாலும், அதனை எப்படியாவது இயங்க வைத்துவிடும். கட்டுப்பாடு என்பது இருக்கும்.

விதிளண் 10 :

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 10 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தை 70 விழுக்காடு வரை இயக்கி, பின்னர் துண்டித்துவிடும்.

விதிளண் 2, 6, 10 ஆகியவற்றில் முட்டுக்கட்டை, போட்டி, 70 விழுக்காடு என முழுமை அடையாமல் பலன் நிர்ணயம் செய்ய வேண்டி இருப்பதால் **இவ்விதிளண் 2, 6, 10 ஆகியவற்றை ஒன்றாக இணைத்து "வரைமுறையுடன்" பலன்தரும் திரிகோணம் எனக் கொள்ளலாம்.**

விதிளண் 3 :

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 3 ஆக இருந்தால், அந்தப் பாவத்தை மிக அதிக அளவில், அதாவது பலமடங்கு வளர்த்துவிடும். மேலும் அந்தப் பாவகத்தை அடுத்த பரிமாணத்திற்கு எடுத்துச் செல்லும் ஆற்றல் ஏற்படும்.

விதிளண் 7 :

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 7 ஆக இருந்தால், ஒற்றைபடைப் பாவகமாக இருந்தால், அந்தப் பாவகப் பலனை வளர்க்கும் ஆற்றல் பெற்றுவிடும். மாறாக இரட்டை படை பாவகமாக இருந்தால் கட்டுப்படுத்தும். இங்கு

ஒற்றைப்படை, இரட்டைப்படை இலக்கினத்தில் இருந்து கணக்கிடப்பட வேண்டும்.

விதிஎண் 11 :

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 11 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தை முழுவதுமாக இயக்கும் ஆற்றல் உண்டு. ஊக்கம் அளிக்கும் எனக் கொள்ளலாம்.

விதிஎண் 3, 7, 11 ஆகியவற்றில் அடுத்த பரிணாமத்திற்கு எடுத்துச் செல்லும். ஒற்றைப்படையாக இருந்தால் வளர்க்கும், ஊக்கம் அளிக்கும் என உந்துசக்தியாக விளங்குவதால் **இவ்விதிஎண் 3, 7, 11 ஆகியவற்றை ஒன்றாக இணைத்து, "பன்மடங்கு" பலன் அளிக்கும் திரிகோணம் எனக் கொள்ளலாம்.**

விதிஎண் 4 :

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 4 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தைத் தொடர்ந்து இயங்கவிடாமல் தடுத்து நிறுத்திவிடும். அதாவது 30 விழுக்காடு வரை இயக்கி, பின்னர் துண்டித்துவிடும்.

விதிஎண் 8 :

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 8 ஆக இருந்தால், அந்தப் பாவகப் பலனை எப்படிச் செயல்படுத்த வேண்டுமோ அப்படிச் செயல்படுத்தாமல், அந்தப் பாவகத்திற்கு எதிரான நிலையில் செயல்படுத்திவிடும்.

விதிஎண் 12 :

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 12 ஆக இருந்தால், அந்தப் பாவகத்தைச் சிறிதுகூட இயங்கவிடாமல் முழுவதுமாக நசுக்கி விடும்.

விதிஎண் 4, 8, 12 ஆகியவற்றில் அடுத்த 70 விழுக்காடு தீமையாகவும், எதிர்மறையும், இயங்கவிடாமல் செய்வதுமாக இருப்பதால், **இம்மூன்று விதிகளையும் ஒன்றாக இணைத்து "இயங்காத" திரிகோணம் எனக் கொள்ளலாம்.**

புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகத்தில் இருந்து பன்னிரு விதிகளைத் திரிகோணத்தின் அடிப்படையில் சுருக்கி அமைத்தால் கீழ்கண்டவாறு அமையும்.

விதி 1, 5, 9 – 100 விழுக்காடு பலன் அளிக்கும்,

விதி 2, 6, 10 – வரைமுறைக்கு உட்பட்டுப் பலன் அளிக்கும்,

விதி 3, 7, 11 – பன்மடங்குப் பலன் அளிக்கும்,

விதி 4, 8, 12 – இயங்காது, என அமையும்.

நான்கு விதிகளின்படி எவ்வாறு பலன் அறிவது என உதாரணங்களைப் பாவகம்மூலம் பார்ப்போம்.

**இந்த உதாரண சாதகத்தில் புத்தியை நடத்தும் கோள் இராகு நின்ற பாவகம் 9 ஆகும்.**

வரைபடம்-4 : இங்கு 1, 5, 9 ஆகிய விதி எண்களை இணைத்தால், சாதகத்தில் 1, 5, 9 ஆகிய பாவகங்கள் 100 விழுக்காடு இயங்கும் என்று வரும்.




வரைபடம்-5 : இங்கு 2, 6, 10 ஆகிய விதி எண்களை இணைத்தால், சாதகத்தில் 4, 8, 12 ஆகிய பாவகங்கள் வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும் என்று வரும்.



வரைபடம்-6 : இங்கு 3, 7, 11 ஆகிய விதி எண்களை இணைத்தால், சாதகத்தில் 3, 7, 11 ஆகிய பாவகங்கள் பன்மடங்கு இயங்கும் என்று வரும்.




வரைபடம்-7 : இங்கு 4, 8, 12 ஆகிய விதி எண்களை இணைத்தால், சாதகத்தில் 2, 6, 10 ஆகிய பாவகங்கள் இயங்காது என்று வரும்.




மேலே உள்ள உதாரண சாதகத்தின்படி புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 9 ஆக இருக்கும் பொழுது பன்னிரு பாவகங்களின் இயக்கம் கீழ்கண்டவாறு அமையும்.

1, 5, 9 ஆம் பாவகங்கள் – 100 விழுக்காடு பலன் அளிக்கும்.

2, 6, 10 ஆம் பாவகங்கள் - இயங்காது

3, 7, 11 ஆம் பாவகங்கள் - பன்மடங்கு பலன் அளிக்கும்.

4, 8, 12 ஆம் பாவகஙகள் - ஒரு வரைமுறைக்கு உட்பட்டுப் பலன் அளிக்கும்.

**இந்த உதாரண சாதகத்தில் புத்தியை நடத்தும் கோளான சனி நின்ற பாவகம் 6 ஆகும். நான்கு வரைபடங்களையும் இணைத்துப் பார்த்தல்.**

**வரைபடம் 8, 9, 10, 11:**




| திரிகோண பாவங்கள் | பலன் அளிக்கும்விதம் | வரைபடம் எண் |
|---|---|---|
| 2, 6, 10 | 100 விழுக்காடு | 8 |
| 1, 5, 9 | வரைமுறைக்குட்பட்டு இயங்கும் | 9 |
| 4, 8, 12 | பன்மடங்கு இயங்கும் | 10 |
| 3, 7, 11 | இயங்காது | 11 |

**நான்கு திரிகோணங்களில் சிறப்பானத் திரிகோணம்**

1, 5, 9 இந்தத் திரிகோணம் இயங்கும்போது பொருளாதாரம் பாதிக்கப்படும்.

4, 8, 12 இந்தத் திரிகோணம் இயங்கும்போது சாதகரின் ஆரோக்கியம் பாதிக்கப்படும்.

2, 6, 10 இந்தத் திரிகோணம் இயங்கும்போது 1, 5, 9 ஆம் பாவகங்கள் ஒருவரைமுறைக்கு உட்பட்டு இயங்கும், ஆனால் இலக்கினத்திற்கு ஊக்கம் தரும் 11 பாவகப் பலனையும், இலக்கினத்தை அடுத்தப் பரிணாமத்திற்கு எடுத்துச் செல்லும் 3 ஆம் பாவகப் பலனையும், 7 ஆம் பாவகப் பலன்களான வாழ்க்கைத்துணை மற்றும் பிற மனிதர்களிடம் உள்ள தொடர்பு ஆகியவற்றைத் தடைசெய்யும். மேலும் இலக்கினத்தைக் கெடுக்கும் 4, 8, 12 ஆம் பாவகங்களைப் பன்மடங்கு செயல்படுத்தும்.

3, 7, 11 ஆம் பாவகங்கள் இயங்கும்போது சாதகருக்கு அகம்சார்ந்த பலன்கள் நல்லமுறையில் செயல்படும். அதேவேளையில் 2, 6, 10 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் ஒருவரைமுறைக்கு உட்பட்டு இயங்கும். சாதகருக்குத் தீமைதரும் திரிகோணமான 4, 8, 12 ஆம் பாவகங்கள் இயங்காது என்பது கூடுதல் சிறப்பு ஆகும்.

எனவே 3, 7, 11 திரிகோணமே சிறப்பானத் திரிகோணமாகும்.

## பன்னிரு பாவங்களை இரண்டு வகையாகச் சுருக்குதல்

1, 5, 9 மற்றும் 3, 7, 11 ஆகிய ஒற்றைப்படைப் பாவகங்களில் அதிக அளவில் அகம்சார்ந்த காரகப் பலன்கள் இருப்பதால் ஒற்றைப்படைப் பாவகங்களை "அகம்" எனவும், 2, 6, 10 மற்றும் 4, 8, 12 ஆகிய இரட்டைப்படைப் பாவகங்களில் அதிக அளவில் புறம்சார்ந்த காரகப் பலன்கள் இருப்பதால் இரட்டைப்படைப் பாவகங்களைப் "புறம்" எனவும் சுருக்கிக் கொண்டு சாதகங்களைச் சுலபமாக ஆராயலாம்.




இயற்கையாகவே, **அகம் புறத்தை எதிர்க்கும் ! புறம் அகத்தை எதிர்க்கும் ! என்பது பொதுவிதியாகும்.**

அகம் என்பது உடல் சுகத்தைப் பற்றிக் கூறுவது ஆகும். புறம் என்பது பண சுகத்தைப் பற்றிக் கூறுவது ஆகும்.

அகம் சார்ந்த பாவகங்களில் புத்தியை நடத்தக் கூடிய கோள் இருக்கக் கூடிய காலக்கட்டத்தில் அகம்சார்ந்த பலன்கள் நடைபெறும். புறம் சார்ந்த பாவகங்களில் புத்தியை நடத்தக் கூடிய கோள் இருக்கக் கூடிய காலக்கட்டத்தில் புறம்சார்ந்த பலன்கள் நடைபெறும்

அகம் தொடர்பான பலன்களும், புறம் தொடர்பான பலன்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

## அகம் (Sentiment)

1 அகச்சார்பு என்பது எதையும் உணர்வுப் பூர்வமாகச் சிந்தித்தல்
2 அனைவரிடமும் மனித நேயத்துடன் பழகுதல்
3 பொருளாதாரத்தை மற்றவரிடம் பகிர்ந்து கொள்ளுதல்
4 கௌரவத்தை அதிகமாக எதிர்ப்பார்த்தல்
5 பணத்திற்காகத் தனது கௌரவத்தை விட்டுக் கொடுக்காமை
6 பொதுப்பணிகளில் ஈடுபாடு
7 எதிலும் மற்றவரின் ஆலோசனையைக் கேட்டல்
8 அனைவரையும் அரவணைத்துச் செல்லுதல்
9 பொருளாதாரத்தை விடப் பெயர் மற்றும் புகழை விரும்புதல்
10 எளிதில் உணர்ச்சிகளுக்கு அடிமையாகுதல்
11 ஸ்பரிச சுகங்களை அனுபவித்தலில் அதிக ஆர்வம்
12 மரபுவழி சிந்தனைகளை விட்டு விலகாமல் இருத்தல்
13 தான்கொண்ட கொள்கையில் உறுதிப்பாடு
14 உடல்உழைப்பில் நாட்டமின்மை
15 ஊதாரித்தனம்
16 கேளிக்கை மற்றும் விருந்து உபசாரங்களில் நாட்டம்
17 எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனை இன்மை
18 ஆன்மிக விசயங்களில் அதிக நாட்டம்
19 யூகங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தல்
20 எதையும் கலை உணர்வோடு இரசித்தல்
21 உடலை எப்போதும் அழகுப்படுத்திக் கொள்வது
22 எதிலும் விழிப்புணர்வு இல்லாதிருத்தல்
23 எதிரிகள் இல்லாத நிலை
24 எளிதில் யாரையும் நம்புதல்
25 தான தருமச் சிந்தனைகள்
26 நோய்நொடி இல்லாத ஆரோக்கியநிலை
27 எதையும் வெளிப்படையாகச் செய்தல்
28 சிற்றின்பத்தில் அதிக விருப்பம்
29 பொருளாதாரத்தைவிட உடல் சுகங்களில் அதிக நாட்டம்
30 தனது நலம் விரும்பிகளிடம் ஆலோசனை கேட்டல்.
31 விட்டுக்கொடுத்தல்

**புறம் (Logic)**

1 புறச்சார்புடைய காரகங்கள் என்பது அறிவுப் பூர்வமாகச் சிந்தித்தல்
2 அனைவரிடமும் சுயநலத்துடன் பழகுதல்
3 பொருளாதாரத்தைத் தானே வைத்திருத்தல்
4 கௌரவத்தைக் விட பொருளாதாரத்தைக் கருத்தில் கொள்ளுதல்
5 பணத்திற்காகத் தனது கௌரவத்தை விட்டுக்கொடுத்தல்
6 பொதுப்பணிகளில் ஈடுபாடு இல்லாது இருத்தல்
7 எதிலும் மற்றவரின் ஆலோசனையைக் கேட்காமல் தானே முடிவெடுத்தல்
8 மற்றவர் உணர்வுகளைப் புரிந்துகொள்ளாமை
9 பொருளாதாரச் சிந்தனையே பிரதானம்
10 உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி வாழ்தல்
11 ஸ்பரிச சுகங்களில் நாட்டமின்மை
12 மரபுவழிச் சிந்தனைகளிலிருந்து புரட்சிகரமாகச் சிந்தனை செய்தல்
13 சூழ்நிலைக்கேற்பத் தன்னை மாற்றிக் கொள்ளுதல்
14 உடல் உழைப்பில் அதிக நாட்டம்
15 வீண் செலவுகளைக் குறைத்துக்கொண்டு பணத்தைச் சேமிப்பதில் நாட்டம்
16 கேளிக்கை மற்றும் விருந்து உபசாரங்களில் கலந்து கொள்ளாதிருத்தல்
17 எதையும் திட்டமிட்டுப் பயன்படுத்துதல்
18 ஆன்மிக விசயங்களில் நாட்டமின்மை
19 யூகங்களை அதிகம் நம்பாமல், தனது திறமையை கருத்தில் கொள்ளுதல்
20 ஒரு பொருளின் அழகை விட அதன் தரத்திற்கு முக்கியத்துவம் அளித்தல்
21 தன்னை அழகுப்படுத்திக் கொள்வதில் நாட்டமின்மை
22 போட்டி பொறாமையோடு பணம் சம்பாதிக்கும் நோக்கம்
23 எதிரிகளை வளர்த்துக் கொள்ளுதல்
24 எதிலும் வெளிப்படையாக இல்லாமல் இரகசியமாக இருத்தல்
25 பணத்திற்காக மட்டுமே மற்றவரிடம் பழகுதல்
26 தனது ஆரோக்கித்தை விட உழைப்பில் ஆர்வம்
27 எதையும் மறைமுகமாகச் செய்தல்
28 சிற்றின்பத்தில் ஆர்வமின்மை
29 உடல் சுகங்களை இழந்தாவது பொருளாதாரத்தைப் பெறுவதில் நாட்டம்
30 தனது நலம் விரும்பிகளைக் கண்டுகொள்ளாதிருத்தல்.
31 பிடிவாதம்.

புத்தியை நடத்தும் கோள் நின்றவீடு அகம் (ஒற்றைப்படையாக) இருப்பின் உடல் மனம் தொடர்பான பலன்கள் சாதகருக்குக் கிடைக்கும். அதேவேளையில் பொருளாதாரம் சார்ந்த பலன்கள் கிடைப்பது கடினமாக இருக்கும்.

புத்தியை நடத்தும் கோள் நின்ற வீடு புறம் (இரட்டைப்படையாக) இருப்பின் பொருளாதாரம் தொடர்பான பலன்கள் சாதகருக்குக் கிடைக்கும், அதேவேளையில் அகம்சார்ந்த பலன்கள் கிடைப்பது கடினமாக இருக்கும்.

வரைபடம்-12:

| 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|
| | | சனி சுக் | சூரி கேது |
| 3 | K.S.SUNDARA RAJAN 14-07-1972 18:24:00 Nagercoil,T.N. | | 8 செவ் புத |
| 2 | ஸ்ரீபதி பாவகம் 44-வருடம் 02-மாதம் 29-நாள் | | 9 சந் |
| 1 265.03.23லக் ராகு | 12 குரு | 11 | 10 |

ஸ்ரீபதி பாவகப்படி

| திரிகோணம் | கோள்கள் |
|---|---|
| 1,5,9 | ராகு சந் |
| 2,6,10 | சனி சுக் |
| 3,7,11 | சூரி கேது |
| 4,8,12 | செவ் புத குரு |
| சுக் திசை இருப்பு 16-வருடம் 08-மாதம் 09-நாள் | |

மேற்கண்ட சாதகத்தில் நான்கு திரிகோணங்களில் உள்ள கோள்களின் நிலை

1,5,9 ஆம் பாவகங்களில் : இராகு, சந்

2,6,10 ஆம் பாவகங்களில் : சனி, சுக்

3,7,11 ஆம் பாவகங்களில் : சூரி, கேது

4,8,12 ஆம் பாவகங்களில் : செ, புத, குரு

இவற்றில் 1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள கோள்களும், 3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களான இராகு, சந்திரன், சூரியன், கேது இவற்றின் புத்திகளில் அகம் தொடர்பான பலன்கள் நடைபெறும் என்றும்

2, 6, 10 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களும் 4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களான சனி, சுக்கிரன், செவ்வாய், புதன், குரு இவற்றின் புத்திகளில் புறம் தொடர்பான பலன்கள் நடைபெறும் என்றும் சுலபமாகப் பிரித்துப் பலன்கள் கூறலாம்.

## பன்னரு பாவகப் பலன்கள் சோதிட விதிப்படி பிரித்தல்

ஒரு பாவகத்தின் மூன்றாம் பாவகம் என்பது அந்தப் பாவகத்தின் பரிணாமத்தைக் குறிக்கும். அந்தவகையில் பன்னிரு பாவகத்தையும் அகம் சார்ந்த பலன்கள் மற்றும் புறம்சார்ந்த பலன்கள் எனப் பிரித்துப் பார்க்கலாம்.

### அட்டவனை 1: அகம் சார்ந்த பாவகங்களின் பரிணாமப் பலன்கள்

| ஒரு குறிபிட்ட பாவகம் | | குறிப்பிட்ட பாவகத்தின் பரிணாமப் பாவகம் | |
|---|---|---|---|
| பாவகம் | பலன்கள் | பாவகம் | பலன்கள் |
| 1 | சாதகர் | 3 | தம்பி அல்லது தங்கை |
| 3 | வீரியம் (பருவ வயது) | 5 | காதல் |
| 5 | காதல் | 7 | திருமணம் |
| 7 | முதல் மனைவி | 9 | இரண்டாவது மனைவி (மனைவியின் தங்கை) |
| 9 | தேடுதல் | 11 | தேடியது கிடைத்தல் (திருப்தி) |
| 11 | நோய் எதிர்ப்புத் திறன் | 1 | சாதகரின் ஆரோக்கியம் |

### அட்டவனை 2 : புறம் சார்ந்த பாவகங்களின் பரிணாமப் பலன்கள்

| ஒரு குறிபிட்ட பாவகம் | | குறிப்பிட்ட பாவகத்தின் பரிணாமப் பாவகம் | |
|---|---|---|---|
| பாவகம் | பலன்கள் | பாவகம் | பலன்கள் |
| 2 | கையிருப்பு பணம் | 4 | அசையும் அசையாச் சொத்து |
| 4 | சொத்து (ஒருமை) | 6 | ஒன்றுக்கு மேற்பட்ட சொத்துக்கள் |
| 6 | ஒரு - கடன், நோய், எதிரி | 8 | ஒன்றுக்கு மேற்பட்ட கடன், நோய், எதிரி |
| 8 | அவமானம், தோல்வி | 10 | அவமானத்திற்குப் பின் வெகுமானம், வெற்றி |
| 10 | முதல்தொழில், தலைமையகம் | 12 | ஒன்றுக்கு மேற்பட்ட தொழில், கிளைகள் |
| 12 | முதலீடுகள் | 2 | மீண்டும் பணமாக மாறும் |

**அட்டவனை 3: ஒரு பாவகத்தின் செயல்பாடுகளை அதன் 12 ஆம் பாவகம் மறுக்கும்.**

| ஒரு குறிபிட்ட பாவகம் | | குறிப்பிட்ட பாவகத்தின் 12 ஆம் பாவகம் | |
|---|---|---|---|
| பாவகம் | பலன்கள் | பாவகம் | பலன்கள் |
| 12 | தோல்வி | 11 | வெற்றி |
| | முதலீடு | | முதலீடுகளை எடுத்தல் |
| | இரகசியம் | | வெளிப்படை |
| | காணாமல் போகுதல் | | கிடைத்தல் |
| 11 | ஆசைகள் நிறைவேறிய திருப்தி | 10 | நிறைவேறாத ஆசைகள் திருப்தி இல்லை |
| 10 | தொழில் வளர்சிசி | 9 | தொழில் வளர்ச்சி இல்லை |
| | பொறுப்பு, நிர்வாகத் திறன் | | பொறுப்பு இல்லை, நிர்வாகத் திறன் இல்லை |
| 9 | இறையருள் | 8 | இறையருள் இல்லை |
| | நம்பிக்கை | | நம்பிக்கை இல்லை |
| | தெய்வ அனுக்கிரகம் | | தெய்வ அனுக்கிரகம் இல்லை |
| | அதிர்ஷ்டம் | | அதிர்ஷ்டம் இல்லை |
| | நீண்டதுாரப் பயணம் | | நீண்டதுாரப் பயணத் தடை |
| 8 | எதிர்பாராத நிகழ்ச்சிகள் | 7 | நேரடியான நிகழ்ச்சிகள் |
| | சட்டத்திற்குப் புறம்பானச் செயல் | | சட்டத்திற்கு உட்பட்ட செயல் |
| | திருடு போகுதல் | | திருடுபோன பொருள் மீண்டும் கிடைத்தல் |
| | இம்சை மரணம் | | திடீர் மரணம் |
| 7 | சமமான நபர்கள் | 6 | சமமற்ற நபர்கள் |
| | கணவன் மனைவி | | முதலாளி தொழிலாளி |
| | நண்பர்கள் | | எதிரிகள் |
| | வாடிக்கையாளர்கள் | | வேலையாட்கள் |
| 6 | உடல்உழைப்பு | 5 | உடல் சுகம் |
| | நோய் | | நோயின்மை |
| | கடன் | | கடனில்லை, கிடைக்காது |
| | வழக்கு | | வழக்கு இல்லை |
| | ஆணவம் பிடிவாதம் | | விட்டுக்கொடுத்தல் |

| ஒரு குறிபிட்ட பாவகம் | | குறிப்பிட்ட பாவகத்தின் 12 ஆம் பாவகம் | |
|---|---|---|---|
| பாவகம் | பலன்கள் | பாவகம் | பலன்கள் |
| 5 | காதல் | 4 | காதல் வராது |
| | வர்ணனை | | வர்ணனை இருக்காது |
| | அழகுபடுத்திக் கொள்ளுதல் | | அழகுபடுத்துதல் இருக்காது |
| | இயற்கை | | செயற்கை |
| | பொழுதுபோக்கு | | பொழுதுபோக்குகளில் விருப்பம் இருக்காது |
| 4 | சொத்து வாங்குதல் | | சொத்து விற்பனை |
| | உள்ளூர் | | வெளியூர் |
| | நிலையானது | | நிலையற்றது |
| 3 | சொத்துப்பத்திரங்கள் | 2 | பத்திரங்கள் இல்லாதது தங்கம், வெள்ளி |
| | பதிவுகள் | | பதிவுகள் இல்லாதது - வாய்மொழி |
| 2 | பணம் | 1 | பணத்தை இழந்து கௌரவத்தைப் பெறுதல் |
| 1 | தோற்றம் | 12 | மறைவு |

## பன்னிரு பாவங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, ஏற்படும் பொது பலன்கள்

### திருமணம்

திருமணம் என்பது அகம்சார்ந்த நிகழ்வு ஆகும், எனவே இங்குப் பொருள் சார்ந்த சிந்தனை இன்றி ஆரோக்கியம், அழகு, இயற்கை, இரசனை, மகிழ்ச்சி, பிறருடன் அனுசரித்துச் செல்லுதல், மற்றவரைப் புரிந்துக்கொள்ளுதல், விட்டுக்கொடுத்தல், காதல், அன்பு செலுத்துல், அதிர்ஷ்டம், தெய்வ அனுக்கிரகம், திருப்தி போன்ற பலன்கள் ஒற்றைப்படையில் இருந்து புத்திகள் நடைபெறும்போது நடைபெறும். எனவே இந்தக் காலகட்டத்தில் திருமணம் செய்து கொள்ளுதல் உத்தமம் ஆகும். இதனையே முன்னோர்கள் ஒற்றைப்படையில் திருமணம் செய்து கொள்ள வேண்டும் எனக் கூறியுள்ளனர். ஆனால் இது தவறாக ஒற்றைப்படை வயது என எடுத்துக்கொள்ளத் தொடங்கிவிட்டோம். ஆக திருமணத்தின்போது புத்தியை நடத்தும் கோள் ஒற்றைப்படைப் பாவகங்களான 1, 3, 5, 7, 9, 11 இல் இருக்க வேண்டும்.

சில சாதகங்களில் ஒற்றைப்படையில் கோள்கள் இல்லாமலோ அல்லது ஒற்றைப்படையில் உள்ள கோள்களின் புத்தி வருவதற்குப் பல ஆண்டுகள் ஆகிவிடும். இந்த நேரத்தில் திருமணத்திற்கு அதிக பாதிப்பைத் தராதப் பாவகங்களான 2, 4, 10 இல் இருந்து புத்தியை நடத்தும்போதும் திருமணம் செய்து கொள்ளலாம். ஆனால் வரக்கூடிய சாதகத்தில் புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் ஒற்றைப்படையாக இருப்பது அவசியம் ஆகும்.

எக்காரணம் கொண்டும் புத்தியை நடத்தும் கோள் 6, 8, 12 இல் இருக்கும்போது திருமணம் செய்யக் கூடாது. இவை திருமணத்திற்குத் தேவையானப் புரிதல்களை மணமக்களிடம் தராது, மேலும் பிரச்சினைகளுக்கு வழிவகுக்கும். அதாவது புத்தியை நடத்தக் கூடிய கோள் 6 ஆம் பாவகத்தில் இருந்தால் சாதகர் தனது வாழ்க்கை துணையிடம் ஆதிக்கம், வன்மம், அடக்குதல், ஸ்பரிச சுகங்களைத் தானே மறுத்தல், திருமண பந்தத்தில் இருந்து விலகிச் செல்லுதல், திருமண உறவினை முறித்துக்கொள்ளுதல், திருமணத் தடை, பிரம்மசாரியம் போன்ற பலன்கள் எற்படும். புத்தியை நடத்தக்கூடிய கோள் 12 இல் இருக்கும்போது

வாழ்க்கைத் துணையின் ஆதிக்கம், வாழ்க்கைத் துணை திருமணப் பந்தத்தை முறித்துக்கொள்ளுதல், விலகிச் செல்லுதல், வாழ்க்கைத் துணைத் தன் ஸ்பரிச சுகத்தை மறுத்தல் போன்ற பலன்கள் நடைபெறும். புத்தியை நடத்த கூடியக் கோள் 8 இல் இருந்தால் சாதகர் ஏமாற்றம் அடையும் காலம் ஆகும். ஆதலால் தனக்கு ஒத்துவராத குணம்கொண்ட வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்தல், நிச்சயதார்த்தம் மட்டும் நடந்து திருமணம் நடைபெறாமல் போகுதல், வாழ்க்கைத் துணை தவறான சுயவிபரங்களை அல்லது போலியான சாதகத்தைக் கொடுத்து அதன்மூலம் சாதகர் ஏமாற்றப்படுதல் போன்ற துக்கமானப் பலன்கள் நடைபெறும். ஆதலால் புத்தியை நடத்தக் கூடிய கோள் 6, 8, 12 ஆகிய பாவகங்களில் இருக்கும்போது திருமணம் செய்வதைத் தவிர்க்க வேண்டும்.

## வேலைவாய்ப்பு

புதிய வேலைவாய்ப்பு, நேர்க்காணல், போட்டித் தேர்வுமூலம் கிடைக்கும் வேலை, பணி நிரந்தரம் ஆகுதல், ஒரு வேலையில் இருந்து அடுத்த வேலைக்குத் தாவுதல், சம்பளஉயர்வு, பதவிஉயர்வு போன்றவை புத்தியை நடத்தும் கோள் 2, 4, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது சாதகமாக இருக்கும்.

புத்தியை நடத்தும் கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது பெரிய முன்னேற்றம் இல்லாவிட்டாலும் இருக்கக் கூடிய வேலையில் அப்படியே தடையில்லாமல் தொடரலாம்.

புத்தியை நடத்தும்கோள் 8, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது புதுவேலை கிடைத்தாலும் மனதிற்குப் பிடிக்காமல் இருக்கும், நிரந்தர வேலையாக இருக்காது, உடல் மற்றும் மனத்தைப் பாதிக்கக் கூடிய அல்லது கடினமான வேலையாக இருக்கும். செய்துவரும் வேலையில் பதவி குறைப்பு, இடைக்கால பணிநீக்கம், சம்பளம் குறைப்பு போன்ற பலன்கள் நடக்கும். ஆனால் சாதகர் செய்துவரும் வேலை போகாது. காரணம் 8 மற்றும் 12 ஆம் பாவகம் என்பது, 10 ஆம் பாவக நித்திய பணிக்கு 3 மற்றும் 11 ஆம் பாவகமாக வரும். அதாவது 10 ஆம் பாவகம் பன்மடங்கு இயங்கும் என்பதால் நித்திய பணி தடைபடாது. இந்தக் காலக்கட்டத்தில் வேலை செய்து பழகிய இடத்தில் தொடருவது உத்தமம் ஆகும். 8 மற்றும் 12 ஆம் பாவகப் புத்தியில் புதிய புரியாத சூழ்நிலையில் வேலை செய்வது

மிகக் கடினமாக இருக்கும். 8 மற்றும் 12 ஆம் பாவகப் புத்திகளில் வேலை தானாகப் போகாது, அதே நேரம் சாதகர் அந்த வேலையை இராஜினாமா செய்யக் கூடாது.

புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது, புது வேலையும் கிடைக்காது, மேலும் இருக்கக் கூடிய வேலையும் இழக்கக் கூடிய சூழ்நிலை இங்கு ஏற்படும். செய்துவரும் வேலையைத் தக்க வைத்துக்கொள்ளப் போராட வேண்டியது வரும்.

**சுயதொழில் செய்வோரின் வருமானம்**

சுயதொழில் செய்வோருக்குப் புத்தியை நடத்தக் கூடிய கோள் 2, 4, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது, அளவிற்கு அதிகமான வருமானம் கிடைக்கும். புதிய முயற்சிகள், தொழிலில் முதலீடு இந்தப் புத்திகளில் செய்யலாம்.

சுயதொழில் செய்வோருக்குப் புத்தியை நடத்தக் கூடிய கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது, குடும்பச் செலவிற்குப் போதுமான அளவு வருமானம் வந்துகொண்டு இருக்கும். சுபசெலவுகள் அதிகமாக இருக்கக் கூடிய காலம் என்பதால் தொழிலில் முதலீடு செய்ய இயலாது தொழில் முன்னேற்றம் அதிகம் இராது.

சுயதொழில் செய்வோருக்குப் புத்தியை நடத்தக் கூடிய கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது, வருமானம் அதிகம் இருக்காது. தொழிலை வளர்ச்சிப் பாதையில் இட்டுச் செல்ல பிறரிடம் இருந்து தேவையான கடனும் இந்தக் காலக் கட்டத்தில் கிடைக்காது. காரணம் 1, 5, 9 என்பது 6 ஆம் பாவகக் கடனுக்கு 4, 8, 12 ஆம் பாவகமாக வரும். எனவே கடன் கிடைக்காமல் தொழில் தடைபட கூடிய நிலை ஏற்படும்.

சுயதொழில் செய்வோருக்குப் புத்தியை நடத்தக் கூடிய கோள் 12 இல் இருக்கும்போது தொழிலை அடுத்தநிலைக்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்கிற எண்ணம் தோன்றும். அப்போது தொழில் முதலீடுகளை அதிகம் செய்ய நேரிடும். ஆனால் கிணற்றில் போட்ட கல்போல் முதலீடுகள் அப்படியே இருக்கும். ஆதலால் போட்ட முதலீடுகளுக்கு உடனே பிரதிபலன் எதிர்ப்பார்க்கக் கூடாது.

சுயதொழில் செய்வோருக்குப் புத்தியை நடத்தக் கூடிய கோள் 8 ஆம் பாவகத்தில் இருக்கும்போது தவறான முடிவுகள் எடுக்க நேரிடும். அல்லது பிறரிடம் ஏமாந்து போகுதல், பெருத்த நட்டம் ஏற்படும் காலம் ஆகும். எனவே சுயதொழில் செய்வோர் மிகுந்த கவனத்துடன் இருக்க வேண்டிய காலமாகும்.

## நிலம், வீடு வாங்க

நிலம், வீடு வாங்க மற்றும் சுயமாக வீடு கட்டுவது நாலாம் பாவகத்திற்குச் சாதகமான புத்திகளில் செய்வது உத்தமம். அதாவது புத்தியை நடத்தக் கூடிய கோள் இரட்டைப்படையில் இருக்கும்போது செய்யலாம். அதாவது புத்தியை நடத்தக் கூடிய கோள் 4, 8, 12 அல்லது 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது அசையா சொத்துச் சேர்க்கலாம்.

புத்தியை நடத்தக் கூடிய கோள் 4 ஆம் பாவகத்திற்கு அடுத்த திரிகோணமான 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது சிறிய அளவில் மாற்றங்கள், மராமத்துப் பணிகள் அல்லது ஓர் அறை கட்டுவது போன்ற சிறிய வேலைகள் மட்டும் செய்யலாம். அதாவது கடன் எதிர்பார்க்காமல் பணம் கையில் இருந்தால் வீடு வாங்கலாம். காரணம் புத்தியை நடத்தக் கூடிய கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருந்தால் 6 ஆம் பாவகம் இயங்காது, அதனால் கடன் கிடைக்காது.

புத்தியை நடத்தக் கூடிய கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது நிலம், வீடு வாங்கக் கூடாது. காரணம் 3, 7, 11 ஆம் பாவகம் என்பது 4 ஆம் பாவகத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகமாக வரும். அதனால் நாலாம்பாவகம் பாதிக்கும். சொத்துச் சேர்க்கக் கூடாத காலத்தில் சொத்து சேர்த்தால் அந்தச் சொத்து நிலைக்காது. மேலும் 3, 7, 11 ஆம் பாவகம் இயக்கத்தில் சொத்து வாங்கினால் வரக்கூடிய வருமானத்தில் தடை ஏற்படும். அதாவது பிறரிடம் வேலை செய்து வந்தால் வேலை போகும் அல்லது சுயவருமானம் என்றால் வருமானம் தடைபடும். இதனை எதிர்விளைவுகள் என்று கூறலாம். ஒவ்வொரு செயலிற்கும் ஒவ்வொரு விளைவும் எதிர்விளைவும் ஏற்படும்.

## சொத்து விற்பனை

புத்தியை நடத்தும் கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது எதிர்பார்க்கும் விலைக்குச் சொத்து விலை போகும். அதாவது சொத்து என்பது 4 ஆம் பாவகக் காரகம் ஆகும். நாலாம் பாவகம் பலவீனப்படும் போது நாலாம் பாவகப் பலன் விலகும். இதன்படி 4 ஆம் பாவகத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக 3, 7, 11 ஆம் பாவகங்கள் வரும். அப்போது சொத்தினை விற்க முடியும் என்பதாகும்.

நாலாம் பாவகத்திற்குச் சாதகமான புத்திகளில், அதாவது 4, 8, 12 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது நாலாம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும். மேலும் புத்தியை நடத்தும் கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 4 ஆம் பாவகம் பன்மடங்கு இயங்கும். எனவே இந்தக் காலக் கட்டத்தில் சொத்துச் சேர்க்க வேண்டிய காலம் ஆகும். ஆதலால் விற்பனை செய்ய இயலாது. சொத்து, சேர்க்க வேண்டிய காலத்தில் சொத்தினை விற்பனை செய்தால் அந்தப் பணம் பயன் இல்லாமல் வீணாகப் போகும் அல்லது சாதகரின் வருமானமும் தடைபடும். இது எதிர்விளைவு ஆகும்.

## நோய்

பொதுவாக அகம் ஆரோக்கியம், புறம் நோய் என்று எடுத்துக்கொள்ளலாம். அதாவது அகம் தொடர்பான பாவகங்களில் புத்தியை நடத்தக் கூடிய கோள் இருந்தால் நோய்பாதிப்பு ஏற்படாது, புறம் தொடர்பான பாவகங்களில் இருந்தால் நோய் ஏற்டும்.

இலக்கினத்தை அதிகம் பாதிக்காத 2, 6, 10 ஆம் பாவங்களில் புத்தியை நடத்தும் கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது உணவுப் பழக்க வழக்கங்களால் வயிறு தொடர்பான செரிமான கோளாறு போன்ற நோய்கள் வரக்கூடும். அதாவது வெளியில் இருந்து உட்கொள்ளும் உணவு மூலமே இந்தப் புத்திகளில் நோய்கள் வரக்கூடும். இந்தப் புத்திகளில் வரக்கூடிய நோய்களானது மருந்துக்குக் கட்டுப்படக்கூடிய அளவிலேயே இருக்கும். இயற்கை மருத்துவம்மூலம் இந்நோய்களைக் குணப்படுத்த முடியும்.

இலக்கினத்தை அதிகம் பாதிக்கக்கூடிய பாகங்களான கோள் 4, 8, 12 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தக் கூடிய கோள்கள் இருக்கும்போது இதயத் துடிப்பு காரணமாக வரக்கூடிய இரத்தஓட்டம், நரம்புமண்டலத் துண்டிப்பு, உறுப்புகள் செயலிழந்து போகுதல், புற்றுநோய், அவசர அறுவைச் சிகிச்சை போன்ற கடினமான நோய்கள் வரக்கூடும்.

புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது பொதுவாக எந்த நோயும் வராது அப்படியே வந்தாலும் பாரம்பரிய நோய்கள் வரக்கூடும். புதிய நோய்கள் வர வாய்ப்பு இல்லை என்றே கூறலாம்.

புத்தியை நடத்தும் கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது நோய்கள் வராது, எற்கனவே வந்த நோயும் குணமாகும். அதாவது புத்தியை நடத்த கூடிய கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 11 ஆம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும். அதனால் 11 ஆம் பாவகக் காரகத்துவ நோய் எதிர்ப்புத் திறன் அதிக அளவில் செயல்படும்.

## கடன் கிடைக்கும் காலம்

புத்தியை நடத்தும் கோள் இரட்டைப்படையில் இருக்கும்போது பொதுவாக பிறரிடம் இருந்து கடன் கிடைக்கும். அதாவது கடன் என்பது 6 ஆம் பாவகக் காரகம் ஆகும். அதாவது புத்தியை நடத்தக் கூடிய கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 6 ஆம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும். புத்தியை நடத்தும் கோள் 4, 8, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 6 ஆம் பாவகத்தைப் பன்மடங்கு இயங்கும்.

புத்தியை நடத்தும் கோள் ஒற்றைப்படையில் இருக்கும்போது, அதுவும் முக்கியமாகப் புத்தியை நடத்தக் கூடிய கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது கடன் கிடைக்காது. காரணம் 1, 5, 9 ஆம் பாவகங்கள் என்பது 6 ஆம் பாவகத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக வந்து 6 ஆம் பாவகக் காரகம் பாதிக்கப்படும், கடன் கிடைக்காது.

### ஆரோக்கியம்

புத்தியை நடத்தும் கோள் ஒற்றைப்படையில் இருக்கும்போது ஆரோக்கியம் நன்றாக இருக்கும்.

புத்தியை நடத்தும் கோள் இரட்டைப்படையில் இருக்கும்போது ஆரோக்கியக் கேடு ஏற்படும்.

### பணம் வரும் காலம்

பணவரவு என்பது சுயதொழில் செய்வோருக்கும் அல்லது பிறரிடம் வேலை செய்து அதன்மூலம் வரும் சம்பளம் என்பது 2 ஆம் பாவகக் காரகம் ஆகும். எனவே இரண்டாம் பாவகத்திற்குச் சாதகமான இரட்டைப்படைப் பாவகங்களின் புத்தியில் பணம் வரும், ஒற்றைப்படைப் பாவகங்களின் புத்தியில் பணம் வரத்துக் குறைவாக இருக்கும்.

புத்தியை நடத்த கூடிய கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது சாதகருக்கு அதிக சிரமங்களைக் கொடுக்காமல் சுலபமாகப் பணம் வரும்.

புத்தியை நடத்த கூடிய கோள் 4, 8, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது அதிக பணம் வரும். ஆனால் குறுக்குவழியில் அல்லது சாதகரின் மனம் மற்றும் உடலை அதிகம் வருத்தி அதன்மூலம் வரக்கூடும்.

புத்தியை நடத்தும் கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது தேவைக்குத் தகுந்த அளவு மட்டுமே பணம் வரும்.

புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது பணம் வராது அல்லது மிகக் குறைவாக வரும்.

### காதல்

காதல் என்பது 5 ஆம் பாவகக் காரகம் ஆகும். 5 ஆம் பாவகத்திற்குச் சாதகமான காலம் என்பது ஒற்றைப்படைப் புத்திகள் ஆகும். அதன்படி புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 5 ஆம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும். அதேபோல் புத்தியை நடத்தும் கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 5

ஆம் பாவகச் செயல் பன்மடங்கு நடக்கும். அதனால் ஒற்றைப்படைப் புத்திகள் காதலுக்குச் சாதகமான காலம் ஆகும்.

5 ஆம் பாவகத்திற்குப் பாதகமான காலம் என்பது 5 ஆம் பாவகத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக வரக்கூடிய 4, 8, 12 ஆம் பாவகங்களில் இருந்து ஒரு கோள் தனது புத்தியை நடத்தும்போது காதல் வராது அல்லது காதல்முறிவு ஏற்படும்.

புத்தியை நடத்தக் கூடிய கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது, 5 ஆம் பாவகத்திற்குச் சாதகமாகவும் இருக்காது, பாதகமாகவும் இருக்காது. சாதகர் பணப் பெருக்கத்தினைப் பிரதானமாகக் கொண்டு இயங்குவார்.

## புதியகலைகள் கற்க

கலைகள் என்பது 5 ஆம் பாவகக் காரகம் ஆகும். எனவே புதிய கலைகள் 5 ஆம் பாவகத்திற்குச் சாதகமான புத்திகளில் கற்கலாம். 5 ஆம் பாவகத்திற்குச் சாதகமானப் பாவகங்கள் என்பது அனைத்து ஒற்றைப்படைகள் ஆகும். எனவே புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 அல்லது 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது புதியகலைகள் கற்க சாதகமான காலம் ஆகும்.

5 ஆம் பாவகத்திற்குப் பாதகமான காலம் என்பது 5 ஆம் பாவகத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக வரக்கூடிய 4, 8, 12 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருந்தால் அந்த காலகட்டத்தில் புதிய கலைகள் கற்க இயலாது.

2, 6, 10 ஆம் பாவகங்களின் புத்தியில் புதியகலைகள் கற்க வேண்டும் என்கிற எண்ணம் சாதகருக்குத் தோன்றாது.

## எதிரிகள்

எதிரிகள் இரண்டு வகையில் உருவாகின்றனர். அதாவது சாதகரின் ஆதிக்கத்தினால் உருவாகும் எதிரி மற்றும் பிறர் சாதகர் மீது செலுத்தும் ஆதிக்கத்தினால் உருவாகும் எதிரிகள். சாதகர் ஆதிக்கம் என்பது 6 ஆம் பாவகமும் பிறர் செலுத்தும் ஆதிக்கம் என்பது 12 ஆம் பாவகமும் ஆகும்.

புத்தியை நடத்தக் கூடிய கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது சாதகரின் ஆதிக்கத்தினால் எதிரிகள் உருவாக நேரிடும்.

புத்தியை நடத்தக் கூடிய கோள் 4, 8, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது பிறர் சாதகர் மீது செலுத்தும் ஆதிக்கத்தினால் எதிரிகள் ஆவர்.

புத்தியை நடத்தக் கூடிய கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது சாதகர் பிறர் மீது அன்பு செலுத்துவார். அதனால் பகை ஏற்படாது.

புத்தியை நடத்தக் கூடிய கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது பிறர் சாதகர் மீது அன்பு செலுத்துவார்கள். அதனால் பகை ஏற்படாது.

## மரணபயம், அவமானம்

மரணப்பயம் என்பது 8 ஆம் பாவகக் காரகம் ஆகும். 8 ஆம் பாவகத்தை ஊக்கப்படுத்தும் இரட்டைப்படைப் புத்திகளில் மரணப்பயம் இருக்கும். அதாவது புத்தியை நடத்தும் கோள் 4, 8, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போதும், புத்தியை நடக்கும் கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போதும் மரணபயமும், ஒருவிதப் பதட்டமும் இருந்துகொண்டே இருக்கும்.

8 ஆம் பாவகம் தனது ஸ்தானத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகங்கள் இயங்கும்போது பலவீனப்படும். அதாவது 8 ஆம் பாவகத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக 3, 7, 11 ஆம் பாவகங்கள் வரும். எனவே 3, 7, 11 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது சாதகர் மரணப்பயம் ஏதும் இன்றி மனோதிடத்துடன் தைரியமாக இருப்பார். அதேபோல் புத்தியை நடத்தக் கூடிய கோள் 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது இலக்கினத்தைக் கெடுக்கக் கூடிய காரகப் பலன்களான அவமானம் உள்ளிட்டவை ஏற்படாது.

## ஆய்வுக் கல்விக்குச் சாதகமான காலம்

ஆய்வுக் கல்வி என்பது 9 ஆம் பாவகக் காரகம் ஆகும். எனவே 9 ஆம் பாவகத்திற்குச் சாதகமான ஒற்றைப்படைப் புத்திகள் சாதகமானதாகும்.

அதாவது புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 அல்லது 3, 7, 11 ஆம் பாவகங்களில் இருக்கும்போது ஆய்வுக் கல்விக்குச் சாதகமான காலம் ஆகும்.

9 ஆம் பாவகத்திற்குப் பாதகமான காலம் என்பது 9 ஆம் பாவத்திற்கு 4, 8, 12 ஆம் பாவங்களாக வரும் 4, 8, 12 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது ஆய்வுக் கல்விக்குத் தடை ஏற்படும்.

9 ஆம் பாவகத்திற்கு 2, 6, 10 ஆம் பாவகங்களாக வரும் இலக்கினத்திற்கு 2, 6, 10 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கக்கூடிய காலத்தில் ஆய்வுக் கல்வியைச் செய்வதில் சிரமம் ஏற்படும்.

## செலவுகள்

செலவுகள் என்பது 2 ஆம் பாவகப் பணத்தைப் பலவீனப்படுத்துவதாகும். 2 ஆம் பாவகத்தை அதனுடைய 4, 8, 12 ஆம் பாவகங்கள் பலவீனப்படுத்தும். அதன்படி 2 ஆம் பாவகத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக 1, 5, 9 ஆம் பாவகங்கள் வரும். எனவே 1, 5, 9 ஆம் பாவகங்கள் வரும். 1, 5, 9 ஆம் பாவகங்கள் இலக்கினம் என்னும் சாதகரைப் பாதிக்காத பாவகங்களாக வருவதால் புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது வரக்கூடிய செலவுகள் சுபசெலவுகள் என எடுத்துக்கொள்ளலாம்.

புத்தியை நடத்தும் கோள் 8 மற்றும் 12 இல் இருக்கும்போது எதிர்பாராத அசுப செலவுகள் ஏற்படும். காரணம் 8 மற்றும் 12 ஆம் பாவகங்கள் என்பது இலக்கினம் என்னும் சாதகரைப் பாதிக்கும்.

## வெளிநாட்டு வேலை மற்றும் வெளிநாட்டில் படிப்பு

வெளிநாடு என்பதினை மூன்றுவிதத்தில் எடுக்க வேண்டும். பன்னிரு பாவகத்தில் வெளிநாடு என்றால் 9 ஆம் பாவகமே ஆகும். அடுத்து உள்ளூர், தாயகம், சொந்தஊர் என்பது 4 ஆம் பாவகக் காரகம் ஆகும். உள்ளூரில் இல்லை என்பதினை மூன்றாம் பாவகம் குறிக்கும். எனவே 3 ஆம் பாவகத்தையும் வெளிநாட்டுப் பயணத்திற்கு எடுத்துக்கொள்ளலாம். அடுத்து ஓர் இடத்தில் இல்லாமல் போகுதல், நாடு கடத்தப்படுதல் என்பது

12 ஆம் பாவகக் காரகம் ஆகும். இதனையும் வெளிநாட்டுக்குச் செல்வது என்று எடுத்துக்கொள்ளலாம். ஆக 3, 9, 12 ஆம் பாவகங்களை வெளிநாட்டிற்குச் செல்ல உதவும் பாவகங்கள் என்று கூறலாம். புத்தியை நடத்தும் கோள் 3, 9, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது சாதகர் வெளிநாடு செல்ல சிறிது முயற்சி செய்தாலே போதுமானது, கண்டிப்பாகச் செல்ல முடியும். **வெளிநாட்டு வாய்ப்புகளைப் பற்றி கூறும்போது திரிகோண இயக்கம் மற்றும் விதிகளை எடுக்கக் கூடாது.**

காரணம் 3, 9, 12 ஆம் பாவகங்கள் என்பது நான்கு திரிகோணங்களில் மூன்று திரிகோணங்களில் வந்து விடும்.

1, 5, 9 என்கிற திரிகோணத்தில் 9 ஆம் பாவகம் வெளிநாடு என்று வரும்.

3, 7, 11 என்கிற திரிகோணத்தில் 3 ஆம் பாவகம் வெளிநாடு என்று வரும்.

4, 8, 12 என்கிற திரிகோணத்தில் 12 ஆம் பாவகம் வெளிநாடு என்று வரும். எனவே வெளிநாடு செல்ல மட்டும் திரிகோண விதிகளை எடுக்காமல் நேரடியாகப் பன்னிரு பாவகங்களைக் கொண்டு பலன் சொல்ல வேண்டும்.

பொதுவாக 9 ஆம் பாவகமே வெளிநாடு ஆகும். அதனால் 9 ஆம் பாவகத்தைத் தடை செய்யும் 9 ஆம் பாவகத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகங்களில் 12 ஆம் பாவகத்தைத் தவிர (12 ஆம் பாவகம் வெளிநாடு என்று வருவதால்) 4 மற்றும் 8 ஆம் பாவகங்கள் வெளிநாட்டிற்குத் தடையாக இருக்கும். அதாவது புத்தியை நடத்தும் கோள் 4 ஆம் பாவகம் மற்றும் 8 ஆம் பாவகத்தில் இருக்கும்போது வெளிநாடு செல்ல முயற்சி செய்தால் செல்ல இயலாது, எற்கனவே வெளிநாடு சென்று இருந்தால் 4 மற்றும் 8 ஆம் பாவகப் புத்திகளில் அங்கு தொடர்வதில் சிக்கல் ஏற்பட்டுத் தாயகம் திரும்ப நேரிடும்.

1, 2, 5, 6, 7, 10, 11 ஆம் பாவகங்களின் புத்தியில் வெளிநாடு செல்ல வேண்டுமானால் இயலாது என்பது அல்ல, ஆனால் அதிக முயற்சி தேவை. 1, 2, 5, 6, 7, 10, 11 ஆம் பாவகங்களின புத்தியில் ஏற்கனவே வெளிநாட்டில் இருந்து வருபவர்களுக்கு அங்கு வசிப்பதில் தடை ஏதும் இல்லை, அவர்கள் அங்கேயே தொடர முடியும்.

**அடுத்தவரிடத்தில் வேலைக்குப் போகலாமா? அல்லது சுயதொழில் செய்யலாமா? என்ன துறையில் வருமானம்? அதற்கு என்ன படிக்க வேண்டும்?**

பத்தாம் பாவகம் என்பது சாதகரின் நித்ய பணியினை மட்டுமே கூறும். அதாவது சாதகர் தினமும் வேலை செய்யும் இடம், சூழல், வேலை செய்யும் திறன், சாதகர் உடலால் வேலை செய்யக் கூடியவரா அல்லது அறிவால் வேலை செய்ய கூடியவரா? ஒரு வேலையைத் தானே செய்வாரா அல்லது பிற நபர்களை அந்த வேலையைச் செய்ய வைப்பாரா? போன்ற பலன்களையே 10 ஆம் பாவகம்மூலம் கூற முடியும். ஆனால் சுயதொழில் செய்வாரா? அல்லது அடுத்தவரிடம் சம்பளத்திற்கு வேலைக்குச் செல்வாரா? என்பதினை 10 ஆம் பாவகம்மூலம் கூற இயலாது, இந்தக் கேள்விக்கு 6 ஆம் பாவகம் மற்றும் 7 ஆம் பாவகத்தை ஆய்வுச் செய்து அதன்மூலமே பலன் கூற இயலும்.

சுயதொழில் செய்வதற்கு 7 ஆம் பாவகத்தை ஆய்வு செய்ய வேண்டும், அடிமை வேலை செய்வதற்கு 6 ஆம் பாவகத்தை ஆய்வு செய்து கூற வேண்டும். மேலும் இந்தக் கேள்விக்கு விடைகாண, சாதகப்படி விதி (இராசிக் கட்டம்) மற்றும் மதி (பாவகக் கட்டம்) இரண்டையும் இணைத்துப் பார்க்க வேண்டும்.

**இராசிக் கட்டப்படி அடிமை வேலை நிர்ணயம் செய்வதற்கான விதி:**

1. இராசிக் கட்டப்படி 6 ஆம் அதிபதி 2, 4, 6, 10 ஆம் பாவகங்களில் இருந்தால் அடிமை வேலை உத்தமம்.
2. இராசிக் கட்டப்படி 6 ஆம் அதிபதி 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருந்தால் அடிமை வேலை ஒத்துவராது.
3. இராசிக் கட்டப்படி 6 ஆம் அதிபதி 3, 6, 7, 8, 11, 12 ஆம் பாவகங்களில் இருந்தால் அடிமை வேலை மத்திமம்.

**இராசிக் கட்டப்படி சுயதொழில் நிர்ணயம் செய்வதற்கான விதி:**

1. இராசிக் கட்டப்படி 7 ஆம் அதிபதி 2, 4, 6, 10 ஆம் பாவகங்களில் இருந்தால் சுயதொழில் உத்தமம்.
2. இராசிக் கட்டப்படி 7 ஆம் அதிபதி 8, 12 ஆம் பாவகங்களில் இருந்தால் சுயதொழில் ஒத்துவராது.

3. இராசிக் கட்டப்படி 7 ஆம் அதிபதி 1, 3, 5, 7, 9, 11 ஆம் பாவகங்களில் இருந்தால் சுயதொழில் மத்திமம்.

**துறையும் அதற்கான வருமானமும்**

1. இராசிக் கட்டத்தில் 2, 4, 6, 10 ஆம் பாவகங்களில் என்ன என்ன கோள்கள் உள்ளனவோ, அந்தக் கோள்களின் காரகத்துவத் தன்மையில் தொழில் செய்தால் சாதகருக்கு முதல்தர வருமானம் கிடைக்கும்.
2. இராசிக் கட்டத்தில் 3, 7 , 11 ஆம் பாவகங்களில் என்ன என்ன கோள்கள் உள்ளனவோ, அந்தக் கோள்களின் காரகத்துவத் தன்மையில் தொழில் செய்தால் சாதகருக்கு இரண்டாம்தர வருமானம் கிடைக்கும்.
3. இராசிக்கட்டத்தில் 1, 5, 9, 8, 12 ஆம் பாவகங்களில் என்னென்ன கோள்கள் உள்ளனவோ, அந்தக் கோள்களின் காரகத்துவத் தன்மையில் தொழில் செய்தால் சாதகருக்கு மூன்றாம்தர வருமானம் கிடைக்கும்.
4. பாவகக் கட்டத்தில் ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் மூன்று கோள்களோ அல்லது மூன்றுக்கு மேற்பட்ட கோள்களோ இருக்குமேயானால் அந்தப் பாவகத்திற்குண்டான தொழில் (அல்லது) எந்தத் திரிகோணத்தில் மூன்று கோள்களோ அல்லது மூன்றுக்கு மேற்பட்ட கோள்கள் உள்ளனவோ அந்தத் திரிகோணத்தின் பாவகக் காரகத்தொழில் செய்து வருமானம் ஈட்டலாம்.

**தொழிலுக்கான கல்வி ஆலோசனை**

சாதகருக்கு இராசிக் கட்டம்படி 2, 4, 6, 10 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் காரகத்துவத் தன்மையில் அதிக வருமானம் ஈட்ட முடியும் என்பதால், அந்தத் துறையில் வருமானம் ஈட்ட என்ன படிப்பு படிக்க வேண்டுமோ அதனைப் படிக்க ஆலோசனை வழங்கலாம். 2, 4, 6, 10 ஆகிய பாவகங்களில் கோள்கள் ஏதும் இல்லை என்றால் 3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் துறையைத் தேர்வு செய்து அதற்குத் தகுந்த படிப்பினைப் படிக்க ஆலோசனை வழங்கலாம்.

**பாவகப்படி தசாபுத்தி கொடுக்கும் வருமானம்**

**அடிமை வேலை செய்யக் கூடியவர்களின் வருமானம்**

1. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகம் 2, 4, 6, 10 ஆக இருக்கும்போது புதியவேலை, சம்பளஉயர்வு, பதவிஉயர்வு, வருமானம் நல்லமுறையில் இருக்கும்

2. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகம் 1, 5, 9 ஆக இருக்கும்போது வருமானம் சரிவர இருக்காது, வேலையை இழக்கக் கூடிய நிலை கூட வரலாம்.
3. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகம் 3, 7, 11 ஆக இருக்கும்போது அதேநிலையில் நீடிக்கும்.
4. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகம் 8, 12 ஆக இருக்கும்போது வேலை, வருமானம் கடினமாக இருக்கும்.

**சுயதொழில் செய்யக் கூடியவர்களின் வருமானம்**

1. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகம் 2, 4, 6, 10 ஆக இருக்கும்போது வருமானம் நல்லமுறையில் இருக்கும்.
2. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகம் 3, 7, 11 ஆக இருக்கும்போது வருமானம் போதுமான அளவு இருக்கும்.
3. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகம் 1, 5, 9 ஆக இருக்கும்போது வருமானம் குறைவாக இருக்கும்.
4. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகம் 8 ஆக இருக்கும்போது நஷ்டம் ஏற்படும். 12 ஆக இருக்கும்போது பணம் முடங்கும்.

## ஒன்பது கோள்களுக்கான காரகத் தொழில்கள்...

### 1. சூரியனின் காரகத்துவத் தொழில்கள் :

அரசாங்க உத்தியோகம், முதலமைச்சர், பிரதமர், மருத்துவம், தலைமை நிர்வாகம், தந்தை தொழில், பரம்பரை தொழில், நவரத்தின வியாபாரம், அரசியல்வாதி, ஆபரண வியாபாரம், மாணிக்கக் கற்கள் வியாபாரம், அரசு அனுகூலத்துடன் செய்யும் தொழில்கள், கௌரவப் பதவிகள், அறுவைச் சிகிச்சை நிபுணர், துப்பறியும் தொழில், ஆளுமை, ஆளுமை பதவிகள், பொதுவாழ்க்கை, நெருப்பு சார்ந்த பணிகள், சமூக நலப்பணி, கண்மருத்துவம், மின்னணு சார்ந்த தொழில்கள், சூரியஒளி மின்சாரம், ஒளிகளைப் பயன்படுத்திச் செய்யும் தொழில்கள் (Light) போன்றவை சூரியனின் தொழில்கள் ஆகும்.

### 2. சந்திரன் காரகத்துவத் தொழில்கள் :

உணவகம், மனோதிடம், சோதிடம், பால், தயிர் வியாபாரம், உணவுப் பொருள் வியாபாரம், விவசாயம், நீர் தொடர்பான தொழில்கள், நீர் போக்குவரத்துச் சார்ந்த தொழில்கள், அரிசி வியாபாரம், சமையல், கதை, கவிதைகள் எழுதுதல், வெளிநாடு சார்ந்த தொழிகள், இரசாயன தொழில், மளிகைக் கடை, எண்ணை வியாபாரம், விலங்குள் பராமரிப்பு, பூ வியாபாரம், செவிலியர், ரொட்டிக் கடை, ஓவியம் வரைதல், மனநல மருத்துவர், மகப்பேறு மருத்துவர், கடல்சாாந்த வியாபாரம், குழந்தைகள் பராமரிப்பு, யோகா, ஏற்றுமதி இறக்குமதி, கலைத்துறை, புலவர்கள், தாய்மொழிக் கல்வி ஆசிரியர்கள், இரவு நேரப்பணிகள், பழரசம் தயாரிப்பு, கால்நடைத் தீவனம் வியாபாரம், மீன்பிடி தொழில்கள், ஆடு, மாடு, கோழி போன்றன வளர்த்தல் போன்றவை சந்திரனின் தொழில்கள் ஆகும்.

### 3. செவ்வாய் காரகத்துவத் தொழில்கள் :

காவல் துறை, பூமி தொடர்பான தொழில், இராணுவம், அரசு சட்டங்களை நிறைவேற்றும் அதிகாரி, விளையாட்டு வீரர்கள், விவசாயம், சீருடை பணியானர்கள், கசாப்புக் கடை, பொறியியல் துறை, உலோகப் பொறியியல், மின்சாரப் பொறியியல், மின்சாரப் பணியாளர்கள், மரவேலை செய்தல், பல்மருத்துவர், அறுவைச்

சிகிச்சை நிபுணர், பொறியாளர்கள், தீயணைப்பு வீரர்கள், மண்பாண்டம் செய்தல், செங்கல்சூளை, வாஸ்து, கட்டுமானக் கருவிகள் மற்றும் ஆயுதங்கள் தயாரித்தல், கல்வியாபாரம், கல் உடைத்தல், சுரங்கத்தொழில், உலைக் கூடப் பணியாளர்கள், இயந்திரப் பணியாளர்கள், சமையல்கலை, தொழிற்சங்க நிர்வாகிகள், வீட்டு மனை விற்பனை முகவர், துளைக்கிணறு வெட்டுபவர், ஜே.சி.பி. ஆப்பரேட்டர்கள், விவசாய இயந்திரங்களை இயக்குபவர்கள், தாதுப் பொருட்கள், புராதானப் பொருள்கள் தொடர்பான தொழில்கள், அதிகாரப் பதவிகள், நாவிதர், இரத்தவங்கி, மின் ஆற்றலுக்குரிய பொருள்கள் கடை, தீப்பெட்டித் தயாரிக்கும்தொழில், துப்பாக்கி தொழிற்சாலை பணி, பட்டாசு ஆலை, வெடிமருந்து தயாரித்தல் போன்றவை செவ்வாயின் தொழில்கள் ஆகும்.

### 4. புதனின் காரகத்துவத் தொழில்கள்:

வியாபாரம், ஏற்றுமதி இறக்குமதி, கணிதத்துறை, கணக்காளர், சோதிடம், வழக்கறிஞர், ஆசிரியர்கள், புத்தக வெளியீட்டாளர்கள், நோட்டுப் புத்தகம், பேனா மற்றும் அளவீடு கருவிகள், விற்பனையாளர், கல்வி நிறுவனங்கள், வர்த்தகம், ஒப்பந்தத் தொழில், மேடைப் பேச்சாளர், பங்குத் தொழில், பத்திரிகை ஆசிரியர்கள், பத்திரிக்கை துறை, கணிதவல்லுனர், கணித ஆசிரியர்கள், தரகுத் தொழில், தணிக்கை அதிகாரிகள், தூதுரகப் பணி, புலனாய்வுத் துறை, செய்தித் துறை, செய்தி வாசிப்பாளர்கள், தகவல் தொடர்பு துறை, அஞ்சல் துறை, அச்சுத்துறை, காகித தொழில்கள், தொலைபேசி துறைகள், தந்தி துறைகள், ஒற்றர்பணி, எழுத்தாளர், பதிவுத்துறை, பதிவாளர் பணிகள், நியூஸ் பேப்பர் ஏஜென்சி, பிரிண்டிங் பிரஸ், புள்ளியியல் துறை, நகைச்சுவை பேச்சாளர், பல குரல் வித்தகர், விற்பனை பிரதிநிதிகள், சட்ட ஆலோசகர்கள், வரைபட வரைவாளர், ஆடிட்டர், சில்லரை வியாபாரம், மதியூக வேலைகள், ஆலோசனை வழங்கும் அலுவலகர், நவீன பொறியியல் துறை, திட்ட அலுவலகர், தோட்டப் பணிகள், கிளிசோதிடம், கூட்டுறவு துறை, நூலகப் பணியாளர்கள் போன்றவை புதனின் தொழில்கள் ஆகும்.

**5. குருவின் காரகத்துவத் தொழில்கள்:**

வங்கிப்பணிகள், உபதேச தொழில்கள், ஆன்மீகப் பணிகள், நிதி நிறுவனம், நிர்வாக மேலாளர், உயர்ந்த பொறுப்புகள், கௌரவப்பதவிகள், மதகுருமார்கள், அறநிலையத் துறை, அமைச்சர்கள், கல்வித்துறை, பொருளாதாரத் துறை, தியான ஆசிரியர்கள், வேத விற்பனர்கள், சட்டம் சார்ந்த துறையில் வேலை, கல்வி அமைச்சர், கல்வித் துறை அதிகாரிகள், உயிர் பாதுகாப்பு, தர்ம ஸ்தாபனங்களில் பணிபுரிதல், வங்கிமேலாளர், சோதிடம், தெய்வத் தொண்டு, கருவூலத்தில் பணிபுரிதல், நிதிஅமைச்சர், சமஸ்கிருத ஆசிரியர்கள், நீதிமன்றத்தில் பணிபுரிதல், நீதிபதி, நீதித்துறை, மதபோதகர்கள், அறிவுரை வழங்கும் பணி, நடுவர் மன்றம், பஞ்சாயத்துத் தலைவர்கள், ஆசிரியர் பயிற்சி நிறுவனங்கள், தலைமை ஆசிரியர், தங்க வியாபாரம், யானை பராமரிப்பு, பூசை சாமான்கள் விற்பனை, கதா காலட்சேபம் செய்தல், அறங்காவலர், ஆலயகுருக்கள், காசாளர், சட்டமன்ற உறுப்பினர்கள், வழக்குரைஞர்கள், அரசியல் பிரமுகர்கள், விசாரண ஆணையம் அதிகாரிகள், தங்கச் சுரங்கப் பணிகள், அரசு ஆதரவுடன் செய்யும் தொழில்கள் போன்றவை குருவின் தொழில்கள் ஆகும்.

**6. சுக்கிரனின் காரகத்துவத் தொழில்கள்:**

வாகனத்தொழில், நடிப்பு, கலைத்துறை, ஆடைகள் விற்பனை, வெள்ளி வியாபாரம், பேன்சி தொழில், வாசனை திரவியங்கள் மற்றும் அழகுசாதனப் பொருள்கள் வியாபாரம், ரெடிமேட் ஷோரும், கட்டடக் கலை நிபுணர்கள், பெண்கள் அழகு நிலையம், பெண்கள் மருத்துவம், நிதிநிறுவனங்கள், மகளிர் சுயஉதவிக் குழுக்கள், பெண்கள் கல்லூரி, பெண்கள் பணிபுரியும் இடம், பாலியல் தொழில்கள், செயற்கை முறை கருத்தரிப்பு மையம், ஆடை வடிவமைப்பு, பொழுதுபோக்கு மையம், பூங்காக்களில் பணி, பழரசம் தயாரிப்பு, நடனநாட்டியக் கலை நிகழ்ச்சி நடத்துதல், தங்கும் விடுதிகள், இசை கச்சேரி, வரவேற்பாளர்கள், கருவிழி சிகிச்சை நிபுணர்கள், இசையமைப்பாளர்கள், ஆடம்பர ஓட்டல் நடத்துபவர்கள், மதுபானம் விற்பனை, வைரநகைகள் வியாபாரம், சொகுசுப்

பொருள்கள் வியாபாரம், கலைசாதனப் பொருள்கள் வியாபாரம், கட்டில் மெத்தை வியாபாரம், கேளிக்கை விடுதிகள் நடத்துதல், வட்டித் தொழில்கள், நகை அடமானக்கடை, இனிப்பு வகைகள் விற்பனை, திருமண மண்டபம் நடத்துவது, திருமணத் தகவல் மையங்கள், திரையரங்கம் நடத்துவது, திருமண தரகர், அழகுப் போட்டிகளில் பங்கேற்பு, சுற்றுலாத் துறை, வாகனங்கள் வாடகைக்கு விடுதல், சங்கீத கருவிகள் விற்பனை செய்தல், பின்னணிப் பாடகர்கள், கால்நடை வளர்ப்பு, இரத்தின வியாபாரம், நிதி நிறுவனங்களில் பணி புரிதல், ஓவியம் வரைதல், சிற்ப கலைஞர்கள், வங்கிப் பணி, இசைக் கல்லூரி, வெண்கல வியாபாரம், முகம்பார்க்கும் கண்ணாடிப் பொருள்கள் வியாபாரம், வெற்றிலை பாக்கு வியாபாரம், சந்தன வியாபாரம், கால்நடை பண்ணை, இலவம்பஞ்சு வியாபாரம், பாத்திரக்கடை, கோல்டு கவரிங் கடை போன்றவை சுக்ரனின் தொழில்கள் ஆகும்.

**7. சனியின் காரகத்துவத் தொழில்கள்:**

இரும்பு வியாபாரம், பழைய இரும்புச் சாமான்கள் வாங்குவது, துப்புரவுப் பணியாளர்கள், தோல்வியாபாரம், எண்ணை வியாபாரம், எள்ளுப் பயிரிட்டு விற்பனை செய்தல், மரவியாபாரம், இரும்புத் தாது பிரித்து எடுத்தல், இரும்புத் தொழில் வல்லுனர்கள், கூலிவேலை செய்தல், தினக்கூலி, மறுசுழற்சி தொழில், தண்டல் வரிவசூல் செய்தல், கிராம நிர்வாக அலுவலகர், அகழ்வாராய்ச்சி நிறுவனங்களில் பணிபுரிதல், பொறியியல் துறைகளில் பணிபுரிதல், இரவு பணிகள், கீழ்நிலை ஊழியர்கள், இரகசியப் பிரிவு, உழவு துறைகளில் பணிபுரிதல், சாலை பணியாளர்கள், அடுப்புக் கரி வியாபாரம், நிலக்கரி சுரங்கப் பணிகள், சேமிப்புக் கிடங்கு வைத்தல், பிணவறை ஊழியர்கள், சுரங்கப் பாதைகள் அமைத்தல், அரசு ஊழியர்கள், கீழ்நிலைச் சீருடைப்பணியாளர்கள், மரம் வெட்டுதல், செருப்பு தைத்தல், காலணி கடை, சித்தாள் பணி, டீக்கடை வேலை செய்தல், வீட்டுவேலை செய்தல், மயானத்தில் வேலைசெய்தல், ஆடு, மாடு, பன்றி போன்றன வளர்த்தல், ஆயுள்காப்பீட்டு நிறுவனத்தில் பணியாற்றுவது, முடிவெட்டும் பணி, கழிவுப் பொருட்கள் வியாபாரம்,

மண்வியாபாரம், கிராமத் தலைவர், லேத்பட்டறை, அமரர் ஊர்தி ஓட்டுனர், மக்கள் தொடர்பு அதிகம் உள்ள பணிகள், உர வியாபாரம், கட்டிட வேலை செய்தல், அரசுதூதுவர், முதியோர் இல்லம், ஆதரவற்றோர் உடல் ஊனமுற்றோர் காப்பகம், கள்ளர் தொழில், சுமை தூக்குபவர், லாண்ட்ரி தொழில் போன்றவை சனியின் தொழில்கள் ஆகும்.

**8. இராகுவின் காரகத்துவத் தொழில்கள்:**

புகைப்படம் எடுத்தல், வீடியோ, சினிமாத் தொழில்கள், வெளிநாடு வர்த்தகம், சிகரெட் கம்பெனி, மின்னணு சாந்த தொழில்கள், ஒற்றர்கள், புலனாய்வுத் துறை மற்றும் உழவுத் துறையில் பணி புரிதல், தோட்டவேலை செய்தல், கேஸ் சிலிண்டர் ஏஜென்சீஸ், பெட்ரோல் பங்கு, கடினமான வேலை, அலோபதி மருத்துவம், மெடிக்கல் ஷாப், மதுபான தொழிற்சாலை, இரசாயனப் பொருட்கள் விற்பனை, நிழல் வர்த்தகம், தொழுநோய் மருத்துவம், பாம்புப் பண்ணையில் வேலைசெய்தல், பாம்பாட்டி தொழில்கள், போதைப் பொருள்கள் வியாபாரம், இரப்பர் தொழிற்சாலை, பிளாஸ்டிக் பைகள் தயாரிப்பாளர், வெடிகுண்டு தயாரித்தல், சட்டத்திற்குப் புறம்பாகச் செய்யும் தொழில்கள், வாகனங்கள் ஓட்டுதல், ஏமாற்றிப் பிழைத்தல், தீவிரவாத அமைப்பு, கொள்ளையர்கள், மாந்திரீகம் செய்தல், மின்னொளி டவர் கோபுரம் அமைத்தல், மேஜிக் செய்தல், பாலியல் தொழில்கள், கள்ளக்கடத்தல், ஏவல், பில்லி சூனியம் செய்தல், சூதாட்டம் கிளப், இலாட்டரிச் சீட்டு வியாபாரம், தோல் பதனிடும் தொழில், வேசம் கட்டுதல், சாக்குப்பை, துடைப்பம் விற்பனை, விசமருந்து தயாரித்தல், பீடி தொழில்கள். ஆபாசப்படங்கள் விற்பனை, உடல் உறுப்புக்கள் விற்பனை செய்தல், போலிமருந்து தயாரிப்பு, ஈயம் பூசுதல், சர்க்கஸ் தொழில்கள், கிணறு வெட்டுதல், கள்ளச் சாராயம் காயச்சுதல், சிமெண்ட் தொழிற்சாலை, சிமெண்டு வியாபாரம், கருங்கல் விற்பனை, பாத்திரம் வாடகைக்கு விடுதல், முலாம் பூசுதல், ஏற்றுமதி இறக்குமதி தொழில்கள், புற்றுநோய் சிகிச்சை மையம், சாயப்பட்டறை தொழில்கள், பிரமாண்ட மேடைகள் அமைத்தல், செல்போன் டவர் அமைத்தல், ஜெராக்ஸ் கடை, எக்ஸ்ரே ஸகேன் சென்டர், இரகசியம் காத்தல், மின்சார

உபகரணங்கள் தயாரிப்பு போன்றவை இராகுவின் தொழில்கள் ஆகும்.

**9. கேதுவின் காரகத்துவத் தொழில்கள் :**

மதகுரு, சித்த மருத்துவம், சோதிடம், கேபிள் ஆப்பரேட்டர், செங்கல் செய்பவர்கள், சட்டத் துறை, துறவறம் கொள்தல், கயிறு திரித்தல், கயிறு வியாபாரம், ஒயரிங் வேலை, பவர்லூம் மற்றும் கைத்தறி நெசவாளர்கள், நூற்பாலைகளில் பணிபுரிதல், ஓடு வியாபாரம், வழக்குரைஞர்கள், வேட்டைக்காரன், தையல் தொழில், பால் வியாபாரம், கூடை பின்னுதல், ஒயர் கூடை பின்னுதல், ரெய்கி, அக்குபஞ்சர், மின் கம்பியாளர்கள், யோகா பயிற்சி அளித்தல், ஆன்மிகப் பணிகள், மூலிகை வியாபாரம், நாட்டுமருந்துக் கடை, கஞ்சா மற்றும் அபின் விற்பனை, மந்திரச் சித்தியின்மூலம் சிகிச்சை செய்தல், கிருத்துவப் பாதிரியார்கள், இரப்பர் குழாய்கள் மற்றும் மின்சார ஒயர்கள் தயாரித்தல், பைப் கம்பெனி, சீ.டி. மற்றும் மெமெரிகார்டு விற்பனை மற்றும் பதிவேற்றம் செய்தல், ஆன்மீகப் படங்கள் மற்றும் ஆன்மீகப் புத்தங்கள் விற்பனை, கடிகாரம் விற்பனை, கைகடிகாரம் பழுது பார்த்தல், வலை பின்னுதல், மீன்பிடித்தல், பிளம்பிங் வேலைகள், தையல் மிஷின் பழுது பார்த்தல், நரம்பியல் நிபுணர்கள், பூமாலைகட்டுதல், மணிமாலைக் கோர்த்தல், கைவினை பொருட்கள் தயாரித்தல் மற்றும் விற்பனை, காஜாகடை, வர்மகலை பயிற்சி, உபதேசம் செய்தல், பிரசன்னம் பார்த்தல், செயின்பட்டறை, கொசுவலை விற்பனை, நுணுக்கமான வேலைகள், கம்ப்யூட்டர் சர்வீஸ், புலனாய்வு துறை, வெடிகுண்டு தயாரித்தல், இலவசச் சேவைகள், வெளிநாட்டுத் தொடர்புடைய தொழில்கள், மரபணு ஆராய்ச்சி, இரசவாதம் செய்தல், ஈயம், தகரம் வியாபாரம், அலுமினியப் பாத்திரங்கள் வியாபாரம், முத்துக்குளித்தல், தலைமுடி மாற்றியமைத்தல் போன்றவை கேதுவின் தொழில்கள் ஆகும்.

# பன்னிரு "பாவகக் காரகத்" தொழில்

**1 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

மற்றவர்களுக்குத் தலைமை தாங்கும் தொழில். குறிப்பாக நிர்வாகம் சாந்த துறை (Administration) வேலையைப் பிரித்துத் தரும் பொறுப்பு (உதாரணம் : மாவட்ட ஆட்சியர், வருவாய்த் துறை அதிகாரி, தலைமை ஆசிரியர், நிர்வாக அதிகாரி, மேலாளர்)

**2 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

எளிதில் பணமாக மாற்றக் கூடிய பொருள்களைக் கொண்டு செய்யும் தொழில்கள். பணத்தை மூலதனமாகக் கொண்டு செய்யும் தொழில்கள், உதாரணம்: பணம் வட்டிக்கு விடுதல், பணத்தைப் பாதுகாக்கும் தொழில்கள் (வங்கி) எல்லாவித உலோகங்கள்மூலம் செய்யப்படும் தொழில்கள் (பாத்திரக்கடை), பிரசங்கம், மந்திரம், பட்டிமன்றம், தங்கம், வெள்ளி அடகுகடை.

**3 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

தகவல் தொடர்பு சாதனங்களைப் பயன்படுத்திச் செய்யும் அனைத்துத் தொழில்களும், கணினி, தொலைபேசி கைப்பேசி, தொலைக்காட்சி, நகல், பத்திரிக்கை, செய்தித்தாள், தபால்துறை, எழுத்து, ஒப்பந்தம், பதிவு செய்தல் பயணம், இடமாற்றம், கதைகள், எழுத்தாளர், பத்திரப் பதிவு சார்ந்ததுறை, நூலகத்துறை, விளம்பரத்துறை, போக்குவரத்துத் துறை, சாலைபோடும் பணி, மின்சாரத்துறை, அச்சுத்துறை, பொருள்களை விற்பனை செய்யும் விற்பனைப் பிரதிநிதி.

**4 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

அதிகமான பணத்தை மூலதனமாகக் கொண்டு செய்யப்படும் தொழில்கள். அடிக்கடி மாற்றாமல் நீண்டகாலம் செய்யப்படும் தொழில்கள், கனமான பொருள்கள், பொருள்களை உற்பத்தி செய்தல், வீடு, மனை, வாகனம், குடோன், கட்டடத் தொழில்கள், கட்டுமானப் பொருள்கள் (Hard Ware) கருவிகள் (Instruments)

இயந்திரங்கள் (Machines) வீட்டு உபயோகப் பொருள்கள், (Home Appliances), ஒரே மாதிரியான வேலைகள், அச்சுக்கள் (Moulding Dies and Templates), அறிவு பூர்வமான (Logistics Teacher) சினிமா இயக்குநர். செக்குமாடு போல் ஒரே வேலையை மீண்டும் மீண்டும் செய்யும் வேலைகள் அனைத்தும்.

**5 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

உடல் உழைப்பு இல்லாத தொழில்கள், மூளைக்கு மட்டும் வேலை தரும் தொழில்கள், சோதிடம், கலைஞன், யூகம், பொழுதுபோக்கு, தரகர், சினிமா, இயல், இசை, நாடகம், வர்ணனை, மந்திரம் செபித்தல், உணர்வு சார்ந்த தொழில்கள், கலை தொடர்பானத் தொழில்கள் அனைத்தும் (Arts)

**6 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

உடலுக்கு வலியைத் தராத உடல் உழைப்பு (மாதச் சம்பள வேலைகள்), போட்டி, ஒன்றுக்கு மேற்பட்ட இயந்திரங்கள், தேவைக்கு அதிகமான உற்பத்தி, உணவு, உடை, விவசாயம், ஆடு, கோழிப் பண்ணை, ஆடை தயாரிப்பு, தொழிற்சாலை, நெசவு, துணிக்கடை, வாடகை, நோய், மருத்துவம், மருந்து, மருந்துக்கடை, செவிலியர், பரிசோதனை செய்யும் தொழில், வழக்கறிஞர், உணவகங்கள், தங்கும்விடுதி, சுயகௌரவத்தை குறைத்துக் கொள்ளாமல் மாதச் சம்பளம் வாங்கும் தொழில்கள் அனைத்தும்.

**7 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

சாதகருக்குச் சமமான நிலையில் உள்ள நபர்களுடன் செய்யப்படும் தொழில்கள், வாடிக்கையாளர்கள், பங்குதாரர், பொதுசனத் தொடர்பு அதிகம் உள்ள தொழில்கள், வாடிக்கையாளர்கள் இருப்பிடத்திற்குச் சென்று பொருள்களை வியாபாரம் செய்தல், பொதுநல சேவை பணிகள், பொதுப்பணித்துறை சார்ந்த தொழில்கள், சந்தை (Market), திருமணத் தகவல், மக்கள் தொடர்பு பணி.

**8 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

அசிங்கம் அவமானம் நிறைந்த தொழில்கள், பிச்சையெடுத்தல், கொத்தடிமை, மூட்டை தூக்குதல், அடிமைத் தொழில், கழிவுநீர் அகற்றுதல், சுடுகாட்டுவேலை, சவக்கிடங்கு, பிரேத பரிசோதனை, கசாப்புக்கடை, முடிவெட்டுதல், திருட்டு, கொலை, கொள்ளை, தீவிரவாதம், காட்டிக்கொடுக்கும் தொழில், ஆயுள் காப்பீடு, தந்திரமான தொழில், பழைய பொருட்களை விற்பனை செய்தல், பழுதுபார்க்கும் தொழில், இலஞ்சம், இலஞ்சத் தரகு, கட்டப் பஞ்சாயத்து, மறுசுழற்சி தொழில், வரி கட்டாத ஏய்ப்புத் தொழில், காவல்துறை, இலஞ்ச ஒழிப்புத்துறை, சிறைக் காவலர்கள், தீயணைப்புத் துறை, வெடிகுண்டு நிபுணர்கள்.

**9 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

பேராசிரியர்கள், ஆராய்ச்சிக்கூடம், தகவல் தொடர்பு, வெளிநாட்டு ஏற்றுமதி, இறக்குமதி, துறைமுகம், வெளிநாட்டுத் தூதுவர், நீதிபதி, பஞ்சாயத்துத் தலைவர், அரசர்கள், மடாதிபதிகள், ஆன்மீகப் பொருள்கள் வியாபாரம், அறக்கட்டளை நிர்வாகம், தர்மம், அன்பளிப்பு வாங்குபவர், தொல்பொருள் இலாக்கா, மரபணு ஆராய்ச்சி, அரசுகஜானா.

**10 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

நிலையான வேலை, சீவனம், கர்மம், கடமை, மதிப்பு, அதிகாரம், உயர்பதவி, பதவி உயர்வு, முதல்அமைச்சர், பொறுப்பான பதவி, பெயர், கௌரவம், மரியாதை, புகழ், அந்தஸ்து, பொறுப்புகள், அரசாங்க விருது, தலைமை பொறுப்பு, அரசாங்க ஆதரவு, நிர்வாகத் திறன், முதல்தொழில், தலைமை உணர்வு.

**11 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

பிடித்தமான எல்லா விதத் தொழில்கள், அதிக முதலீடு இல்லாத தொழில்கள், உல்லாச சூதாட்ட விடுதிகள், பொழுதுபோக்கு மையங்கள், சுற்றுலா மையம், சங்கம், கட்சி, சட்டமன்றம்,

நாடாளுமன்றம், நகரசபை, கிராமசபை, முனைவர்பட்ட வழிகாட்டி, ஒரே தொழில் மட்டும்.

**12 ஆம் பாவகக் காரகத் தொழில்கள் :**

ஒன்றுக்கு மேற்பட்ட தொழில்கள், தொழிற் கிளைகள், இரகசிய நடவடிக்கை தொழில், இராணுவ இரகசியம், துப்பறியும் தொழில், இரகசிய போலீஸ், பரப்பரப்பான தகவல்களைச் சேகரிக்கும் தொழில்கள், வரி ஏய்ப்புத் தொழில்கள், வருமானவரி சோதனையாளர்கள், கடனை வசூல் செய்யும் அடியாட்கள்.

ஒருவர் எந்தப் பாவகத் தொழில் செய்கிறாறோ அந்தப் பாவகத்திற்கு 8 மற்றும் 12 ஆம் பாவகத்தில் புத்தியை நடத்தும் கோள் இருந்தால், இந்தக் காலக்கட்டத்தில் சாதகர் செய்யக் கூடிய தொழிலில் பாதிப்பு ஏற்படும்.

## கொடுப்பினை நிர்ணயமும் தசாபுத்திப் பலன்களும்...

இராசிக் கட்டத்தில் கொடுப்பினையை நிர்ணயம் செய்யத் தேர்ந்தெடுத்துள்ள விதிகள் நான்கு ஆகும். அவை :

1. பாவகம்
2. பாவக அதிபதி
3. பாவகக் காரகக் கோள்
4. சர்வாஷ்டகவர்க்கம்

**1. பாவகம் : உபஜெய (3, 6, 10, 11) ஸ்தானங்களைத் தவிர மற்ற பாகவங்களில் (1, 2, 4, 5, 7, 8, 9, 12) இயற்கைத் தீய கோள்களான சூரியன், செவ்வாய், சனி, இராகு, கேது ஆகிய கோள்கள் ஏதும் இருக்க கூடாது. அவ்வாறு இருந்தால் அந்தப் பாவகம் பாதிக்கப்படும்.**

ஒரு சாதகத்தில் பன்னிரு பாவகங்கள் (வீடு) உண்டு. பிறப்பு முதல் இறப்புவரை நடைபெறும் அனைத்துச் சம்பவங்களும் இப்பன்னிரு பாவகத்தினுள் அடக்கம் ஆகும். இதன்படியே பன்னிரு பாவகக் காரகங்களாக முன்னோர் பிரித்து எழுதி வைத்து உள்ளனர். இந்தப் பன்னிரு பாகவங்களில் உபஜெய ஸ்தானம் என்று கூறப்படும் 3, 6, 10, 11 ஆகிய நான்கு பாவகங்களில் தீயகோள்கள் என்று பிரிக்கப்பட்டுள்ள சூரியன், செவ்வாய், சனி, இராகு, கேது ஆகிய கோள்கள் அமரலாம், அதனால் அந்தப் பாவகத்தின் காரகம் பாதிக்கப்படாது. அதாவது ஒன்பது கோள்களும் உபஜெய ஸ்தானங்களில் அமரலாம். உபஜெயம் அல்லாத மற்ற பாவகங்களில் இயற்கை தீயகோள்கள் எனக் கூறப்பட்டுள்ள சூரியன், செவ்வாய், சனி, இராகு, கேது ஆகிய கோள்கள் அமரக் கூடாது. அவ்வாறு அமர்ந்தால் அந்தப் பாவகத்திற்கெனக் கூறப்பட்டுள்ள காரகம் பாதிக்கக் கூடும் என எடுத்துக்கொள்ள வேண்டும்.

**2. பாவக அதிபதி : பன்னிரு பாவக அதிபதிகளும் இலக்கினத்திற்கோ அல்லது தனது ஸ்தானத்திற்கோ 8 அல்லது 12 இல் மறையக் கூடாது. அவ்வாறு மறைந்தால் அந்தப் பாவகம் பாதிக்கப்படும்.**

**(இலக்கினத்திற்குத் தீமை செய்யக் கூடிய 8 மற்றும் 12 ஆம் பாவக அதிபதி தனது ஸ்தானத்திற்கு 8 மற்றும் 12 இல் மறையலாம்)**

ஒரு சாதகத்திற்கு இலக்கினம் என்று குறித்துவிட்டால் பன்னிரு பாவகம் எற்பட்டுவிடும். அந்தப் பன்னிரு பாவகத்திற்கும் பன்னிரு பாவக அதிபதி வரும். இந்தப் பன்னிரு பாவகத்திலும் இலக்கினத்தைப் பெரிதும் பாதிக்கக் கூடிய பாவகங்கள் இரண்டு ஆகும். அவை 8 ஆம் அதிபதி மற்றும் 12 ஆம் அதிபதி ஆகும். இந்த 8 ஆம் அதிபதியோ அல்லது 12 ஆம் அதிபதியோ வலுப்பெற்று விட்டால் சாதகருக்குத் தீமையான பலன்கள் அதிகரிக்கும். எனவே 8 ஆம் அதிபதியும் 12 ஆம் அதிபதியும் வலு இழக்க வேண்டும் என்றால் இந்த வீட்டு அதிபதிகள் தனது வீட்டிற்கு 8 அல்லது 12 இல் மறைய வேண்டும். அதாவது 8 ஆம் அதிபதி தனது ஸ்தானத்திற்கு 8, 12 என்பது இலக்கினத்தில் இருந்து 3 மற்றும் 7 ஆம் பாவகமாக வரும். அதேபோல் 12 ஆம் அதிபதி தனது ஸ்தானத்திற்கு 8, 12 என்பது இலக்கினத்தில் இருந்து 7 மற்றும் 11 ஆம் பாவகமாக வரும். இவ்வாறு மறைந்தால் இலக்கினம் என்னும் சாதகருக்குக் கெடுதியான பலன் குறையும்.

**3. பாவகக் காரகக் கோள் : பன்னிரு வீட்டிற்கும் ஒவ்வொரு காரகக் கோள் உண்டு. அந்த அந்தப் பாவகத்தின் காரகக் கோள் இலக்கினத்திற்கோ அல்லது அந்தக் குறிப்பிட்ட பாவகத்திற்கு 8 அல்லது 12 ஆம் பாவகங்களில் மறையக் கூடாது. அவ்வாறு மறைந்தால், அந்த பாவகம் பாதிக்கப்படும்.**

| பாவகம் | பாவக காரக கோள் |
|---|---|
| 1 | சூரியன் |
| 2 | குரு |
| 3 | செவ்வாய் |
| 4 | சந்திரன் (தாய்) |
| | புதன் (கல்வி, வித்தை) |
| | செவ்வாய் (நிலம்) |
| | சுக்ரன் (வாகனம், வீடு) |
| 5 | குரு |
| 6 | சனி |
| 7 | சுக்ரன் |
| 8 | சனி |
| 9 | சூரியன் (தந்தை) |
| | குரு (வழிகாட்டி) |
| 10 | சூரியன் (நிர்வாகம்) |
| | சனி (உடல் உழைப்பு) |
| 11 | குரு |
| 12 | சனி |

ஒவ்வொரு பாவகத்திற்கும் (வீட்டிற்கும்) ஒவ்வொரு பாவகக் காரகக் கோள் கொடுக்கப்பட்டுள்ளது. அதன்படி 1 ஆம் பாவகத்திற்குச் சூரியன் ஆத்ம காரகன் என்றும், 2 ஆம் பாவகத்திற்குக் குரு தன காரகன் என்றும், 3 ஆம் பாவகத்திற்குச் செவ்வாய் சகோதர காரகன் என்றும், 4 ஆம் பாவகத்திற்குத் தாய் மாத்ருகாரகன் என்றால் சந்திரனையும், கல்வி அல்லது வித்தை வித்யா காரகன் என்றால் புதனையும், நிலம் என்றால் செவ்வாயையும், வீடு அல்லது வாகனம் என்றால் சுக்கிரனையும், 5 ஆம் பாவகக் காரகக் கோள் குரு புத்ர காரகன் என்றும், 6 ஆம் பாவகக் காரகக் கோள் சனி ரோகக் காரகன் என்றும், 7 ஆம் பாவகக் காரகக் கோள் சுக்கிரன் களத்திர காரகன் என்றும், 8 ஆம் பாவககாரகக் கோள் சனி ஆயுள் காரகன் என்றும், 9 ஆம் பாவகம் தந்தை என்றால் பிதுர்காரகன் சூரியனையும், வழிகாட்டி என்றால் குருவையும், 10 ஆம் பாவகத்திற்கு நிர்வாகத் திறன் என்றால் சூரியனையும், உடல் உழைப்பு என்றால் சனியையும், 11 ஆம் பாவகக் காரகக் கோள் குரு எனவும், 12 ஆம் பாவகக் காரகக் கோள் சனியையும் முன்னோர்கள் பிரித்து வைத்து உள்ளனர்.

இதன்படி ஒவ்வொரு பாவகத்திற்கு உண்டான பாவகக் காரகக் கோள் இலக்கினத்திற்கோ அல்லது அந்தக் குறிப்பிட்ட பாவகத்திற்கோ 8 அல்லது 12 ஆம் பாவகங்களில் மறையக் கூடாது. அவ்வாறு மறைந்தால் அந்தக் கோளின் காரகத் தன்மையில் பாதிப்பு ஏற்படும் என்று எடுத்துக்கொள்ளப்படுகிறது.

**4.சர்வாஷ்டக வர்க்கம் : ஒவ்வொரு பாவகத்திலும் சர்வாஷ்டகவர்க்கம் 28 பரல்களுக்கு குறையாமல் இருக்க வேண்டும். அவ்வாறு 28 பரல்களுக்குக் குறைந்தால் அந்தப் பாவகம் பாதிக்கப்படும். இலக்கினத்திற்குத் தீமை செய்யக் கூடிய 8 மற்றும் 12 ஆம் பாவகங்களின் பரல்கள் 28 இக்குக் குறைவாக இருப்பது நலமாகும். அதாவது தீமையான பலன்கள் குறையும்.**

ஒவ்வொரு சாதகத்திற்கும் மொத்தம் 337 பரல்கள் கொடுக்கப்பட்டிருக்கும். இந்த 337 பரல்களையும் சராசரியாக 12 இராசிகளுக்கும் வகுத்துப் பார்த்தால் 28.0833 என வரும். எனவே ஒரு

பாவகத்திற்குக் குறைந்த பட்சம் 28 பரல்கள் இருந்தால் அந்தப் பாவகம் நன்றாக இருப்பதாக எடுத்துக்கொள்ளலாம்.

இந்தப் பன்னிரு பாவகத்திலும் இலக்கினத்தைப் பெரிதும் பாதிக்கக் கூடிய பாவகங்கள் இரண்டு ஆகும். அவை 8 ஆம் மற்றும் 12 ஆம் பாவகம் ஆகும். இந்தப் பாவகங்கள் வலுப் பெற்றால் இலக்கினம் எனும் சாதகருக்குத் தீய பலன்கள் எற்படும், ஆதலால் 8 மற்றும் 12 பாவகங்களுக்குக் குறைவான பரல்கள் இருப்பது சாதகருக்கு நன்மையாகும். எனவே 8 மற்றும் 12 ஆம் பாவகங்களின் சர்வாஷ்டகவர்க்கம் 28 பரல்களுக்குக் குறைவாக இருப்பது நலம் ஆகும்.

ஒரு சாதகத்திற்கு இராசிக் கட்டத்தின்படி விதி நிர்ணயம் செய்ய நான்கு விதிகளின்படி மொத்தம் 100 மதிப்பெண் என்று வைத்துக்கொண்டால், ஒவ்வொரு விதிக்கும் 25 மதிப்பெண்கள் வரும். இதன்படி ஒவ்வொரு பாவகக் கொடுப்பினையையும் ஆராயலாம்.

பன்னிருபாவக விதி நிர்ணயம் (உதாரண சாதகம்)

| | 35 | 29 | 34 | 23 | |
|---|---|---|---|---|---|
| | | | சனி 051.58<br>சுக் 055.16 | சூரி 088.41 | |
| 24 | | இராசி | | கேது092.48<br>செவ்106.34<br>புத 114.43 | 24 |
| 27 | ராகு272.48 | | | சந் 135.32 | 22 |
| | லக்265.03<br>குரு247.33 | | | | |
| | 29 | 24 | 34 | 32 | |

இந்த ஆண் சாதகர் பிறந்த நாள் : 14.07.1972,

சாதகர் பிறந்த நேரம் : 05.24 மாலை

சாதகர் பிறந்த ஊர் : நாகர்கோவில்.

### 1 ஆம் பாவகக் கொடுப்பினை

1. ஒன்றாம் பாவகத்தில் குரு உள்ளார், தீயகோள் ஏதும் இல்லை. எனவே மதிப்பெண் 25.
2. ஒன்றாம் பாவக அதிபதி குரு, ஒன்றாம் பாவகத்தில் உள்ளார். 8, 12 ஆம் பாவகங்களில் இல்லை. எனவே மதிப்பெண் 25.
3. ஒன்றாம் பாவகக் காரகக் கோள் சூரியன் 7 ஆம் பாவகத்தில் உள்ளார். 8,12 ஆம் பாவகங்களில் இல்லை. எனவே மதிப்பெண் 25.
4. ஒன்றாம் பாவகத்தில் 28 பரல்களுக்குமேல் உள்ளன. அதாவது 28 பரல்களுக்குமேல் என்பதால் மதிப்பெண் 25.

   ஆக இந்தச் சாதகருக்கு ஒன்றாம் பாவக மதிப்பெண் 100 உள்ளன. அதன்படி ஒன்றாம் பாவகக் காரகத்துவப் பலன்கள் அனைத்தும் இந்தச் சாதகருக்கு நல்லமுறையில் உள்ளது. அதாவது சாதகரின்

தோற்றம், சுயகௌரவம், ஆயுள், சுயசிந்தனை, மனமகிழ்ச்சி அனைத்தும் 100 விழுக்காடு நன்றாக உள்ளது.

**2 ஆம் பாவகக் கொடுப்பினை**

1. இரண்டாம் பாவகத்தில் தீய கோளான இராகு இருக்கிறார். எனவே மதிப்பெண் இல்லை.
2. இரண்டாம் பாவக அதிபதி சனி இலக்கினத்திற்கு 6 இல் உள்ளார். அதாவது தனது ஸ்தானத்திற்கு 5 இல் உள்ளார். இலக்கினத்திற்கு 8, 12 ஆம் பாவகங்களில் இல்லை, எனவே மதிப்பெண் : 25.
3. இரண்டாம் பாவகக் காரகக் கோளானக் குரு இலக்கினத்தில் உள்ளார். அதாவது 2 ஆம் பாவகத்திற்கு 12 இல் உள்ளார். எனவே மதிப்பெண் இல்லை.
4. இரண்டாம் பாவகத்தின் சர்வாஷ்டக வர்க்கம் 27 ஆகும். 28 இக்கு குறைந்து இருப்பதால் மதிப்பெண் இல்லை.

   ஆக இந்தச் சாதகருக்கு இரண்டாம் பாவகக் கொடுப்பினை 25 விழுக்காடு மட்டுமே உள்ளது. ஆகையால் இரண்டாம் பாவகக் காரகத்துவப் பலன்களான பணம் உற்பத்தித் திறன், பணம் நிர்வாகம், குடும்பத்திற்குத் தேவையான பணம் ஆகியவற்றில் பலவீனம் எற்படும்.

**3 ஆம் பாவகக் கொடுப்பினை**

1. மூன்றாம் பாவகத்தில் தீயகோள்கள் ஏதும் இல்லை. எனவே மதிப்பெண் 25.
2. மூன்றாம் பாவக அதிபதி சனி 6 இல். இலக்கினத்திற்கோ அல்லது மூன்றாம் பாவகத்திற்கோ 8, 12 ம் பாவகங்களில் இல்லை. எனவே மதிப்பெண் 25.
3. மூன்றாம் பாவகக் காரகக் கோள் இலக்கிணத்திற்கு 8 இல். எனவே மதிப்பெண் இல்லை.
4. மூன்றாம் பாவகத்தின் சர்வாஷ்டகவர்க்கம் 24 பரல்கள், 28 கும் குறைவாக இருப்பதால் மதிப்பெண் இல்லை.

   ஆக இந்தச் சாதகருக்கு 3 ஆம் பாவகக் கொடுப்பினை 50 விழுக்காடு மட்டுமே உள்ளது. ஆகையால் இந்தச் சாதகருக்கு மூன்றாம் பாவகக் காரகத்துவப் பலன்களான சகோதரம், தைரியம்,

வீரியம், சிறு பயணங்கள், பதிவுகள், தகவல் தொடர்பு, விளம்பரம் போன்ற பலன்களில் மத்திம பலன்களே உள்ளது.

### 4 ஆம் பாவகக் கொடுப்பினை

1. நான்காம் பாகத்தில் தீயகோள் ஏதும் இல்லை. எனவே மதிப்பெண் 25.
2. நான்காம் பாவக அதிபதி குரு, அதாவது இலக்கினத்திற்கோ அல்லது நான்காம் பாவகத்திற்கோ 8, 12 ஆம் பாவகங்களில் இல்லை. எனவே மதிப்பெண் 25.
3. நான்காம் பாவகக் காரகக் கோள்களின் நிலை.
   சந்திரன் 9 இல் (தாயாரின் காரகம் பாதிக்கப்படவில்லை)
   புதன் 8 இல் (வித்தைக்கான காரகம் பாதிக்கப்பட்டு உள்ளது)
   செவ்வாய் 8 இல். (நிலத்திற்கான காரகம் பாதிக்கப்பட்டுள்ளது)
   சுக்கிரன் 6 ல் (வீடு, வாகனகாரகம் பாதிக்கப்படவில்லை)
4. நான்காம் பாவக சர்வாஷ்டகவர்க்கம் 35 ஆகும். 28 இக்கு மேல் உள்ளதால் மதிப்பெண் 25.

   ஆக இந்தச் சாதகருக்கு நான்காம் பாவகக் காரகத்தில் (வித்தை, நிலம்) தவிர மற்ற அனைத்துக் காரகங்களும் 100 விழுக்காடு நன்றாக உள்ளது. அதாவது கல்வி, நிலம் காரகங்கள் 75 விழுக்காடும், வீடு, வாகனம், தாய் மற்றும் இதர நான்காம் பாவகப் பலன்கள் 100 விழுக்காடு நன்றாக உள்ளது.

### 5 ஆம் பாவகக் கொடுப்பனை

1. ஐந்தாம் பாவகத்தில் தீயகோள் ஏதும் இல்லை. எனவே மதிப்பெண் 25
2. ஐந்தாம் அதிபதி செவ்வாய் இலக்கினத்திற்கு 8 இல். எனவே மதிப்பெண் இல்லை.
3. ஐந்தாம் பாவகக் காரகக் கோள் குரு இலக்கினத்தில். அதாவது இலக்கினத்திற்கோ அல்லது ஐந்தாம் பாவகத்திற்கோ 8, 12 ஆம் பாவகங்களில் இல்லை. எனவே மதிப்பெண் 25
4. ஐந்தாம் பாவக சர்வாஷ்டகவர்க்கம் 29 ஆகும். 28 க்கு மேல் உள்ளதால் மதிப்பெண் 25.

ஆக இந்தச் சாதகருக்கு ஐந்தாம் பாவகக் காரகத்துவப் பலன்கள் 75 விழுக்காடு நன்றாக உள்ளது. அதாவது நுண்அறிவு, கலைகளில் நாட்டம், இரசனை, காதல், யூகம், குழந்தை, விளையாட்டு போன்ற பலன்கள் 75 விழுக்காடு பலன் அளிக்கும்.

**6 ஆம் பாவகக் கொடுப்பினை**

1. ஆறாம் பாவகத்தில் சுக்கிரன் மற்றும் சனி உள்ளன. ஆறாம் பாவகம் உபஜெய ஸ்தானம் என்கிறபடியால் எல்லாக் கோளும் அமரலாம். எனவே மதிப்பெண் 25.
2. ஆறாம் பாவக அதிபதி 6 இல் இருக்கிறார். எனவே மதிப்பெண் 25.
3. ஆறாம் பாவகக் காரகக் கோள் சனி 6 இல். எனவே மதிப்பெண் 25
4. ஆறாம் பாவகத்தில் சர்வாஷ்டகவர்க்கம் 34. எனவே மதிப்பெண் 25.

ஆறாம் பாவகம் என்பது பாரம்பரிய சோதிடப்படி தீய ஸ்தானம் என எடுத்துக்கொள்கின்றனர். இருப்பினும் 6 ஆம் பாவகம் பொருளாதார ரீதியாக 2 ஆம் பாவகத்திற்குத் துணைநிற்கக் கூடிய பாவகம் ஆகும். அதனால் அகம் மற்றும் புறம் எனப் பிரித்துப் பலன்கள் காணப்பட வேண்டும்.

அதன்படி ஆறாம் பாவகம் 100 விழுக்காடு வலுப் பெற்று உள்ளதால், புறம் தொடர்பான காரகங்களான உடல்உழைப்பு, சேவை (Service) கடன் கிடைத்தல், ஒன்றுக்கு மேற்பட்ட சொத்து, அதன்மூலம் பெறப்படும் வாடகை போன்ற பலன்கள் பொருளாதாரத்திற்கு மேன்மை தருவதாக அமையும். அதேநேரத்தில் அகம் தொடர்பான காரகங்களான நோய், எதிரி, விரோதம், மனஸ்தாபங்கள் போன்றவை சேர்ந்து நடக்கும்.

**7 ஆம் பாவகக் கொடுப்பினை**

1. ஏழாம் பாவகத்தில் தீயகோள் சூரியன். எனவே மதிப்பெண் இல்லை.
2. ஏழாம் பாவக அதிபதி புதன் இலக்கினத்திற்கு 8 இல். எனவே மதிப்பெண் இல்லை.
3. ஏழாம் பாவகக் காரகக் கோள் சுக்கிரன் 7 ஆம் பாவத்திற்கு 12 இல். எனவே மதிப்பெண் இல்லை.
4. ஏழாம் பாவகத்தின் சர்வாஷ்டகவர்க்க பரல்கள் 23 மட்டுமே. எனவே மதிப்பெண் இல்லை.

ஆக இந்தச் சாதகருக்கு 7 ஆம் பாவகக் கொடுப்பினை 100 விழுக்காடு பாதிப்பு அடைந்துள்ளது. ஆகையால் 7 ஆம் பாவகக்

காரகப் பலன்களான திருமண வாழ்க்கை மூலம் பெறப்படும் தாம்பத்திய சுகம், நண்பர்கள், தொழில் கூட்டாளி, பங்காளிகள், வாடிக்கையாளர்கள் போன்ற பலன்களில் பாதிப்பு எற்படும்.

**8 ஆம் பாவகக் கொடுப்பினை**

1. எட்டாம் பாவகத்தில் தீயகோள் செவ்வாய் மற்றும் கேது உள்ளன. எனவே மதிப்பெண் இல்லை.
2. எட்டாம் பாவக அதிபதி 9 இல், எட்டாம் அதிபதி 8 அல்லது 12 ஆம் பாவகங்களில் இருந்தால் மட்டுமே அதிக தீமையைக் கொடுக்கும். எனவே மதிப்பெண் 25.
3. எட்டாம் பாவகக் காரகக் கோள் சனி 6 இல். எனவே மதிப்பெண் 25.
4. எட்டாம் பாவகத்தில் சர்வாஷ்டகவர்க்கம் 24 பரல்கள். எட்டாம் பாவகத்தில் 28 இக்குக் குறைவாக இருப்பது நலம். எனவே மதிப்பெண் 25.

ஆக இந்தச் சாதகருக்கு எட்டாம் பாவகக் கொடுப்பனை 75 விழுக்காடு உள்ளது. எட்டாம் பாவகத்தில் தீயகோள் 25 விழுக்காடு தடைகளைக் கொடுக்கும் மற்ற ஆயுள், அவமானம், பதற்றம், ஒன்றுக்கு மேற்பட்ட நோய், தீராதகடன், தற்கொலை சிந்தனை போன்ற மோசமான பலன்கள் இல்லை.

**9 ஆம் பாவகக் கொடுப்பினை**

1. ஒன்பதாம் பாவகத்தில் தீயகோள் ஏதும் இல்லை. சந்திரன் மட்டுமே உள்ளது. எனவே மதிப்பெண் 25
2. ஒன்பதாம் பாவக அதிபதி சூரியன் 7 இல். எனவே மதிப்பெண் 25.
3. ஒன்பதாம் பாவகக் காரகக் கோள் 7 இல். எனவே மதிப்பெண் 25
4. ஒன்பதாம் பாவகத்தின் சர்வாஷ்டகவர்க்கம் 22 பரல்கள் மட்டுமே.

ஆக ஒன்பதாம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு உள்ளது. ஒன்பதாம் பாவகக் காரகப் பலன்களான தந்தை, குரு, அதிர்ஷ்டம், நீண்ட துாரப் பயணம், ஆய்வு கல்வி போன்ற பலன்கள் 75 விழுக்காடு நன்றாகவே இருக்கும்.

**10 ஆம் பாவகக் கொடுப்பினை**

1. பத்தாம் பாவகத்தில் எந்தக் கோளும் இல்லை. இருந்தாலும் மதிப்பெண் உண்டு 25.

2. பத்தாம் பாவக அதிபதி புதன் 8 இல். மதிப்பெண் இல்லை.
3. பத்தாம் பாவக காரகக் கோளான சூரியன் 7 இல், சனி 6 இல். இரண்டு கோளும் 8 மற்றும் 12 ஆம் பாவகங்களில் இல்லை. ஆகையால் 25 மதிப்பெண் உண்டு.
4. பத்தாம் பாவகத்தின் சர்வாஷ்டகவர்க்கம் 32 பரல்கள். எனவே மதிப்பெண் 25.

ஆக இந்தச் சாதகருக்குப் பத்தாம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு உண்டு. பத்தாம் பாவகக் காரகப் பலன்களான நித்திய பணி, அதன்மூலம் கிடைக்கும் கௌரவம், நிர்வாகத் திறன், பொறுப்புணர்ச்சி, சமுதாயத்தில் பிறர் மதிக்கதக்க நல்லபதவி போன்ற பலன்கள் உண்டு.

**11 ஆம் பாவகக் கொடுப்பினை**

1. பதினொன்றாம் பாவகத்தில் எந்தக் கோளும் இல்லை. உபஜெய ஸ்தானம் ஆகும். ஆகையால் எந்த கோள் இருந்தாலும் 25 மதிப்பெண் உண்டு.
2. பதினொன்றாம் பாவக அதிபதி சுக்கிரன் தனது ஸ்தானத்திற்கு 8 இல். எனவே மதிப்பெண் இல்லை.
3. பதினொன்றாம் பாவகக் காரகக் கோளான குரு 1 இல். எனவே மதிப்பெண் 25
4. பதினொன்றாம் பாவகத்தின் சர்வாஷ்டவர்க்கம் 34. எனவே மதிப்பெண் 25

ஆக இந்தச் சாதகருக்குப் பதினொன்றாம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு நன்றாக உள்ளது. பதினொன்றாம் பாவகக் காரகத்துவப் பலன்களான நோய்எதிர்ப்புத் திறன், திருப்தி, எண்ணங்கள் நிறைவேறும் தன்மை, நலன் விரும்பிகள் ஆகிய பலன்கள் 75 விழுக்காடு வரை கிடைக்கும்.

**12 ஆம் பாவகக் கொடுப்பினை**

1. பன்னிரெண்டாம் பாவகத்தில் தீயகோள் ஏதும் இல்லை எனவே மதிப்பெண் 25.
2. பன்னிரெண்டாம் பாவக அதிபதி செவ்வாய் 8 இல், மதிப்பெண் இல்லை.
3. பன்னிரெண்டாம் பாவகக் காரகக் கோள் சனி 6 இல். மதிப்பெண் உண்டு 25.

4. பன்னிரெண்டாம் பாவகத்தின் சர்வாஷ்டகவர்க்கம் 24 ஆகும். 8 மற்றும் பன்னிரெண்டாம் பாவகத்திற்குச் சர்வாஷ்டகவர்கம் குறைவாக இருப்பது நல்லது. அதன் அடிப்படையில் 25 மதிப்பெண் உண்டு.

ஆக இந்தச் சாதகரது பன்னிரெண்டாம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு ஆகும். அதன்படி பன்னிரெண்டாம் பாவகத்தின் காரகத்துவமான விரையச் செலவு, மருத்துவமனைச் செலவு, முதலீடுகள், இரண்டாம் தொழில் மற்றும் அதன்மூலம் பெறப்படும் வருமானம், முடக்கம், உடல் உறுப்புகளை இழத்தல் போன்ற தீய பலன்கள் ஏற்படாது.

இதுவரை ஒரு சாதகத்திற்குப் பன்னிரு பாவகக் கொடுப்பினை நான்கு விதிகளின் படி எவ்வாறு உள்ளது என்பதைக் கணித்து உள்ளோம். இந்தக் கணிப்புகளின்படி பன்னிரு பாவகக் கொடுப்பினையும் ஒரு அட்டவணை மூலம் கீழே விளக்கப்பட்டுள்ளது.

பன்னிரு பாவகக் கொடுப்பினை அட்டவணை...

| பாவகம் | கொடுப்பினை |
|---|---|
| 1 | 100% |
| 2 | 25% |
| 3 | 50% |
| 4 | 75% |
| 5 | 75% |
| 6 | 100% |
| 7 | 0% |
| 8 | 75% |
| 9 | 75% |
| 10 | 75% |
| 11 | 75% |
| 12 | 75% |

இனிப் பன்னிருப் பாவகக் கொடுப்பினையைத் தசாபுத்தியுடன் இணைத்து எவ்வாறு பலன் கூறுவது எனப் பார்ப்போம்.

கொடுப்பினையை இராசிக் கட்டம் கொண்டு நிர்ணயம் செய்ய வேண்டும், ஆனால் தசாபுத்தி பலன்களை ஸ்ரீபதி பாவகக் கட்டம் கொண்டு கூற வேண்டும். அதன்படி மேலே உள்ள சாதகத்திற்கானப் பாவகக் கட்டம் கீழ்கண்டவாறு அமையும்.

| 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|
| | | சனி<br>சுக் | சூரி<br>கேது |
| 3 | K.S.SUNDARA RAJAN<br>14-07-1972 18:24:00<br>Nagercoil,T.N.<br>ஸ்ரீபதி பாவகம்<br>வயது<br>47-வருடம் 03-மாதம் 03-நாள் | | 8 செவ்<br>புத |
| 2 | | | 9 சந் |
| 265.03.23லக்<br>ராகு | குரு | | |
| 1 | 12 | 11 | 10 |

DEG

ஸ்ரீபதி பாவகப்படி

| திரிகோணம் | கோள்கள் |
|---|---|
| 1,5,9 | ராகு சந் |
| 2,6,10 | சனி சுக் |
| 3,7,11 | சூரி கேது |
| 4,8,12 | செவ் புத குரு |
| சுக் திசை இருப்பு | |
| 16-வருடம் 08-மாதம் 09-நாள் | |

இனிப் பாவகக் கொடுப்பினையையும் தசாபுத்திப் பலன்களையும் இணைத்துப் பலன் கூறுவது பற்றி பார்ப்போம்.

**ஒன்றாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்திப் பலன்களும்.**

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் ஒன்றாம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் ஒன்றாம் பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் ஒன்றாம் பாவகம் பன்மடங்கு இயங்கும்.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் ஒன்றாம் பாவகம் இயங்காது.

“அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்” என்கிற விதிப்படி ஒன்றாம் பாவகம் ஒற்றைப்படைப் பாவகமாக வருவதால், ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஒன்றாம் பாவகம் நன்றாக இயங்கும். இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஒன்றாம் பாவகம் பாதிக்கப்படும், அதுவும் குறிப்பாக 4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் ஒன்றாம் பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

ஆனால் இந்தச் சாதகருக்கு இலக்கினத்தின் கொடுப்பினை 100 விழுக்காடு நன்றாக இருப்பதால் 4, 8, 12 ஆம் பாவகப் புத்திகள் இலக்கினத்தின் காரகத்துவ பலன்களானத் தோற்றம், சுய கௌரவம், சுதந்திரம், ஆற்றல், செயல் திறன், ஆரோக்கியம் போன்றவற்றில் அதிக பாதிப்பை ஏற்படுத்தாது.

**இரண்டாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்திப் பலன்களும்**

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் இரண்டாம் பாவகம் இயங்காது.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் இரண்டாம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் இரண்டாம் பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் இரண்டாம் பாவகம் பன்மடங்கு இயங்கும்.

“அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்” என்கிற விதிப்படி இரண்டாம் பாவகம் இரட்டைப்படைப் பாவகமாக வருவதால், இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் இரண்டாம் பாவகம் நன்றாக இயங்கும். ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் இரண்டாம் பாவகம் பாதிக்கப்படும், அதுவும் குறிப்பாக 1, 5, 9 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் இரண்டாம் பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

இந்தச் சாதகருக்கு இரண்டாம் பாவகக் கொடுப்பினை 25 விழுக்காடு மட்டுமே உள்ளதால் இரட்டைப்படைப் புத்திகளில் பணம் ஈட்டும் திறமை ஓரளவு இருக்கும். ஆனால் ஒற்றைப்படைப் புத்திகளில் அதுவும் குறிப்பாக 1, 5, 9 ஆம் பாவகப் புத்திகளில் இரண்டாம் பாவகக் காரகத்துவப் பலன்கள் பெரிதும் பாதிக்கப்படும்.

**மூன்றாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்தி பலன்களும்.** ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் மூன்றாம் பாவகம் பன்மடங்கு இயங்கும்.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் மூன்றாம் பாவகம் இயங்காது.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் மூன்றாம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் மூன்றாம் பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

“அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்” என்கிற விதிப்படி மூன்றாம் பாவகம் ஒற்றைப்படைப் பாவகமாக வருவதால், ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் மூன்றாம் பாவகம் நன்றாக இயங்கும். இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் மூன்றாம் பாவகம் பாதிக்கப்படும், அதுவும்

குறிப்பாக 2, 6, 10 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் மூன்றாம் பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

இந்தச் சாதகருக்கு மூன்றாம் பாவகக் கொடுப்பினை 50 விழுக்காடு மட்டுமே இருப்பதால் ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் மூன்றாம் பாவகம் ஓரளவு இயங்கும். ஆனால் 2, 6, 10 ஆம் பாவகப் புத்திகளில் மூன்றாம் பாவகக் காரகத்துவப் பலன்களான சகோதரத்துடனான உறவு, தகவல் தொடர்பு சாதனங்கள், தகவல் தொடர்பு, தைரியம், வீரியம், பதிவுகள், புதுமுகத் தொடர்பு, முயற்சி, சிறுபயணங்கள், சுயவிளம்பரம் போன்றவற்றில் அதிகம் பாதிப்பை ஏற்படுத்தும்.

**நான்காம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்திப் பலன்களும்**

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி,

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திரப் புத்திகளில் நான்காம்பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் நான்காம்பாவகம் பன்மடங்கு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் நான்காம்பாவகம் இயங்காது.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் நான்காம்பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

“அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்” என்கிற விதிப்படி நான்காம்பாவகம் இரட்டைப்படைப் பாவகமாக வருவதால், இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் நான்காம் பாவகம் நன்றாக இயங்கும். ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் நான்காம்பாவகம் பாதிக்கப்படும், அதுவும் குறிப்பாக 3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் நான்காம் பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

இந்தச் சாதகருக்கு நான்காம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு நன்றாக உள்ளதால் இரட்டைப்படைப் புத்திகளில் அசையும், அசையாச் சொத்து மற்றும் அதன்மூலம் பெறப்படும் உடல்சுகம், இயந்திரத்தனமானச் செயல், மனப்பாட அறிவியல் கல்வி போன்ற பலன்கள் நன்றாக இருக்கும்.

ஆனால் ஒற்றைப்படைப் புத்திகளில் அதுவும் குறிப்பாக 3, 7, 11 ஆம் பாவகப் புத்திகளில் நான்காம் பாவகக் காரகத்துவப் பலன்கள் இலேசாகப் பாதிக்கப்படும்.

**ஐந்தாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்தி பலன்களும்.**
ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் ஐந்தாம்பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் ஐந்தாம்பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் ஐந்தாம்பாவகம் பன்மடங்கு இயங்கும்.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் ஐந்தாம்பாவகம் இயங்காது.

‘‘அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்’’ என்கிற விதிப்படி ஐந்தாம்பாவகம் ஒற்றைப்படைப் பாவகமாக வருவதால், ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஐந்தாம் பாவகம் நன்றாக இயங்கும். இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஐந்தாம்பாவகம் பாதிக்கப்படும், அதுவும் குறிப்பாக 4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் ஐந்தாம்பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

இந்தச் சாதகருக்கு ஐந்தாம்பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு நன்றாக இருப்பதால் ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் ஐந்தாம்பாவகம் நன்றாக இயங்கும். ஆனால் 4, 8, 12 ஆம் பாவகப் புத்திகளில் ஐந்தாம்பாவகக் காரகத்துவப் பலன்களான நுண்அறிவு, கலை, இரசனை, காதல், குழந்தை, விளையாட்டு போன்றவற்றில் இலேசானப் பாதிப்பை ஏற்படுத்தும்.

**ஆறாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்திப் பலன்களும்**
ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் ஆறாம்பாவகம் இயங்காது.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் ஆறாம்பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் ஆறாம்பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் ஆறாம்பாவகம் பன்மடங்கு இயங்கும்.

“அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்” என்கிற விதிப்படி ஆறாம்பாவகம் இரட்டைப்படைப் பாவகமாக வருவதால், இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஆறாம் பாவகம் நன்றாக இயங்கும். ஒன்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஆறாம்பாவகம் பாதிக்கப்படும், அதுவும் குறிப்பாக 1, 5, 9 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் ஆறாம்பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

இந்தச் சாதகருக்கு இரண்டாம் பாவகக் கொடுப்பினை 100 விழுக்காடு உள்ளது. எனவே இரட்டைப்படைப் புத்திகளில் உடல்உழைப்பு, மாதச் சம்பளத்திற்குப் பிறரிடம் செய்யும் சேவை, போட்டிபோடும் குணம், பிற மனிதர்களை ஆதிக்கம் செலுத்துதல், திருமண உறவை முறிப்பது, தாம்பத்திய சுகத்தைத் தானே மறுப்பது, கடன், நோய், வழக்கு, எதிரி போன்ற பலன்கள் அனைத்தும் நன்கு நடக்கும். ஒற்றைப்படைப் புத்திகளில் அதுவும் குறிப்பாக 1, 5, 9 ஆம் பாவகப் புத்திகளில் ஆறாம்பாவகக் காரகத்துவப் பலன்கள் இலேசாக குறையும்.

**ஏழாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்தி பலன்களும்.**

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி,

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் ஏழாம் பாவகம் பன்மடங்கு இயங்கும்.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் ஏழாம் பாவகம் இயங்காது.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் ஏழாம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் ஏழாம் பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

“அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்” என்கிற விதிப்படி ஏழாம்பாவகம் ஒற்றைப்படைப் பாவகமாக வருவதால், ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஏழாம் பாவகம் நன்றாக இயங்கும். இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஏழாம்பாவகம் பாதிக்கப்படும், அதுவும் குறிப்பாக 6, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் ஏழாம்பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

இந்தச் சாதகருக்கு ஐந்தாம்பாவகக் கொடுப்பினை பூஜ்யம் விழுக்காடு ஆகும். இருப்பினும் ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் ஏழாம்பாவகம் ஓரளவு இயங்கும். ஆனால் இரட்டைப்படைப் புத்திகளில் குறிப்பாக 6, 8, 12 ஆம் பாவகப் புத்திகளில் ஏழாம்பாவகக் காரகத்துவப் பலன்களான வாழ்க்கைத் துணை, தாம்பத்திய சுகம், நண்பர்கள், தொழில் கூட்டாளிகள், வாடிக்கையாளர்கள், சக மனிதர்களுடன் உண்டான உறவுநிலை போன்றவற்றில் மிக கடுமையான பாதிப்பை ஏற்படுத்தும்.

**எட்டாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்திப் பலன்களும்**

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி,

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் எட்டாம்பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் எட்டாம்பாவகம் பன்மடங்கு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் எட்டாம்பாவகம் இயங்காது.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் எட்டாம்பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

“அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்” என்கிற விதிப்படி எட்டாம்பாவகம் இரட்டைப்படைப் பாவகமாக வருவதால், இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் எட்டாம் பாவகம் நன்றாக இயங்கும். ஒன்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் எட்டாம் பாவகத் தாக்கம் குறையும். அதுவும்

குறிப்பாக 3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் எட்டாம்பாவகத் தாக்கம் பெரிதும் குறையும்.

இந்தச் சாதகருக்கு எட்டாம்பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு நன்றாக உள்ளது. எனவே இரட்டைப்படைப் புத்திகளில் மரணபயம், கண்டம், ஏமாற்றம், தோல்வி, ஒன்றுக்கு மேற்பட்ட நோய், உடல் உறுப்புகள் சேதப்படுதல், அவமானம், பதட்டம், புத்தி பேதலிப்பு, தற்கொலை சிந்தனை போன்ற பலன்கள் 25 விழுக்காடு இருக்கும். ஆனால் ஒற்றைப்படைப் புத்திகளில் அதுவும் குறிப்பாக 3, 7, 11 ஆம் பாவகப் புத்திகளில் நான்காம்பாவகக் காரகத்துவப் பலன்கள் சுத்தமாக இருக்காது.

**ஒன்பதாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்தி பலன்களும்.** ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி,

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் ஒன்பதாம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் ஒன்பதாம் பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் ஒன்பதாம் பாவகம் பன்மடங்கு இயங்கும்.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் ஒன்பதாம் பாவகம் இயங்காது.

"அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்" என்கிற விதிப்படி ஒன்பதாம் பாவகம் ஒற்றைப்படைப் பாவகமாக வருவதால், ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஐந்தாம் பாவகம் நன்றாக இயங்கும். இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் ஐந்தாம்பாவகம் பாதிக்கப்படும், அதுவும் குறிப்பாக 4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் ஒன்பதாம்பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

இந்தச் சாதகருக்கு ஒன்பதாம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு நன்றாக இருப்பதால் ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் ஐந்தாம்பாவகம் நன்றாக இயங்கும். ஆனால் 4, 8, 12 ஆம் பாவகப் புத்திகளில் ஐந்தாம்பாவகக் காரகத்துவப் பலன்களான தந்தை உடனான உறவு, குரு, வழிகாட்டி, ஆன்மீகம், கடவுள்பக்தி, நம்பிக்கை,

தெய்வ அனுக்கிரகம், தூரதேசப் பயணம், யாத்திரை போன்றவற்றில் இலேசான பாதிப்பை ஏற்படுத்தும்.

**பத்தாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்திப் பலன்களும்** ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி,

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் பத்தாம் பாவகம் இயங்காது.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் பத்தாம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் பத்தாம் பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் பத்தாம் பாவகம் பன்மடங்கு இயங்கும்.

"அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்" என்கிற விதிப்படி பத்தாம் பாவகம் இரட்டைப்படைப் பாவகமாக வருவதால், இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் பத்தாம் பாவகம் நன்றாக இயங்கும். ஒன்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் பத்தாம் பாவகம் பாதிக்கப்படும், அதுவும் குறிப்பாக 1, 5, 9 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் பத்தாம் பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

இந்தச் சாதகருக்குப் பத்தாம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு உள்ளது. எனவே இரட்டைப்படைப் புத்திகளில் நிததிய பணி, பொறுப்பான செயல்கள், கடமை, நிர்வாகம், மேலாண்மை, வேலை செய்யக் கூடிய இடத்தில் கௌரவம், அதிகாரம், பதவி, விருது போன்ற பலன்கள் அனைத்தும் நன்கு நடக்கும். ஒற்றைப்படைப் புத்திகளில் அதுவும் குறிப்பாக 1, 5, 9 ஆம் பாவகப் புத்திகளில் பத்தாம் பாவகக் காரகத்துவப் பலன்கள் 25 விழுக்காடு குறையும்.

**பதினொன்றாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்தி பலன்களும்.** ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் பதினொன்றாம் பாவகம் பன்மடங்கு இயங்கும்.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் பதினொன்றாம் பாவகம் இயங்காது.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் பதினொன்றாம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் பதினொன்றாம் பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

''அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்'' என்கிற விதிப்படி பதினொன்றாம் பாவகம் ஒற்றைப்படைப் பாவகமாக வருவதால், ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் பதினொன்றாம் பாவகம் நன்றாக இயங்கும். இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் பதினொன்றாம் பாவகம் பாதிக்கப்படும், அதுவும் குறிப்பாக 2, 6, 10 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் பதினொன்றாம் பாவகம் அதிகம் பாதிக்கப்படும்.

இந்தச் சாதகருக்குப் பதினொன்றாம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு ஆகும். எனவே ஒற்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் பதினொன்றாம் பாவகம் நன்கு இயங்கும். ஆனால் இரட்டைப்படைப் புத்திகளில் குறிப்பாக 2, 6, 10 ஆம் பாவகப் புத்திகளில் பதினொன்றாம் பாவகக் காரகத்துவப் பலன்களான நோய் எதிர்ப்புத் திறன், திருப்தி, எண்ணங்கள், இன்பம், மகிழ்ச்சி, இருப்பதை அப்படியே ஏற்றுக்கொள்ளுதல், ஒருமித்த கருத்து உடையவர்களின் நட்பு, நலன் விரும்பிகளிடமிருந்து ஆலோசனை போன்றவற்றில் இலேசான பாதிப்பை ஏற்படுத்தும்.

**பன்னிரெண்டாம் பாவகக் கொடுப்பினையும், தசாபுத்திப் பலன்களும்**

ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட தசாபுத்தி விதிகளின்படி

1, 5, 9 ஆம் பாவங்களில் உள்ள இராகு மற்றும் சந்திர புத்திகளில் பன்னிரெண்டாம் பாவகம் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

2, 6, 10 ஆம் பாவங்களில் உள்ள சுக் மற்றும் சனி புத்திகளில் பன்னிரெண்டாம் பாவகம் பன்மடங்கு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள சூரியன் மற்றும் கேது புத்திகளில் பன்னிரெண்டாம் பாவகம் இயங்காது.

4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள செ, புத, குரு புத்திகளில் பன்னிரெண்டாம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும்.

“அகம் புறத்தை எதிர்க்கும், புறம் அகத்தை எதிர்க்கும்” என்கிற விதிப்படி பன்னிரெண்டாம் பாவகம் இரட்டைப்படைப் பாவகமாக வருவதால், இரட்டைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் பன்னிரெண்டாம் பாவகம் நன்றாக இயங்கும். ஒன்றைப்படைப் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் பன்னிரெண்டாம் பாவகத் தாக்கம் குறையும். அதுவும் குறிப்பாக 3, 7, 11 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் பன்னிரெண்டாம் பாவகத் தாக்கம் பெரிதும் குறையும்.

இந்தச் சாதகருக்குப் பன்னிரெண்டாம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு நன்றாக உள்ளது. எனவே இரட்டைப்படைப் புத்திகளில் திட்டமிடாதச் செலவுகள், இயலாமை, தனிமை, பிறர் சாதகரை ஒதுக்கி வைப்பது, வீட்டில் உள்ளவர்களுக்கு மருத்துவச் செலவு, முதலீடுகள், ஒன்றுக்கு மேற்பட்ட தொழில் மற்றும் அதன்மூலம் பெறப்படும் இரண்டாவது வருமானம், தொழில் கிளைகள், மறதி, காணாமல் போகுதல், சிறைச்சாலை, தூக்கமின்மை போன்ற பலன்கள் 25 விழுக்காடு இருக்கும். ஆனால் ஒற்றைப்படைப் புத்திகளில் அதுவும் குறிப்பாக 3, 7, 11 ஆம் பாவகப் புத்திகளில் பன்னிரெண்டாம் பாவகக் காரகத்துவப் பலன்கள் சுத்தமாக இருக்காது.

## தசா பலன் நிர்ணயம்

ஒரு சாதகத்தில் தசா என்பது எண்ணம், இலக்கு எனக் கொள்ளலாம். அதாவது சாதகர் எங்கு செல்லவேண்டும், அதற்கு எந்தத் திசையில் செல்ல வேண்டும் என்பது நோக்கம் அல்லது எண்ணம் எனக் கொள்ளலாம். ஆனால் பயணம் என்பது சாதகரின் எண்ணத்தின்படி அமையுமா என்பதினைப் புத்தியை நடத்தக கூடிய கோள்தான் தீர்மானம் செய்கின்றது. அதாவது சாதகரின் பயணம் என்பது, சாதகரின் எண்ணத்தின்படியும் அமையலாம் அல்லது எண்ணத்திற்கு எதிராகவும் அமையலாம். புத்தியை நடத்துகின்ற கோள்தான் இதனை தீர்மானம் செய்கின்றது.

உதாரணம் : கன்னியாகுமரியில் இருந்து டெல்லிக்குப் பயணம் செய்ய வேண்டும் என வைத்துக்கொள்வோம். இதற்குச் சாதகர் வடக்கு நோக்கி பயணம் செய்ய வேண்டும். இதுவே நோக்கம் (Target) அல்லது எண்ணம் ஆகும். ஒரு தசாவின் சுய புத்தியானது தசா என்ன சொல்கிறதோ அதனை அப்படியே பின்பற்றும். அதாவது இங்குத் தசா வடக்கு நோக்கிய பயணத்தைக் காட்டுவதால் சுயபுத்தியில் பயணம் வடக்குநோக்கி அமையும். அடுத்துவரும் புத்திகளும் வடக்கு நோக்கிப் பயணம் செய்ய வேண்டும் என்கிற கட்டாயம் கிடையாது, புத்தியை நடத்தக் கூடிய கோள் எந்தத் திசையைத் தேர்ந்து எடுக்கிறதோ அந்தத் திசையிலேயே சாதகரின் பயணம் அமையும். அது வடக்குநோக்கியும் இருக்கலாம், மேற்குநோக்கியும் இருக்கலாம், கிழக்குநோக்கியும் இருக்கலாம் அல்லது சாதகர் போக வேண்டிய திசைக்கு எதிர்த் திசையான தெற்குத் திசையாகவும் கூட இருக்கலாம். இதன்படி தசா கொடுக்க வேண்டிய பலன்களைச் சேர்ந்து கொடுக்கக் கூடிய புத்திகளும் இருக்கும் அதேநேரத்தில் தசா கொடுக்க வேண்டிய பலனிற்கு எதிர்ப்பதமாகவும் புத்தி செயல்பட முடியும்.

இன்னும் விளக்கமாகப் பார்ப்போம், பன்னிரு இராசிகளுக்கும் நான்கு திசை வீதம் பிரித்துக் கொடுத்து உள்ளோம். அதன்படி

மேஷம், சிம்மம், தனுசு…… கிழக்குத் திசை எனவும்,

இடபம், கன்னி, மகரம்……. தெற்குத் திசை எனவும்,

மிதுனம், துலாம், கும்பம்….. மேற்குத் திசை எனவும்,

கடகம், விருட்சிகம், மீனம்…. வடக்குத் திசை எனவும், கொள்கின்றோம்.

உதாரணத்திற்குத் திசையை நடத்தக் கூடிய கோள் கடகத்தில் இருப்பதாக வைத்துக்கொள்வோம். கடக இராசியானது வடக்குத் திசையைக் காட்டுகிறது.

கடகம், விருட்சிகம், மீனத்தில் ஆகிய இராசிகளில் உள்ள கோள்கள், அதனுடைய புத்திக் காலத்தில் திசையை நடத்தக் கூடிய கோள் காட்டிய வடக்குத் திசையை நோக்கிப் பயணம் செய்யும்.

மேஷம், சிம்மம், தனுசு ஆகிய இராசிகளில் உள்ள கோள்கள், அதனுடைய புத்திக் காலத்தில் கிழக்குத் திசையை நோக்கிப் பயணம் செய்யும்.

மிதுனம், துலாம், கும்பம் ஆகிய இராசிகளில் உள்ள கோள்கள், அதனுடைய புத்திக் காலத்தில் மேற்குத் திசையை நோக்கிப் பயணம் செய்யும்.

இடபம், கன்னி, மகரம் ஆகிய இராசிகளில் உள்ள கோள்கள், அதனுடைய புத்தி காலத்தில் தெற்குத் திசையை நோக்கிப் பயணம் செய்யும். அதாவது தசாவை நடத்த கூட கோள் காட்டிய திசைக்கு எதிராக பயணம் அமையும். இந்த உதாரணம் நான்கு திசைகளை விளக்குவதற்கு மட்டுமே எடுத்துக்கொள்ளப்பட்டது. இதற்கும் தசாபுத்தி பலனிற்கும் நேரடித் தொடர்பு கிடையாது. தசாபுத்திப் பலன்கள் பஞ்சபூதத் தத்துவத்தின் அடிப்படையில் எடுத்துக்கொள்ளப்படுகிறது. அதன்படி,

மேஷம், சிம்மம், தனுசு…… நெருப்பு இராசிகள் எனவும்,

இடபம், கன்னி, மகரம்……. நிலம் இராசிகள் எனவும்,

மிதுனம், துலாம், கும்பம்….. வாயு இராசிகள் எனவும்,

கடகம், விருட்சிகம், மீனம்… நீர் இராசிகள் எனவும், கொள்கின்றோம்.

ஆகாய தத்துவத்திற்குள் நெருப்பு, நிலம், வாயு மற்றும் நீர் ஆகிய நான்கு பூதங்களும் அடங்கி விடுகின்றன. பன்னிரு இராசிகளையும் ஆகாயம் தன்னகத்தே கொண்டுள்ளதால் ஆகாய தத்துவம் தனியாக இடம்பெறவில்லை.

**பஞ்சபூதத் தத்துவத்தின்படி நட்பு**

நெருப்பிற்கு வாயு நட்பு... வாயுவிற்கு நெருப்பு நட்பு ஆகும்.

நிலத்திற்கு நீர் நட்பு....... நீருக்கு நிலம் நட்பு ஆகும்.

**பஞ்சபூதத் தத்துவத்தின்படி பகை**

நெருப்பிற்கு, நீர் பகை,

நீருக்கு, வாயு பகை,

வாயுவிற்கு, நிலம் பகை,

நிலத்திற்கு, நெருப்பு பகை ஆகும்.

**பஞ்சபூதத் தத்துவத்தின்படி சமம்**

நெருப்பிற்கு நிலம் சமம்.

நிலத்திற்கு வாயு சமம்,

வாயுவிற்கு நீர் சமம்,

நீருக்கு நெருப்பு சமம் ஆகும்.

இங்கு நெருப்பிற்கு நீர் பகை என்றும், நீருக்கு நெருப்பு சமம் என்றும் வருகிறது. இதை எப்படி எடுத்துக்கொள்ள வேண்டும் என்றால் ஒன்பது கோள்களின் நட்பு, பகை, சமம் பார்க்கும்போது, புதனிற்குச் சந்திரன் பகை என்று வரும், ஆனால் சந்திரனிற்குப் புதன் சமம் என்று வரும். அதே போல்தான் நெருப்பிற்கு நீர் பகை என்றும், நீருக்கு நெருப்பு சமம் என இங்கும் வரும்.

இந்தப் பஞ்சபூதத் தத்துவம் பாரம்பரிய வைத்தியத்தில் முழுமையாகக் கடைப்பிடிக்கப்படுகிறது. உதாரணத்திற்கு ஒருவருக்கு வாயுத் தொல்லை என்றால் வாயு உற்பத்தியாவதற்கு வெப்பமே காரணம், அதனால் வெப்பத்தைக் குறைக்க மருந்து கொடுப்பார்கள். வெப்பம் குறைந்து, வாயுத் தொல்லை தானாகச் சரியாகும். இங்கு நமது ஆய்விற்குத் தசாபுத்திப் பலன் பாக்கப் பஞ்சபூதத் தத்துவத்தை எடுத்துக்கொள்கிறோம். அதன்படி, தசாவை நடத்த கூடிய கோள் நெருப்பு இராசிகளில் இருந்தால், நெருப்பு இராசிகளில் உள்ள கோள்களின் புத்தியிலும், நெருப்புக்கு நட்பு இராசியான வாயு இராசிகளில் உள்ள கோள்களின் புத்திக் காலத்திலும் தசாபலன் உண்டு. நெருப்புக்குச் சமமான நிலம் இராசிகளில் உள்ள கோள்களின் புத்திக் காலத்தில் தசாபலன் சுமாராக, இலேசாக வேலை செய்யும். அதாவது தசாபலன் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயக்கும் என எடுத்துக்கொள்கிறோம். அதேநேரத்தில் புத்தியை நடத்தக் கூடிய கோள்

நெருப்பு இராசிக்குப் பகை இராசியான நீர் இராசிகளில் இருந்தால் தசாபலன் கிடையாது. அதாவது தசாபலனிற்கு எதிராக நடக்கும். இந்த நிலையைத் "தசா பலன் முறிவு" (தசா பலன் முறிவு ) எனப் பெயர் வைத்து உள்ளோம். ஆக

தசாவை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகத்தில் இருந்து, புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகம்…

1, 5, 9 அல்லது 3, 7, 11 ஆக இருந்தால் தசாபலன் உண்டு.

2, 6, 10 ஆக இருந்தால் தசாபலன் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு உண்டு.

4, 8, 12 ஆக இருந்தால் தசாபலன் கிடையாது. தசா பலன் முறிவு என எடுத்துக்கொள்கிறோம்.

பல முக்கியமான பலன்களைத் தீர்மானம் செய்கின்ற முக்கிமான பணியினை இந்தத் "தசா பலன் முறிவு" செய்து வருகின்றது என்பது இந்த ஆய்வுமூலம் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. இதே தசா பலன் முறிவு பாரம்பரிய சோதிடத்தில் **"தசாநாதனுக்கு 6, 8, 12 - இல் புத்திநாதன் இருந்தால் அவர் தசாநாதனுக்குப் பகைவராகிறார்"**[19] என்கிற கருத்து சொல்லப்பட்டுள்ளது.

பஞ்சபூதத் தத்துவத்தின்படி தசாவை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகமும், புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற பாவகமும் எவ்வாறு இயங்கும் என்று ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

**1. தசாவை நடத்தக் கூடிய கோள் நெருப்பு இராசிகளில் அமர்ந்தால்.**

நெருப்பு (மேசம், சிம்மம், தனுசு) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளிலும், நெருப்புக்கு நட்பான வாயு (மிதுனம், துலாம், கும்பம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளிலும் தசாபலன் நடக்கும்.

நெருப்பிற்குச் சமமான நில (இடபம், கன்னி, மகரம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்தியில் தசாபலன் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

நெருப்பிற்குப் பகையான நீர் (கடகம், விருட்சிகம், மீனம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளில் தசாபலன் தடைப்படும். அதாவது தசா பலன் முறிவு ஏற்படும்.

---

[19] எஸ்.எம். சதாசிவம், உத்திர காலாமிர்தம், ப 194

**2. தசாவை நடத்த கூடிய கோள் நிலம் இராசிகளில் அமா்ந்தால்.**

நில (இடபம், கன்னி, மகரம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளிலும், நிலத்திற்கு நட்பான நீா் (கடகம், விருட்சிகம், மீனம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளிலும் தசாபலன் நடக்கும்.

நிலத்திற்குச் சமமான வாயு (மிதுனம், துலாம், கும்பம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்தியில் தசாபலன் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

நிலத்திற்குப் பகையான நெருப்பு (மேசம், சிம்மம், தனுசு) இராசிகளில உள்ள கோள்களின் புத்திகளில் தசா பலன் தடைப்படும். அதாவது தசா பலன் முறிவு ஏற்படும்.

**3. தசாவை நடத்த கூடிய கோள் வாயு இராசிகளில் அமா்ந்தால்.**

வாயு (மிதுனம், துலாம், கும்பம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளிலும், வாயுவிற்கு நட்பான நெருப்பு (மேஷம், சிம்மம், தனுசு) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளிலும் தசாபலன் நடக்கும்.

வாயுவிற்குச் சமமான நீா் (கடகம், விருட்சிகம், மீனம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்தியில் தசாபலன் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

வாயுவிற்குப் பகையான நில (இடபம், கன்னி, மகரம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளில் தசா பலன் தடைப்படும். அதாவது தசா பலன் முறிவு ஏற்படும்.

**4. தசாவை நடத்த கூடிய கோள் நீா் இராசிகளில் அமா்ந்தால்.**

நீா் (கடகம், விருட்சிகம், மீனம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளிலும், நீருக்கு நட்பான நில (இடபம், கன்னி, மகரம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளிலும் தசாபலன் நடக்கும்.

நீருக்குச் சமமான நெருப்பு (மேசம், சிம்மம், தனுசு) இராசிகளில் உள்ள கோள்களின் புத்தியில் தசாபலன் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

நீருக்குப் பகையான வாயு (மிதுனம், துலாம், கும்பம்) இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளில் தசாபலன் தடைப்படும். அதாவது தசா பலன் முறிவு ஏற்படும்.

## தசா முறிவு பலன் உதாரணம் 1

இந்தச் சாதகரின் தந்தை இந்தச் சாதகத்தைக் கொடுத்துப் பார்க்கச் சொன்னார்.

Tamilnadu Astro Logical Institute (TALI) 98949 20196

Entry... Bhava... Rasi_D9... Rect... Transit... Nadi D1_Bh Print... Exit.

| 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|
|  | ராகு | சூரி | புத சுக் |
| 4: குரு | SURESH KUMAR<br>12-06-1986 17:50:00<br>Tiruchchirappalli,T.N.<br>ஸ்ரீபதி பாவகம்<br>வயது<br>33-வருடம் 04-மாதம் 06-நாள் |  | 9: சந் |
| 3: |  |  | 10: |
| 2: செவ் | 1: 227.38.21லக் சனி | 12: கேது | 11: |

DEG

ஸ்ரீபதி பாவகப்படி

| திரிகோணம் | கோள்கள் |
|---|---|
| 1,5,9 | சனி சந் |
| 2,6,10 | செவ் ராகு |
| 3,7,11 | சூரி |
| 4,8,12 | குரு புத சுக் கேது |
| புத திசை இருப்பு | |
| 09-வருடம் 10-மாதம் 14-நாள் | |

| திசைகள் | |
|---|---|
| புத | 28-04-1979-27-04-1996 |
| கேது | 27-04-1996-28-04-2003 |
| சுக் | 28-04-2003-28-04-2023 |
| சூரி | 28-04-2023-27-04-2029 |
| சந் | 27-04-2029-28-04-2039 |
| செவ் | 28-04-2039-28-04-2046 |
| ராகு | 28-04-2046-27-04-2064 |
| குரு | 27-04-2064-27-04-2080 |
| சனி | 27-04-2080-28-04-2099 |

| திசை புக்திகள் | | |
|---|---|---|
| சுக் | சுக் | 28-04-2003-27-08-2006 |
| சுக் | சூரி | 27-08-2006-28-08-2007 |
| சுக் | சந் | 28-08-2007-27-04-2009 |
| சுக் | செவ் | 27-04-2009-27-06-2010 |
| சுக் | ராகு | 27-06-2010-27-06-2013 |
| சுக் | குரு | 27-06-2013-26-02-2016 |
| சுக் | சனி | 26-02-2016-28-04-2019 |
| சுக் | புத | 28-04-2019-26-02-2022 |
| சுக் | கேது | 26-02-2022-28-04-2023 |

| திசை புக்தி அந்தரங்கள் | | | |
|---|---|---|---|
| சுக் | புத | புத | 28-04-2019-21-09-2019 |
| சுக் | புத | கேது | 21-09-2019-21-11-2019 |
| சுக் | புத | சுக் | 21-11-2019-11-05-2020 |
| சுக் | புத | சூரி | 11-05-2020-02-07-2020 |
| சுக் | புத | சந் | 02-07-2020-26-09-2020 |
| சுக் | புத | செவ் | 26-09-2020-26-11-2020 |
| சுக் | புத | ராகு | 26-11-2020-30-04-2021 |
| சுக் | புத | குரு | 30-04-2021-15-09-2021 |
| சுக் | புத | சனி | 15-09-2021-26-02-2022 |

சாதகம் பார்த்த நாள்: 09.05.2005 ஆகும். அப்போது இவருக்கு நடைபெற்ற தசாபுத்தி சுக்கிர திசையில் சுக்கிர புத்தி ஆகும். தசாபுத்தியை நடத்தக் கூடிய கோள் 8 இல் இருந்தபடியால், இலக்கினத்தைப் பாதிக்கக் கூடிய பலன்கள் நடைபெற்று இருக்கும், சுக்கிர புத்தி முடிய இன்னும் மூன்றுமாதங்கள் உள்ளன, அதுவரை கவனமாக இருக்க வேண்டும் என ஆய்வாளரால் பலன் கூறப்பட்டது. அதன்பின் சாதகரின் தந்தை சாதகருக்கு சுக்கிர தசாபுத்தியில் என்ன நடந்தது என்பதை விவரித்தார்.

சாதகர் தனது வீட்டின் இரண்டாவது மாடியில் உள்ள தண்ணீர்த் தொட்டியின்மேல் படுத்துக்கொண்டு தன்னுடன் கல்லூரியில் படிக்கும் ஒரு பெண்ணுடன் அலைபேசியில் பேசிக்கொண்டு இருந்துள்ளார். சிறிது கவனக்குறைவால் தடுமாறி மாடியில் இருந்துகீழே விழுந்ததில் முதுகில் உள்ள முக்கியமான எலும்பு (Disk) உடைந்து விட்டது. அதன்பின் தமிழகம் மற்றும் தென் இந்தியா முழுவதும் அனைத்து விதமான சிறப்பு மருத்துவ நிபுணர்களிடம் சென்றும் எந்தவிதமான முன்னேற்றமும் இல்லாமல்

கடந்த 6 மாதமாகப் படுத்த படுக்கையில் இருக்கிறான். தந்தையான நான்தான் அடிப்படைத் தேவைகளைக் கூடப் பூர்த்தி செய்து வருகிறேன் என்று மிகவும் வருத்தத்தோடு ஆய்வளரிடம் கூறினார்.

சில பழமையான சோதிடப் புத்தகங்களில் தசாவை நடத்தக் கூடிய கோளிற்கு 8 அல்லது 12 இல் புத்தியை நடத்த கூடிய கோள் இருந்தால் தசா பலன் வேலை செய்யாது என்று படித்த ஞாபகத்தில் ஆய்வாளர் சாதகத்தை மீண்டும் பார்த்துவிட்டு, ஒரு பேப்பரில் சூரியபுத்தி காலத்தைத் குறித்து, இந்தக் காலக்கட்டத்தில் கண்டிப்பாகச் சரியாகும் என்று எழுதி ஆய்வாளர் கொடுத்து விட்டார்.

அதன்பின் கிட்டதட்ட ஒரு ஆண்டு கழித்து ஒரு பையனுடன் மீண்டும் வந்தார். அவரைப் பார்த்த நினைவு ஆய்வாளருக்கு உள்ளது, ஆனால் எதற்க்காக பார்த்தார் என்று நினைவு இல்லை. சாதகம் மற்றும் ஒரு வருடத்திற்கு முன்பு நான் எழுதிக் கொடுத்த பேப்பரைக் கொடுத்தார். அதனைப் பார்த்து விட்டு சார், பையனுக்கு எப்படி இருக்கு என்று ஆய்வாளர் கேட்டார். அவருடன் அழைத்து வந்த நபரைக் காட்டி இதுதான் தனது பையன் என்று கூறினார். ஆய்வாளரால் தனது கண்களை நம்ப முடியவில்லை. காரணம், பையன் இடுப்புக்குக் கீழ் இயங்க முடியாமல் படுத்த படுக்கையில் இருந்ததாகக் கூறி இருந்தார். ஆனால் இன்று நடந்து இவருடன் வந்து இருக்கிறார். இது எப்படிச் சாத்தியமாயிற்று, விளக்கமாக கூறுங்கள் என்று ஆய்வாளர் கேட்டார்.

சுக்கிரதிசை சுக்கிரபுத்தி முடியும்வரை ஆய்வாளரிடம் வந்தபோது இருந்த அதேநிலைதான் நீடித்துள்ளது. அதன்பின் சூரியபுத்தி ஆரம்பித்த காலத்தில் கேரளாவில் ஒரு வயது மூத்த வைத்தியர் ஒருவர் எலும்பு முறிவுகளுக்கு, நோயாளிகளை எண்ணையில் ஊறவைத்துச் சரி செய்து அனுப்புவதாக ஒரு செய்தி இவரின் நண்பர்மூலம் அறிந்து இருக்கிறார். எவ்வளவோ முயற்சி செய்தாகிவிட்டது இதனையும் செய்து பார்க்கலாம் என்று கேரளா வைத்தியசாலைக்குச் சென்று இருக்கிறார். வைத்தியர் பரிசோதனை செய்து பார்த்து விட்டு, இதேநிலையில் தன்னிடம் வந்தவர்களில் 100 இக்கு 10 நபர்களுக்குச் சரியாகி இருக்கிறது. அதாவது 10 விழுக்காடு வாய்ப்பு உள்ளது என்று கூறி இருக்கிறார். இவர் சரி சிகிச்சை கொடுங்கள் என்று வைத்தியசாலையில் சேர்த்து விட்டு இருக்கிறார்.

கிட்டதட்ட நான்குமாதங்கள் 24 மணி நேரமும் எண்ணையில் உடல் முழுவதையும் ஊறவைத்து நாள் ஒன்றுக்கு மூன்றுமுறை முறிவு ஏற்பட்ட இடத்தில் தடவி கொடுத்து இருக்கிறார்கள். ஆச்சரியம் இந்தப் பையனுக்கு 100 விழுக்காடு சரியாகி விட்டது. இதனைச் சாதகரின் தந்தை ஆய்வாளரிடம் கூறினார்.

இது எப்படிச் சாத்தியமாயிற்று என்று பல காலம் சிந்தித்து, விடை தேடிக்கொண்டு இருந்தபொழுது, 2010 ஆம் ஆண்டு இந்தத் தசாபுத்தி பலன்கள் முறையில் பலன்களை வரையறுக்க துவங்கி பின்னர்தான் இந்தச் சாதகத்தில் இருந்த புதிருக்கு விடை கிடைத்தது. இந்தச் சாதகம் மூலம் தான் தசா பலன் முறிவு என்கிற புதிய கோணத்தை அறிய முடிந்தது.

அதாவது தசாவை நடத்தக் கூடிய கோள் சுக்கிரன் 8 இல் இருந்த படியால், தனது சுயபுத்தியிலும் ஒரே பலனைதான் கொடுக்கும். அதன்பின் வந்த சூரியபுத்தி, தசாவை நடத்தக் கூடிய சுக்கிரனுக்கு 12 இல் இருந்தபடியால் தசாபலன் இல்லாமல் போய் இருக்கிறது. மேலும் 3, 7, 11 ஆம் பாவகங்கள் நோய் எதிர்ப்புத் திறனை அதிகரிக்க வழிவகை செய்து உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

தசாபலன் எப்படி நிர்ணயம் செய்வது என்பதை 2 ஆவது உதாரண சாதகம்மூலம் பாாக்கலாம்.

<table>
<tr><td></td><td>5</td><td>6</td><td>7</td><td>8</td><td></td></tr>
<tr><td></td><td></td><td>சனி<br>சந்</td><td></td><td></td><td></td></tr>
<tr><td>4</td><td></td><td colspan="2" rowspan="2">KARTHIK<br>17-10-1970 10:10:00<br>Chennai, T.N.<br>ஸ்ரீபதி பாவகம்<br>வயது<br>49-வருடம் 00-மாதம் 01-நாள்</td><td>கேது</td><td>9</td></tr>
<tr><td>3</td><td>ராகு</td><td>செவ்</td><td>10</td></tr>
<tr><td></td><td></td><td>237.15.05லக்</td><td>குரு<br>சுக்</td><td>புத<br>சூரி</td><td></td></tr>
<tr><td></td><td>2</td><td>1</td><td>12</td><td>11</td><td></td></tr>
</table>

DEG

| ஸ்ரீபதி பாவகப்படி | |
|---|---|
| திரிகோணம் | கோள்கள் |
| 1,5,9 | கேது |
| 2,6,10 | சனி சந் செவ் |
| 3,7,11 | ராகு புத சூரி |
| 4,8,12 | குரு சுக் |
| சூரி திசை இருப்பு | |
| 03-வருடம் 10-மாதம் 26-நாள் | |

| திசைகள் | |
|---|---|
| சூரி | 12-09-1968-13-09-1974 |
| சந் | 13-09-1974-12-09-1984 |
| செவ் | 12-09-1984-13-09-1991 |
| ராகு | 13-09-1991-12-09-2009 |
| குரு | 12-09-2009-12-09-2025 |
| சனி | 12-09-2025-12-09-2044 |
| புத | 12-09-2044-12-09-2061 |
| கேது | 12-09-2061-12-09-2068 |
| சுக் | 12-09-2068-12-09-2088 |

| திசை புக்திகள் | | |
|---|---|---|
| ராகு | ராகு | 13-09-1991-26-05-1994 |
| ராகு | குரு | 26-05-1994-19-10-1996 |
| ராகு | சனி | 19-10-1996-26-08-1999 |
| ராகு | புத | 26-08-1999-14-03-2002 |
| ராகு | கேது | 14-03-2002-02-04-2003 |
| ராகு | சுக் | 02-04-2003-01-04-2006 |
| ராகு | சூரி | 01-04-2006-24-02-2007 |
| ராகு | சந் | 24-02-2007-25-08-2008 |
| ராகு | செவ் | 25-08-2008-12-09-2009 |

| திசை புக்தி அந்தரங்கள் | | | |
|---|---|---|---|
| ராகு | ராகு | ராகு | 13-09-1991-08-02-1992 |
| ராகு | ராகு | குரு | 08-02-1992-18-06-1992 |
| ராகு | ராகு | சனி | 18-06-1992-21-11-1992 |
| ராகு | ராகு | புத | 21-11-1992-10-04-1993 |
| ராகு | ராகு | கேது | 10-04-1993-07-06-1993 |
| ராகு | ராகு | சுக் | 07-06-1993-18-11-1993 |
| ராகு | ராகு | சூரி | 18-11-1993-06-01-1994 |
| ராகு | ராகு | சந் | 06-01-1994-30-03-1994 |
| ராகு | ராகு | செவ் | 30-03-1994-26-05-1994 |

மேல உள்ள சாதகத்திற்கு இராகு தசா 13.09.1991 முதல் 12.09.2009 வரை நடைபெற்று உள்ளது. இராகு தசாக்கான பலன்கள்

3, 7, 11 ஆம் பாவகப் பலன்கள் 100 விழுக்காடு உண்டு.

4, 8, 12 ஆம் பாவகப் பலன்கள் இல்லை.

1, 5, 9 ஆம் பாவகப் பலன்கள் பன்மடங்கு உண்டு.

2, 6, 10 ஆம் பாவகப் பலன்கள் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு உண்டு.

அதாவது தசாவை நடத்த கூடிய கோள் 3 ஆம் பாவகத்தில் இருப்பதால் 4, 8, 12 ஆம் பாவகப் பலன்கள் நடைபெறாது என்பது தசாக்கானப் பொதுபலன் ஆகும். இலக்கினத்தைப் பெருமளவு கெடுக்கக் கூடிய 8 மற்றும் 12 ஆம் பாவகப் பலன்கள் நடைபெறாது என்பது சாதகருக்கு நன்மை என்றாலும் 4 ஆம் பாவகக் காரகத்துவமும் சேர்ந்தே பாதிக்கும் இதனைச் சாதகர் விரும்ப மாட்டார். அதவது இராகு தசாவில் சொத்துச் சேர்க்க இயலாது. இருப்பினும் இராகு தசா முழுவதும் சொத்து சேர்க்க முடியாது எனக் கூற இயலாது. மூன்றில் உள்ள இராகு பலவீனம்

அடைந்தால் சொத்துச் சேர்க்க முடியும். இது எப்படிச் சாத்தியம் என்றால் தசா பலன் முறிவு வரும் காலத்தில் சாத்தியம் ஆகும்.

ஒவ்வொன்றாகப் பார்ப்போம். இங்குத் தசாவை நடத்தக் கூடிய கோள் 3 ஆம் பாவகமான நிலம் இராசியில் இருப்பதால் 3, 7, 11 ஆம் பாவகங்கள் நில இராசிகளாகவே வரும். இதன் புத்திகளில், அதாவது இராகு, புதன், சூரியன் புத்திகளில் 3 ஆம் பாவகப் பலன்கள் 100 விழுக்காடு இயங்கும். எனவே நாலாம்பாவகக் காரகத்துவப் பலனான சொத்துச் சேர்க்க முடியாது.

அடுத்து நில இராசிக்கு நட்பு இராசி நீர் இராசி ஆகும். இங்கு நீர் இராசிகள் 1, 5, 9 ஆம் பாவங்களாக வருகிறது. 1, 5, 9 ஆம் பாவகங்களில் கேது உள்ளார். கேதுபுத்தியில் 3, 7, 11 ஆம் பாவகம் பன்மடங்கு இயங்கும் ஆற்றல் பெற்றுவிடும். எனவே நீர் இராசிகளில் உள்ள கேதுபுத்தியிலும் சொத்துச் சேர்க்க முடியாது.

அடுத்து நில இராசிக்குச் சமமான இராசி வாயு இராசி ஆகும். இங்கு வாயு இராசிகள் 4, 8, 12 ஆம் பாவகங்களாக வருகிறது. 4, 8, 12 ஆம் பாவகங்களில் குரு மற்றும் சுக்கிரன் உள்ளனர். குரு மற்றும் சுக்கிர புத்திகளில் 4, 8, 12 ஆம் பாவகங்கள் 100 விழுக்காடு இயங்கும். ஆதலால் ஆய்வு விதிகளின்படி நான்காம்பாவகக் காரகத்துவமான சொத்துச் சேர்க்க முடியும் என வரும். இருப்பினும் இங்கு, தசாவை நடத்தக் கூடிய கோள் 3 ஆம் பாவகத்தில் இருப்பதால். தசாபலன் ஒரு வரமுறைக்கு உட்பட்டு இயங்கிகொண்டே இருக்கும். எனவே வாயு இராசிகளில் உள்ள குரு, சுக்கிரன் புத்திகளில் சொத்துச் சேர்ப்பது கடினம் என்று வரும். இங்குக் குரு, சுக்கிரன் இருவரும் நான்காம்பாவகத்திற்கு சாதகமான பாவங்களில் இருந்தாலும் மூன்றாம்பாவகத் தாக்கத்தோடு செயல்படும் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

அடுத்து நில இராசிக்குப் பகை இராசி நெருப்பு இராசி ஆகும். இங்கு நெருப்பு இராசிகள் 2, 6, 10 ஆம் பாவகங்களாக வருகிறது. 2, 6, 10 ஆம் பாவகங்களில் சனி, சந்திரன், செவ்வாய் உள்ளன. நெருப்பு இராசி என்பது நிலத்திற்குப் பகை இராசியாக வருவதால் நெருப்பு இராசிகளில் உள்ள கோள்களின் புத்திகளில் நில இராசி இயங்காது. அதாவது இங்கு 3 ஆம் பாவகத்தில் இருந்து தசாவை நடத்த கூடிய கோள் இராகு பலவீனம் அடைந்து விடுவார். ஆக நெருப்பு இராசிகளில் உள்ள சனி, சந்திரன்,

செவ்வாய் புத்திகளில் 3 ஆம் பாவகம் இயங்காது. எனவே 2, 6, 10 ஆம் பாவகங்களில் உள்ள சனி, சந்திரன், செவ்வாய் புத்திகளில் இந்தச் சாதகரால் சொத்துச் சேர்க்க, வாங்க முடியும். இதுவே தசாபலன் முறிவுவின் பலன்கள் ஆகும்.

இந்தச் சாதகர் இராகு (3) தசாவில் சனி (2,6,10) புத்தியில்… அதாவது தசாபலன் முறிவு காலத்தில் நிலம் வாங்கி வீடு கட்டினார் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

## தொகுப்புரை

புத்தியை நடத்தும் கோள் பன்னிரு பாவகங்களில் எந்த பாவகத்தில் இருந்தாலும், பன்னிரு விதிகளை கொண்டு பன்னிரு பாவகங்களுக்கும் பலன் அறியும் விதம் விளக்கப்பட்டுள்ளது. பன்னிரு பாவகங்களை அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு திரிகோணப் பாவகங்களாக சுருக்கி நான்கு விதிகளை கொண்டு பலன் அறியும் விதம் விளக்கப்பட்டுள்ளது. மேலும் பன்னிரு பாவகங்களை அகம்புறம் என இரண்டு பகுதிகளாகச் சுருக்கி, அகம் புறத்தை எதிர்க்கும் புறம் அகத்தை எதிர்க்கும் எனப் பொது விதியும் உருவாக்கப்பட்டுள்ளது.

தசா பலன் நிர்ணயம் செய்வதில் புத்தியின் பங்கு முக்கியமானதாகும். தசாவை நடத்த கூடிய கோள் நின்ற பாவகத்தில் இருந்து புத்தியை நடத்துகின்ற கோள் நின்ற பாவகம் 4, 8, 12 ஆக இருந்தால் தசா பலன் முறிவு ஏற்படும் என்பதையும் அறிய முடிகிறது.

**பன்னிரு பாவகங்களும், நான்கு வித இயக்க விதிகளும்.**

| புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் | 100 விழுக்காடு இயங்கும் பாவகங்கள் | இயங்காத பாவகங்கள் | பன்மடங்கு இயங்கும் பாவகங்கள் | வரைமுறைக்குட்பட்டு இயங்கும் பாவகங்கள் |
|---|---|---|---|---|
| 1 | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 |
| 2 | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 |
| 3 | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 |
| 4 | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 |
| 5 | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 |
| 6 | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 |
| 7 | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 |
| 8 | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 |
| 9 | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 |
| 10 | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 |
| 11 | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 |
| 12 | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 |

## இயல்-2

## அறம் என்ற திரிகோணப் பாவங்கள்

### முன்னுரை

பன்னிரு பாவகங்களில் 1, 5, 9 ஆகிய திரிகோணப் பாவகங்கள் அறம் என்று அழைக்கப்படுகிறது[20]. புத்தியை நடத்தும் கோள் அறம் என்னும் 1, 5, 9 ஆகிய திரிகோணப் பாவகங்களில் இருக்கும் நிலையை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு 50 சாதகங்களுடன் பொருத்திப் பார்த்துப் பலன் அறிவதாக அறம் என்ற திரிகோணப் பாவங்கள் என்கிற இந்த இரண்டாம் இயல் அமைகின்றது.

### 1, 5, 9 ஆகிய திரிகோணங்களின் விளக்கம்

ஒற்றைப்படை பாவகங்களான 1, 5, 9 மற்றும் 3, 7, 11 ஆம் பாவகங்கள் அகம் என்றும், இரட்டைப்படை பாவகங்களான 2, 6, 10 மற்றும் 4, 8, 12 ஆம் பாவகங்கள் புறம் என்றும் அழைக்கப்படுகிறது.

அதன்படி 1, 5, 9 ஆம் பாவகங்கள் ஒற்றைப்படைப் பாவகங்களில் வருகின்றது, ஆகையால் இந்த அறம் என்னும் திரிகோணம் என்பது அகத்தைச் சார்ந்தது ஆகும். எனவே இவ்வியலில் ஆராயப்பட இருக்கும் சாதகங்களில் அகம் தொடர்பான பலன்கள் நல்லமுறையில் கிடைக்கும். அதேவேளையில் புறம் தொடர்பான காரகங்களில் பாதிப்புகளை ஏற்படுத்தும். அதுவும் முக்கியமாக 2, 6, 10 ஆம் பாவகங்களின் காரகத்துவப் பலன்களில் அதிகப் பாதிப்புகளைக் கொடுக்கும்.

காரணம் 2, 6, 10 ஆம் பாவகங்கள் என்பது 1, 5, 9 ஆம் பாவகங்களுக்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக வரும். ஆய்விற்கு உட்படுத்தப்பட்டுள்ள பன்னிரு விதிகளின்படி விதிஎண் 4 என்பது 70 விழுக்காடு பாதிப்புகளையும், விதிஎண் 8 என்பது எதிர்மறையாகவும், விதிஎண் 12 என்பது இயங்காத நிலையில் அமைந்துள்ளது.

---

[20] இரா. அருள்வேல், ஸ்ரீ ராஜ ஜோதிடம், ப 99

**அறம் என்ற திரிகோணத்தின் விளைவுகள்**

திரிகோண விதிகளின்படி, புத்தியை நடத்தும்கோள் 1, 5, 9 என்னும் அறம் திரிகோணப் பாவகங்களில் இருக்கும்போது,

1, 5, 9 ஆம் பாவகங்கள் 100 விழுக்காடு இயங்கும்,

2, 6, 10 ஆம் பாவகங்கள் இயங்காது,

3, 7, 11 ஆம் பாவகங்கள் பன்மடங்கு இயங்கும்,

4, 8, 12 ஆம் பாவகங்கள் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்.

திரிகோண விதிகளின்படி புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 1, 5, 9 ஆம் பாவகங்களில் கூறப்பட்டுள்ள பலன்கள் யாவும் இந்தப் புத்தியில் நூறு விழுக்காடு நடைபெறும். அதேவேளையில் 2, 6, 10 ஆம் பாவகங்களில் கூறப்பட்டுள்ள பலன்கள் யாவும் கிடைக்காது என்பதை அறிய முடிகிறது.

**1, 5, 9 ஆம் பாவகங்களின் புத்தி தரும் பலன்**

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து ஒரு கோள் புத்தியை நடத்தும்போது நன்மையான பலன்கள் மற்றும் தீமையான பலன்கள் இரண்டும் சேர்ந்தே நடக்கும். அதன்படி 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருந்து ஒரு கோள் புத்தியை நடத்தும் போது ஏற்படும் நன்மை மற்றும் தீமையான பலன்கள் கீழ்கண்டவாறு அமைந்துள்ளது.

**நன்மையான பலன்கள் :**

1, 5, 9 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 1, 5, 9 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் 100 விழுக்காடு இயங்கி இந்தப் பாவகங்கள் மூலம் சாதகருக்கு மனமகிழ்ச்சியைக் கொடுக்கும். அதாவது இதனை நன்மை எனக் கொள்ளலாம்.

புத்தியை நடத்தக் கூடிய கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 1 ஆம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும், 5 ஆம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும், 9 ஆம் பாவகமும் 100 விழுக்காடு இயங்கும்.

எனவே 1, 5, 9 ஆம் பாவகங்களில் கூறப்பட்டுள்ள பலன்கள் யாவும் சாதகருக்கு நல்லமுறையில் அமைகிறது

சுயகௌரவம், தன்னம்பிக்கை, ஆரோக்கியம் முதலியன நன்றாக இருக்கும். சுயமுயற்சிகள், செயல்திறன் சாதகருக்கு அதிகம் இருக்கும். தனது கருத்துகளுக்குச் சுதந்திரம் கிடைக்கும், தன்னைப் போல் பிற உயிர்களும் வாழவேண்டும் என்ற உயர் சிந்தனை சாதகரிடத்தில் காணப்படும்.

புத்திர உற்பத்திக்கான உயிர் அணுக்கள் அதிகரிக்கும். நல்ல இரசனை இருக்கும். உல்லாசம், பொழுதுபோக்கு, உடலை அழகுப்படுத்திக்கொள்வது போன்றவற்றில் ஆர்வம் காணப்படும். இயல், இசை, நாடகம், இலக்கியம், வர்ணனை, சினிமா மற்றும் அனைத்துக் கலைகளிலும் நாட்டம் ஏற்படும். கடன் நோய் வழக்கு இல்லாமல் நிம்மதியாக இருப்பர். கற்பனைவளம் (Creativity) மிகுதியாகக் காணப்படும். காதல் வயப்படுவர். யூக அறிவு மிகுதியாக இருக்கும். புதுப்புதுப் படைப்புகள், விட்டுக்கொடுத்து வாழ்தல், இயற்கையைப் பாதுகாத்து இயற்கையோடு ஒன்றி வாழ்தல், மந்திரம், யோகா, இயற்கையைப் பாதுக்காக்கப் போராடுவது, இயற்கை வேளாண்மை, செயற்கையான பொருள்களை அழித்தல், இயற்கை மருத்துவத்தை ஊக்குவித்தல் ஆகிய நன்மையான பலன்கள் கிடைக்கும்.

ஆன்மிகம், தீர்த்த யாத்திரை, சமூக சேவையில் ஈடுபாடு, பாரம்பரியம் மாறாத தன்மை, பெரியோர்களை மதித்து நடந்து கொள்ளுதல், ஒழுக்கம், சட்டங்களை மதித்துச் செயல்படுதல், தர்மச் சிந்தனை, கடவுள்பக்தி, ஆய்வு கல்வி, முன்னோர்கள் ஆசிர்வாதம் மற்றும் பூர்வீகச் சொத்துகள், சட்டங்கள் இயற்றுவது, அதிகாரப் பகிர்வுக்கு முனைதல், அதிர்ஷ்டம், குரு உபதேசம் ஆகிய பலன்கள் 100 விழுக்காடு நடக்கும். இவை சாதகருக்கு மனமகிழ்ச்சியைக் கொடுக்கும்.

**தீமையான பலன்கள் :**

1, 5, 9 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 2, 6, 10 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள்

இயங்காமல் இந்தப் பாவகங்கள் மூலம் சாதகருக்குக் கிடைக்க வேண்டிய மனமகிழ்ச்சி தடைபடும். அதாவது இதனைத் தீமை எனக் கொள்ளலாம்.

பணம் உற்பத்தி செய்யும் திறன் இருக்காது, பணத்திற்கு முக்கியத்துவம் கொடுத்துச் சிக்கனம் செய்யாமல் ஆடம்பரச் செலவுகள் செய்ய நேரிடும், சுயகௌரவம் பார்க்காமல் பணத்திற்காக மற்றவர்களிடம் கையேந்துவது, குடும்பத்தில் உள்ள பிற உறுப்பினர்களின் உழைப்பில் வாழ்வது, கையில் இருக்கும் பணத்தை திட்டம் போட்டுச் செலவு செய்ய இயலாமல் பணப்புழக்கம் பாதிக்கப்படும்.

உடல் உழைப்பில் நாட்டம் இருக்காது, ஒழுங்காக வேலைக்குச் செல்ல மாட்டார்கள், சுதந்திரம் அதிகம் எதிர்பார்த்து அடிமைத்தொழில் பிடிக்காமல் போகும், சோம்பேறித்தனம் மெத்தனப் போக்கு இவர்களிடம் காணப்படும், அளவுக்கு அதிகமாக விட்டுக்கொடுத்து ஏமாளி என்கிற பெயரும் எடுப்பார்கள், பூர்வீகச் சொத்துக்களைக் கேட்டு வாங்காமல் விட்டுக்கொடுப்பது. புதியவேலைக்கு முயற்சி செய்யாமல் இருப்பது, மற்றவர்களுக்கு அடிபணிந்து வேலைசெய்ய விருப்பம் இருக்காது, கடன் கிடைக்காது.

எதிர்காலத் திட்டமிடுதல் சரியாக இருக்காது, எல்லோரையும் நம்பி ஏமாந்து போகுதல், தானதரும காரியங்களில் ஈடுபட்டுப் பணத்தைச் செலவு செய்யவது, கொடுத்த வேலையைச் சரியான நேரத்தில் முடிக்க முடியாமல் சிரமப்படுவார்கள், தனக்குக் கீழ் பணிபுரிபவர்களிடம் வேலை வாங்கச் சிரமம் ஏற்படும், நிர்வாகத் திறனற்றுக் காணப்படுவர், வேலையில் பொறுப்பு உணர்ச்சி இருக்காது, பொறுப்புக்களைத் தட்டிக் கழிப்பார்கள், இவர்களே தனது வேலையை இராஜினாமா செய்து பின் வேலை இல்லாமல் தவிப்பார்கள், பார்த்துவரும் வேலை போய்விடும் அபாயம் உண்டு, நிரந்தரவேலை கிடைக்காது, பதவி உயர்வும் கிடைக்காது. அடிக்கடி செய்யும் வேலைக்குச் செல்லாமல் விடுப்பு எடுப்பார்கள், விருப்பஓய்வு கொடுத்து விடுவார்கள், வேலையில் ஸ்திரதன்மை இருக்காது. உறவினரிடத்தில், வாடிக்கையாளர்களிடத்தில் மற்றும் வேலைசெய்யும் இடத்தில் உள்ளவர்களிடம் பொறுப்பற்றவன் என்கிற பெயர் எடுப்பார்கள்.

1. சாதகர் பெயர் : லோகேஷ் (88385 21377) பிறந்த நாள் : 27.11.1993

பிறந்த நேரம் : இரவு 10.50 பிறந்த ஊர் : வேலூர்.

| | 24 | 23 | 31 | 30 | |
|---|---|---|---|---|---|
| | | சந் | கேது | | |
| 32 | சனி | இராசி | | லக் | 29 |
| 18 | | பரணி-4 | | | 39 |
| | | செவ் சூரி ராகு | சுக் புத குரு | | |
| | 31 | 20 | 22 | 38 | |

| | 9 | 10 | 11 | 12 | |
|---|---|---|---|---|---|
| | | சந் கேது | | | |
| 8 | | ஸ்ரீபதி பாவகம் | | லக் | 1 |
| 7 | சனி | | | | 2 |
| | | சூரி செவ் | குரு புத சுக் ராகு | | |
| | 6 | 5 | 4 | 3 | |

Logesh
27-11-1993 22:50:00
Vellore,T.N.
சுக் திசை இருப்பு 03-வருடம் 06-மாதம் 22-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சூரி செவ் |
| 2,6,10 | சந் கேது |
| 3,7,11 | சனி |
| 4,8,12 | குரு புத சுக் ராகு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சுக் | 20-06-1977-20-06-1997 | செ | செ | 20-06-2013-16-11-2013 |
| சூரி | 20-06-1997-21-06-2003 | செ | ராகு | 16-11-2013-05-12-2014 |
| சந் | 21-06-2003-20-06-2013 | செ | குரு | 05-12-2014-11-11-2015 |
| செ | 20-06-2013-20-06-2020 | செ | சனி | 11-11-2015-20-12-2016 |
| ராகு | 20-06-2020-20-06-2038 | செ | புத | 20-12-2016-17-12-2017 |
| குரு | 20-06-2038-20-06-2054 | செ | கே | 17-12-2017-15-05-2018 |
| சனி | 20-06-2054-20-06-2073 | செ | சுக் | 15-05-2018-15-07-2019 |
| புத | 20-06-2073-20-06-2090 | செ | சூரி | 15-07-2019-20-11-2019 |
| கே | 20-06-2090-20-06-2097 | செ | சந் | 20-11-2019-20-06-2020 |

இந்தச் சாதகர் ஐ.டி.ஐ., தொழிற் பயிற்சி படித்து இருக்கிறார். படித்து முடித்தபின் தற்காலிகமாக ஒரு சின்னக் கம்பெனியில் இயந்திரப் பணியாளராகப் பணிபுரிந்து வந்துள்ளார். கடந்த மூன்று மாதங்களாக அந்த வேலைக்கும் செல்வதில்லை. வீட்டில் இருந்துகொண்டு ஒரு பெண்ணைக் காதலும் செய்து வருகிறார்.

இவரது இராசிக் கட்டப்படி அடிமை வேலைக்கான கொடுப்பினை 6 ஆம் அதிபதி குரு 4 இல் இருப்பதால் வேலைக்குச் செல்வது உத்தமம். ஆனால் நடப்பு செவ்வாய் தசா (5), சூரிய புத்தி (5) ஆகும். இந்தப் புத்தியில் 1, 5, 9 ஆம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும். 2, 6, 10 ஆம் பாவகங்கள் இயங்காது. அதன்படி 5 ஆம் பாவகக் காரகம் காதல் செய்து வருகிறார், இந்தச் சூரிய புத்தியில் (5) வேலைக்குச் செல்லவில்லை. அடுத்துவரும் சந்திரன் (10) அதன் பின்வரும் இராகு (4) இல் இருப்பதால் ஒழுங்காக வேலைக்குச் செல்வார் என ஆய்வு விதிப்படி எதிர்பார்க்கலாம்.

2. சாதகர் : திவ்யா ஸ்ரீ (79049 81300) பிறந்த நாள் : 07.08.1987

பிறந்த நேரம் : இரவு 10. 10 பிறந்த ஊர் : திருநெல்வேலி

| | 31 | 29 | 41 | 22 | |
|---|---|---|---|---|---|
| | லக் ராகு | குரு | | | |
| 31 | | | | புத சுக் சூரி செவ் | 22 |
| 29 | | இராசி பூராடம்-4 | | | 27 |
| | சந் | சனி | | கேது | |
| | 28 | 25 | 24 | 28 | |

| | 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|---|
| | லக் ராகு குரு | | | | |
| 12 | | | | புத சுக் சூரி செவ் | 5 |
| 11 | | ஸ்ரீபதி பாவகம் | | | 6 |
| | சந் | சனி | | கேது | |
| | 10 | 9 | 8 | 7 | |

DIVYA
07-08-1987 22:10:00
Tirunelvelli,T.N.
சுக் திசை இருப்பு 00-வருடம் 08-மாதம் 13-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | ராகு குரு புத சுக் சூரி செவ் சனி |
| 2,6,10 | சந் |
| 3,7,11 | கேது |
| 4,8,12 | |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சுக் | 20-04-1968-20-04-1988 | ராகு | ராகு | 21-04-2011-01-01-2014 |
| சூரி | 20-04-1988-21-04-1994 | ராகு | குரு | 01-01-2014-27-05-2016 |
| சந் | 21-04-1994-20-04-2004 | ராகு | சனி | 27-05-2016-03-04-2019 |
| செ | 20-04-2004-21-04-2011 | ராகு | புத | 03-04-2019-20-10-2021 |
| ராகு | 21-04-2011-21-04-2029 | ராகு | கே | 20-10-2021-08-11-2022 |
| குரு | 21-04-2029-21-04-2045 | ராகு | சுக் | 08-11-2022-07-11-2025 |
| சனி | 21-04-2045-20-04-2064 | ராகு | சூரி | 07-11-2025-02-10-2026 |
| புத | 20-04-2064-21-04-2081 | ராகு | சந் | 02-10-2026-02-04-2028 |
| கே | 21-04-2081-20-04-2088 | ராகு | செ | 02-04-2028-21-04-2029 |

இந்தச் சாதகருக்கு விதிப்படி இராசிக் கட்டத்தில் 6 ஆம் அதிபதி சூரியன் 5 இல். ஆய்வு விதிப்படி அடுத்தவரிடத்தில் வேலை செய்ய விருப்பம் இருக்காது. இருப்பினும் 2016 டிசம்பர்வரை சந்தைப்படுத்துதல் 3 ஆம் பாவக வேலை செய்து வந்துள்ளார். இராகு திசை (1) சனி புத்தியில் (9) தான் செய்து வந்த வேலையை இராஜினாமா செய்துவிட்டுத் தனியாக இந்தி டியூசன் எடுத்து அதன்மூலம் வருமானம் ஈட்டி வருகிறார்.

24.10.2019 அன்றுபடி இவருக்கு நடப்பு புதன் புத்தி (5) ஆகும். இவர் செய்யும் தொழிலில் வருமானம் மிகக் குறைவு ஆகும். பணத்திற்கு மிகவும் கஷ்டப்படுகிறார். புத்தியை நடத்தும் கோள் 5 ஆம் பாவகத்தில் இருப்பதால், 5 ஆம் பாவகப் பலன் காதல் என்னும் பலனும் நடந்துகொண்டு இருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

3. சாதகர் : சந்திரசேகரன் (88709 39760) பிறந்த நாள் : 27.06.1977

பிறந்த நேரம் : இரவு 9. 45 பிறந்த ஊர் : நாகர்கோவில்

| | 36 | 35 | 25 | 22 | |
|---|---|---|---|---|---|
| | கேது | செவ் சுக் | குரு | புத சூரி | |
| 34 | | இராசி | | சனி | 19 |
| 28 | லக் | விசாகம்-2 | | | 28 |
| | | | சந் | ராகு | |
| | 26 | 32 | 30 | 22 | |

| | 3 | 4 | 5 | 6 | |
|---|---|---|---|---|---|
| | கேது | செவ் சுக் | குரு புத சூரி | | |
| 2 | | ஸ்ரீபதி பாவகம் | | சனி | 7 |
| 1 | லக் | | | | 8 |
| | | | சந் | ராகு | |
| | 12 | 11 | 10 | 9 | |

CHANDRA SEKARAN (88709 39760)
27-06-1977 21:45:00
Nagercoil,T.N.
குரு திசை இருப்பு 11-வருடம் 07-மாதம் 17-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | குரு புத சூரி ராகு |
| 2,6,10 | சந் |
| 3,7,11 | கேது சனி |
| 4,8,12 | செவ் சுக் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| குரு | 13-02-1973-13-02-1989 | புத | புத | 14-02-2008-12-07-2010 |
| சனி | 13-02-1989-14-02-2008 | புத | கே | 12-07-2010-10-07-2011 |
| புத | 14-02-2008-13-02-2025 | புத | சுக் | 10-07-2011-09-05-2014 |
| கே | 13-02-2025-14-02-2032 | புத | சூரி | 09-05-2014-16-03-2015 |
| சுக் | 14-02-2032-14-02-2052 | புத | சந் | 16-03-2015-14-08-2016 |
| சூரி | 14-02-2052-13-02-2058 | புத | செ | 14-08-2016-12-08-2017 |
| சந் | 13-02-2058-14-02-2068 | புத | ராகு | 12-08-2017-29-02-2020 |
| செ | 14-02-2068-13-02-2075 | புத | குரு | 29-02-2020-06-06-2022 |
| ராகு | 13-02-2075-13-02-2093 | புத | சனி | 06-06-2022-13-02-2025 |

இந்தச் சாதகர் சுயமாகத் தங்கநகை செய்யும் தொழில் செய்து வருகிறார். இராசிக் கட்டப்படி 7 ஆம் அதிபதி 10 இல். சுயமாகத் தொழில் செய்யலாம். மேலும் தங்க நகைக்கான காரகக் கோள் குரு மற்றும் சுக்கிரன். இதில் சுக்கிரன் 4 இல், குரு 5 இல் இருக்கிறது.

இவருக்குத் தற்சமயம் புதன் தசாவில் (5) இராகு புத்தி (9) ஆகும். 12.08.2017 முதல் 29.02.2020 வரை இராகு புத்தி நடந்துகொண்டு இருக்கிறது. நடப்பு தசா மற்றும் புத்தி இரண்டும் 5, 9 ஆம் பாவகங்களில் இருப்பதால் கடந்த இரண்டு ஆண்டுகளாக வருமானம் மிகவும் குறைந்துவிட்டது. சாதகரின் ஆரோக்கியம், சுயகௌரவம், குழந்தைகள் நலம் அனைத்தும் திருப்திகரமாக உள்ளது.

4. சாதகர் : கோபி (99420 95865) பிறந்த நாள் : 12.08.1984,

பிறந்த நேரம் : அதிகாலை 01.45, பிறந்த ஊர் : ஆத்தூர்




| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | ராகு சந் |
| 2,6,10 | சனி செவ் |
| 3,7,11 | சூரி கேது |
| 4,8,12 | சுக் புத குரு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| செ | 12-04-1982-11-04-1989 | குரு | குரு | 12-04-2007-30-05-2009 |
| ராகு | 11-04-1989-12-04-2007 | குரு | சனி | 30-05-2009-11-12-2011 |
| குரு | 12-04-2007-12-04-2023 | குரு | புத | 11-12-2011-18-03-2014 |
| சனி | 12-04-2023-12-04-2042 | குரு | கே | 18-03-2014-22-02-2015 |
| புத | 12-04-2042-12-04-2059 | குரு | சுக் | 22-02-2015-23-10-2017 |
| கே | 12-04-2059-12-04-2066 | குரு | சூரி | 23-10-2017-11-08-2018 |
| சுக் | 12-04-2066-12-04-2086 | குரு | சந் | 11-08-2018-11-12-2019 |
| சூரி | 12-04-2086-11-04-2092 | குரு | செ | 11-12-2019-16-11-2020 |
| சந் | 11-04-2092-13-04-2102 | குரு | ராகு | 16-11-2020-12-04-2023 |

இந்தச் சாதகருக்குத் தற்சமயம் ஆண்கள் உடற்பயிற்சி கூடத்தில் பயிற்சியாளராக ஆக வேலை செய்கிறார். இவரது இராசிக் கட்டப்படி 6 ஆம் அதிபதி சுக்கிரன் 4 இல். அடிமை வேலை இவருக்கு ஒத்துவரும். இப்போது இவருக்குத் தசாவை நடத்தும் கோள் குரு 8 இல் இருக்கிறார். புத்தியை நடத்தும் கோள் சந்திரன் 9 இல் இருக்கிறார். சந்திரபுத்தி கடந்த ஒராண்டாக நடைபெற்று வருகின்றன. இக்காலக்கட்டத்தில் சாதகர் 5 ஆம் பாவகக் காரகமான யோகா மற்றும் சோதிடம் பயின்று பயிற்சி செய்து வருகிறார். ஆரோக்கியம் மிக நன்றாக உள்ளது. மேலும் கடந்த ஆண்டு டிசம்பர் மாதம் ஒரு குழந்தையும் பிறந்துள்ளது. குழந்தை 5 ஆம் பாவகக் காரகம் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

புத்தியை நடத்தும் கோள் 9 ஆம் பாவகத்தில் என்பதால் வருமானம் குறைவான அளவில் வந்துகொண்டு இருக்கிறது.

5. சாதகர் : கார்த்திக் (99417 87691) பிறந்த நாள் : 21.01.1996.

பிறந்த நேரம் : இரவு 11.30 பிறந்த ஊர் : சென்னை.

| | 24 | 23 | 26 | 33 | |
|---|---|---|---|---|---|
| | கேது | | | | |
| 24 | சனி சுக் | இராசி | | | 29 |
| 19 | சந் செவ் சூரி புத | அவிட்டம்-1 | | | 21 |
| | குரு | | | ராகு லக் | |
| | 27 | 44 | 37 | 30 | |

| | 7 | 8 | 9 | 10 | |
|---|---|---|---|---|---|
| | கேது | | | | |
| 6 | சுக் சனி | ஸ்ரீபதி பாவகம் | | | 11 |
| 5 | செவ் சந் | | | | 12 |
| | புத சூரி | குரு | | லக் ராகு | |
| | 4 | 3 | 2 | 1 | |

KARTHIK B.E 94432 89632
21-01-1996 23:40:00
Chennai, T.N.
செவ் திசை இருப்பு 06-வருடம் 04-மாதம் 21-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1, 5, 9 | ராகு செவ் சந் |
| 2, 6, 10 | சுக் சனி |
| 3, 7, 11 | குரு கேது |
| 4, 8, 12 | புத சூரி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| செ | 14-06-1995-14-06-2002 | ராகு ராகு | 14-06-2002-24-02-2005 |
| ராகு | 14-06-2002-13-06-2020 | ராகு குரு | 24-02-2005-21-07-2007 |
| குரு | 13-06-2020-13-06-2036 | ராகு சனி | 21-07-2007-27-05-2010 |
| சனி | 13-06-2036-14-06-2055 | ராகு புத | 27-05-2010-13-12-2012 |
| புத | 14-06-2055-13-06-2072 | ராகு கே | 13-12-2012-01-01-2014 |
| கே | 13-06-2072-14-06-2079 | ராகு சுக் | 01-01-2014-31-12-2016 |
| சுக் | 14-06-2079-14-06-2099 | ராகு சூரி | 31-12-2016-25-11-2017 |
| சூரி | 14-06-2099-15-06-2105 | ராகு சந் | 25-11-2017-27-05-2019 |
| சந் | 15-06-2105-15-06-2115 | ராகு செ | 27-05-2019-13-06-2020 |

இந்தச் சாதகர் பி.இ. (கணிப் பொறியியல்) படித்து உள்ளார். ஆனால் அந்தத் துறையில் வேலை செய்யாமல், தனியார் வங்கியில் வேலைசெய்து வருகிறார். இராசிக் கட்டப்படி 6 ஆம் அதிபதி 6 இல். அடிமை வேலை உத்தமம் ஆகும். வங்கியின் காரகக் கோள் குரு இராசிக் கட்டத்தில் 4 இல். இவர் படித்து முடித்தவுடன் சூரியன் புத்தி (4) பாவகக் கட்டத்தில் சூரியன் 4 இல் இருந்து நடந்துகொண்டு இருந்தபடியால் உடனே தனியார் வங்கியில் நல்ல வேலை கிடைத்துவிட்டது. கடந்த சந்திர புத்தி (5) மற்றும் நடப்பு செவ்வாய் புத்தியில் (5) பல இடங்களில் வேலையை மாற்றி விட்டார். இருப்பினும் ஒவ்வொரு வேலை மாற்றத்திலும் சம்பளம் மட்டும் படிப்படியாகக் கூடிக்கொண்டே இருந்துள்ளது.

இதற்கான காரணம், இவரது சாதகத்தில் 2 ஆம் பாவகக் கொடுப்பினை 100 விழுக்காடு நன்றாக உள்ளதே ஆகும். இரண்டாம் பாவகத்தில் தீயகோள் இல்லை, இரண்டாம் பாவக அதிபதி சுக்கிரன்

6 இல், இரண்டாம் பாவகக் காரகக் கோள் குரு 4 இல், இரண்டாம் பாவக சர்வாஷ்டகவர்க்கம் 37 ஆகும். ஆக இரண்டாம் பாவக வலிமையானது மிகவும் நன்றாக உள்ளது என்பதால் இவருக்கு 2 ஆம் பாவகத்தைப் பாதிக்கக் கூடிய 1, 5, 9 ஆம் பாவகத் தசாபுத்தி வந்த போதிலும் வருமானக் குறைவு ஏற்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

6. சாதகர் : மணிகண்டன் (77086 48377) பிறந்த நாள் : 16.03.1989

பிறந்த நேரம் : இரவு 9.10 பிறந்த ஊர்: சென்னை

| | 34 | 29 | 20 | 26 | |
|---|---|---|---|---|---|
| | சூரி | | குரு செவ் | சந் | |
| 25 | சுக் புத ராகு | இராசி | | | 29 |
| 28 | | புனர்பூசம்-3 | | கேது | 28 |
| | சனி | | லக் | | |
| | 36 | 26 | 34 | 22 | |

| | 6 | 7 | 8 | 9 | |
|---|---|---|---|---|---|
| | சூரி | | குரு செவ் | | |
| 5 | ராகு புத சுக் | ஸ்ரீபதி பாவகம் | | சந் | 10 |
| 4 | | | | கேது | 11 |
| | சனி | | லக் | | |
| | 3 | 2 | 1 | 12 | |

MANIKANDAN (77086 48377)
16-03-1989 21:10:00
Chennai, T.N.
குரு திசை இருப்பு 05-வருடம் 05-மாதம் 27-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | ராகு புத சுக் |
| 2,6,10 | சூரி சந் |
| 3,7,11 | சனி கேது |
| 4,8,12 | குரு செவ் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| குரு | 12-09-1978-12-09-1994 | புத | புத | 12-09-2013-09-02-2016 |
| சனி | 12-09-1994-12-09-2013 | புத | கே | 09-02-2016-05-02-2017 |
| புத | 12-09-2013-12-09-2030 | புத | சுக் | 05-02-2017-07-12-2019 |
| கே | 12-09-2030-12-09-2037 | புத | சூரி | 07-12-2019-12-10-2020 |
| சுக் | 12-09-2037-12-09-2057 | புத | சந் | 12-10-2020-14-03-2022 |
| சூரி | 12-09-2057-13-09-2063 | புத | செ | 14-03-2022-11-03-2023 |
| சந் | 13-09-2063-12-09-2073 | புத | ராகு | 11-03-2023-27-09-2025 |
| செ | 12-09-2073-12-09-2080 | புத | குரு | 27-09-2025-03-01-2028 |
| ராகு | 12-09-2080-12-09-2098 | புத | சனி | 03-01-2028-12-09-2030 |

இந்தச் சாதகர் 9 ஆம் வகுப்பு வரை மட்டுமே படித்து உள்ளார். இவருக்கு இராசிக் கட்டப்படி 6 ஆம் அதிபதி குரு மற்றும் 7 ஆம் அதிபதி செவ்வாய் இரண்டு கோள்களும் எட்டில். கடந்த இரண்டரை ஆண்டுகளாகப் புதன் தசாவில் (5), சுக்கிர புத்தி (5) ஆகும். ஆதலால் எந்த வேலைக்கும் போகாமல் வீட்டிலேயே மனைவி, குழந்தைகளுடன் சாலியாக மனமகிழ்சியுடன் இருந்துள்ளார். இப்போது புதன் தசாவில் (5) சூரிய புத்தி (6) என்பதால் ஒரு பைக் கிடங்கில் வேலைக்குச் செல்ல துவங்கி இருக்கிறார்.

7. சாதகர் : சாந்தி (82488 93926) பிறந்த நாள் : 12.11.1964

பிறந்த நேரம் : அதிகாலை 3.38. பிறந்த ஊர் : சென்னை

| | 27 | 27 | 25 | 31 | |
|---|---|---|---|---|---|
| | | குரு | | ராகு | |
| 31 | சனி | இராசி | | | 32 |
| 24 | சந் | திருவோணம்-3 | | செவ் | 28 |
| | கேது | புத | சூரி | லக் சுக் | |
| | 24 | 33 | 24 | 31 | |

| | 7 | 8 | 9 | 10 | |
|---|---|---|---|---|---|
| | | குரு | ராகு | | |
| 6 | சனி | ஸ்ரீபதி பாவகம் | | | 11 |
| 5 | சந் | | | செவ் | 12 |
| | | புத கேது | சூரி | லக் சுக் | |
| | 4 | 3 | 2 | 1 | |

SHANTHI
12-11-1964 03:38:00
Chennai, T.N.
சந் திசை இருப்பு 02-வருடம் 09-மாதம் 19-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சுக் சந் ராகு |
| 2,6,10 | சூரி சனி |
| 3,7,11 | புத கேது |
| 4,8,12 | குரு செவ் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சந் | 01-09-1957-02-09-1967 | சனி | சனி | 01-09-2008-05-09-2011 |
| செ | 02-09-1967-01-09-1974 | சனி | புத | 05-09-2011-15-05-2014 |
| ராகு | 01-09-1974-01-09-1992 | சனி | கே | 15-05-2014-24-06-2015 |
| குரு | 01-09-1992-01-09-2008 | சனி | சுக் | 24-06-2015-23-08-2018 |
| சனி | 01-09-2008-02-09-2027 | சனி | சூரி | 23-08-2018-05-08-2019 |
| புத | 02-09-2027-01-09-2044 | சனி | சந் | 05-08-2019-06-03-2021 |
| கே | 01-09-2044-02-09-2051 | சனி | செ | 06-03-2021-14-04-2022 |
| சுக் | 02-09-2051-02-09-2071 | சனி | ராகு | 14-04-2022-18-02-2025 |
| சூரி | 02-09-2071-01-09-2077 | சனி | குரு | 18-02-2025-02-09-2027 |

இந்தச் சாதகர் தொழில் முறை சோதிடர் ஆவார். நல்ல ஆர்வமோடு தொழில் செய்து வந்தவர் தற்சமயம் 3 மாதங்களாகத் தொழில் செய்யும் இடத்திற்கு அதிகம் போகாமல் குடும்பத்துடன் தொடர்ந்து சுற்றுலா சுற்றுலா எனச் சென்று வருகிறார். சோம்பேறித்தனமாக இருப்பதாக அவரே கூறுகின்றார். நடப்பு சனி தசாவில் (6) சந்திர புத்தி (5) ஆகும். சந்திரன் 5 ஆம் பாவகக் காரகங்களைச் செயல்படுத்தி 2 ஆம் பாவகப் பலனைக் கெடுப்பது (வருமானம்) மட்டும் இன்றித் தசா பலன் முறிவும் ஏற்பட்டு உள்ளது. இந்தச் சனி தசாவில் 1, 5, 9 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்தியில் தசா பலன் முறிவு ஏற்படும் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

இந்தப் புத்திகளில்தான் குடும்பத்துடன் மகிழ்ச்சியாக இருக்க முடியும். ஆய்வு சோதிடம் தெரிந்து கொண்டுள்ளதால் வருமானம் கிடைக்காவிட்டாலும் குடும்பம், ஆரோக்கியம் முக்கியம் என்று உணர்ந்து உல்லாசமாகப் பயணங்கள்மூலம் புத்துணர்ச்சி பெற்று வருகிறார்.

8. சாதகர் : ஸ்ரீநிவாசன் (8248201452) பிறந்த நாள் : 06.08.1964

பிறந்த நேரம் : காலை 06.40 பிறந்த ஊர் : சென்னை

| | 28 | 44 | 31 | 23 | |
|---|---|---|---|---|---|
| | | | குரு | ராகு சுக் செவ் சந் | |
| 25 | சனி | இராசி | | சூரி லக் | 26 |
| 23 | | புனர்பூசம்-2 | | புத | 25 |
| | கேது | | | | |
| | 33 | 24 | 30 | 25 | |

| | 9 | 10 | 11 | 12 | |
|---|---|---|---|---|---|
| | | குரு | ராகு சுக் செவ் | சந் | |
| 8 | | ஸ்ரீபதி பாவகம் | | லக் சூரி | 1 |
| 7 | சனி | | | புத | 2 |
| | | கேது | | | |
| | 6 | 5 | 4 | 3 | |

SRINIVASAN (8248201452)
06-08-1964 06:40:00
Chennai, T.N.
குரு திசை இருப்பு 08-வருடம் 06-மாதம் 20-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சூரி கேது |
| 2,6,10 | புத குரு |
| 3,7,11 | சனி ராகு சுக் செவ் |
| 4,8,12 | சந் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| குரு | 25-02-1957-25-02-1973 | சுக் | சுக் | 26-02-2016-27-06-2019 |
| சனி | 25-02-1973-26-02-1992 | சுக் | சூரி | 27-06-2019-26-06-2020 |
| புத | 26-02-1992-25-02-2009 | சுக் | சந் | 26-06-2020-25-02-2022 |
| கே | 25-02-2009-26-02-2016 | சுக் | செ | 25-02-2022-27-04-2023 |
| சுக் | 26-02-2016-26-02-2036 | சுக் | ராகு | 27-04-2023-27-04-2026 |
| சூரி | 26-02-2036-25-02-2042 | சுக் | குரு | 27-04-2026-26-12-2028 |
| சந் | 25-02-2042-26-02-2052 | சுக் | சனி | 26-12-2028-26-02-2032 |
| செ | 26-02-2052-25-02-2059 | சுக் | புத | 26-02-2032-27-12-2034 |
| ராகு | 25-02-2059-25-02-2077 | சுக் | கே | 27-12-2034-26-02-2036 |

இந்தச் சாதகர் குன்னக்குடி வைத்தியநாதனின் கச்சேரியில் மின் விளக்கு, ஒலிப்பெருக்கி போடும் வேலையைப் பார்த்து இருக்கிறார். அதன்பின் சில இடங்களில் வேலைக்குச் சென்று உள்ளார். கேது தசாவில் சில நோய்ப் பிரச்சினைகளால் பாதிக்கப்பட்டுள்ளார். கடந்த இரண்டு மாதங்களாக எந்த வேலைக்கும் போகாமல் வீட்டில் சும்மா இருந்து வருகிறார்.

இவருக்கு நடப்பு சுக்கிர தசா சுக்கிரன் 11 இல் இருப்பதால் போதும் என்கிற மனநிலை மேலோங்கியுள்ளது. மேலும் கடந்த இரண்டு மாதங்களாக நடப்பு சூரியபுத்தி. சூரியன் பாவகத்தில் 1 இல் இருப்பதால் யாரிடமும் அடிமை வேலை செய்ய மனமில்லாமல் வீட்டிலேயே இருந்து வருகிறார்.

9. சாதகர் : சண்முக வேல் (93806 70268)      பிறந்த நாள் : 25.09.1984

பிறந்த நேரம் : மதியம் 1. 15                பிறந்த ஊர் : சென்னை.




| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | குரு ராகு புத சூரி சந் |
| 2,6,10 | சுக் |
| 3,7,11 | சனி கேது |
| 4,8,12 | செவ் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சந் | 13-08-1983-12-08-1993 | குரு | குரு | 13-08-2018-30-09-2020 |
| செ | 12-08-1993-12-08-2000 | குரு | சனி | 30-09-2020-13-04-2023 |
| ராகு | 12-08-2000-13-08-2018 | குரு | புத | 13-04-2023-19-07-2025 |
| குரு | 13-08-2018-13-08-2034 | குரு | கே | 19-07-2025-25-06-2026 |
| சனி | 13-08-2034-12-08-2053 | குரு | சுக் | 25-06-2026-23-02-2029 |
| புத | 12-08-2053-13-08-2070 | குரு | சூரி | 23-02-2029-12-12-2029 |
| கே | 13-08-2070-12-08-2077 | குரு | சந் | 12-12-2029-13-04-2031 |
| சுக் | 12-08-2077-12-08-2097 | குரு | செ | 13-04-2031-19-03-2032 |
| சூரி | 12-08-2097-14-08-2103 | குரு | ராகு | 19-03-2032-13-08-2034 |

இந்தச் சாதகருக்கு நடப்பு குரு தசாவில் (1), குரு புத்தி (1) ஆகும். இராசிக் கட்டப்படி 6 ஆம் அதிபதி சுக்கிரன் 11 இல் ஆகவே அடிமை வேலை மத்திமம், 7 ஆம் அதிபதி புதன் 9 இல் சுயதொழிலும் மத்திமம். 1, 5, 9 ஆம் பாவகங்களில் மொத்தம் 5 கோள்கள் ஆகவே அடுத்தவரிடத்தில் வேலை செய்ய விருப்பம் இருக்காது.

அதன்படி இவர் இராகு திசை முடியும் வரை அடுத்தவரிடத்தில் வேலை செய்து வந்தார். குரு தசா ஆரம்பித்த பின்னர் இன்னும் அடிமை வேலை சரிவராது எனப் பார்த்துக்கொண்டு இருந்த வேலையைக் குரு தசா (1) குரு புத்தியில் (1) விட்டு விட்டு, சுயமாக ஒரு வேன் வாங்கிக் காய்கறி விநியோகம் செய்து வருகிறார். இராசிக் கட்டத்தில் பத்தாம் வீட்டில் உள்ள கோளானச் சந்திரனின் காரகத் தொழில் செய்து வருகிறார்.

10. சாதகர் : சதீஷ்குமார். (8825430730)          பிறந்த நாள்   : 08.06.1991

பிறந்த நேரம் : காலை 10.05               பிறந்த ஊர் : சென்னை.

| | 32 | 31 | 42 | 19 | |
|---|---|---|---|---|---|
| | சந் | | புத சூரி | கேது | |
| 26 | | இராசி | | சுக் செவ் குரு லக் | 26 |
| 27 | சனி | ரேவதி-3 | | | 26 |
| | ராகு | | | | |
| | 28 | 25 | 29 | 26 | |

| | 9 | 10 | 11 | 12 | |
|---|---|---|---|---|---|
| | சந் | | புத சூரி | கேது | |
| 8 | | ஸ்ரீபதி பாவகம் | | லக் சுக் செவ் குரு | 1 |
| 7 | சனி | | | | 2 |
| | ராகு | | | | |
| | 6 | 5 | 4 | 3 | |

SATHISH KUMAR
08-06-1991 10:05:00
Chennai, T.N.
புத திசை இருப்பு 07-வருடம் 03-மாதம் 23-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சுக் செவ் குரு சந் |
| 2,6,10 | ராகு |
| 3,7,11 | சனி புத சூரி |
| 4,8,12 | கேது |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| புத | 30-09-1981-01-10-1998 | சுக் | சுக் | 30-09-2005-30-01-2009 |
| கே | 01-10-1998-30-09-2005 | சுக் | சூரி | 30-01-2009-30-01-2010 |
| சுக் | 30-09-2005-30-09-2025 | சுக் | சந் | 30-01-2010-01-10-2011 |
| சூரி | 30-09-2025-01-10-2031 | சுக் | செ | 01-10-2011-30-11-2012 |
| சந் | 01-10-2031-30-09-2041 | சுக் | ராகு | 30-11-2012-01-12-2015 |
| செ | 30-09-2041-30-09-2048 | சுக் | குரு | 01-12-2015-01-08-2018 |
| ராகு | 30-09-2048-01-10-2066 | சுக் | சனி | 01-08-2018-30-09-2021 |
| குரு | 01-10-2066-01-10-2082 | சுக் | புத | 30-09-2021-31-07-2024 |
| சனி | 01-10-2082-01-10-2101 | சுக் | கே | 31-07-2024-30-09-2025 |

இந்தச் சாதகருக்கு 6 ஆம் அதிபதி குரு இலக்கினத்தில். ஆய்வு விதிப்படி அடுத்தவரிடத்தில் வேலை செய்வது சரிவராது. அடுத்தவரிடத்தில் அடிபணிந்து வேலை செய்வது பிடிக்காமல் பல இடங்களில் வேலை மாற்றம் செய்துகொண்டே இருந்துள்ளார். 7 ஆம் அதிபதி 7 இல் இருப்பதால் சுயதொழில் செய்வது மத்திமம். ஆதலால் சுக்கிர தசாவில் (1) இராகு புத்தியில் (6) 2014 ஆம் ஆண்டு முதல் சுயமாக சந்தைப்படுத்துதல் தொழில் துவங்கியுள்ளார். சுக்கிர தசா (1) செவ்வாய் புத்தியில் (5) காதல் செய்து இராகு புத்தியில் (6) காதல் முறிவு திருமணத் தடையும் ஆகியும் உள்ளது.

சுக்கிர தசா (1) குரு புத்தியில் (5) பணத்தைச் சேமிக்க வேண்டும் என்கிற எண்ணம் துளியும் இல்லாமல், மிக உயர்ந்த ஆடைகள் அணிவது, அதிகம் சினிமா பார்ப்பது, 5 நட்சத்திர ஓட்டல்களில் உணவு பல பெண்கள் தொடர்பு என உல்லாசமாகக் (5) காலம் கடத்தி உள்ளார். சனி புத்தியில் (7) செலவுகள் குறைந்து சிறிது மாற்றம் ஏற்பட்டுள்ளது.

11. சாதகர் : கோகுல பிரசாந்த் (7904531456) பிறந்த நாள் : 02.06.1995

பிறந்த நேரம் : மதியம் 2.45 பிறந்த ஊர் : சேலம்.

| | 30 | 22 | 30 | 29 | |
|---|---|---|---|---|---|
| | சனி | கேது சுக் | சூரி புத | | |
| 31 | | இராசி | | சந் | 28 |
| 25 | | புனர்பூசம்-4 | | செவ் | 24 |
| | | குரு | ராகு | லக் | |
| | 29 | 25 | 27 | 37 | |

| | 7 | 8 | 9 | 10 | |
|---|---|---|---|---|---|
| | | கேது சுக் | சூரி புத | சந் | |
| 6 | சனி | ஸ்ரீபதி பாவகம் | | | 11 |
| 5 | | | | செவ் | 12 |
| | | குரு | ராகு | லக் | |
| | 4 | 3 | 2 | 1 | |

GOKULA PRASANTH
02-06-1995 14:45:00
Salem,T.N.
குரு திசை இருப்பு 02-வருடம் 07-மாதம் 08-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சூரி புத |
| 2,6,10 | ராகு சனி சந் |
| 3,7,11 | குரு |
| 4,8,12 | கேது சுக் செவ் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| குரு | 09-01-1982-09-01-1998 | புத | புத | 09-01-2017-07-06-2019 |
| சனி | 09-01-1998-09-01-2017 | புத | கே | 07-06-2019-04-06-2020 |
| புத | 09-01-2017-09-01-2034 | புத | சுக் | 04-06-2020-05-04-2023 |
| கே | 09-01-2034-09-01-2041 | புத | சூரி | 05-04-2023-09-02-2024 |
| சுக் | 09-01-2041-09-01-2061 | புத | சந் | 09-02-2024-10-07-2025 |
| சூரி | 09-01-2061-09-01-2067 | புத | செ | 10-07-2025-08-07-2026 |
| சந் | 09-01-2067-09-01-2077 | புத | ராகு | 08-07-2026-24-01-2029 |
| செ | 09-01-2077-10-01-2084 | புத | குரு | 24-01-2029-02-05-2031 |
| ராகு | 10-01-2084-10-01-2102 | புத | சனி | 02-05-2031-09-01-2034 |

இந்தச் சாதகர் பி.இ. பொறியியல் படித்துள்ளார். இராசிக் கட்டத்தில் 6 ஆம் அதிபதி சனி 7 இல். 7 ஆம் அதிபதி குரு 3 இல். ஆகவே பிறரிடம் வேலை செய்வது மற்றும் சுயதொழில் செய்வது இரண்டும் மத்திமம் ஆகும். சனி தசா (6) முடியும் வரை தனியார் நிறுவனத்தில் ஒழுங்காக வேலை செய்துள்ளார். அதன்பின் புதன் தசா (9) புதன் புத்தி (9) ஆரம்பித்த 20 நாளில் வேலையை விட்டு நின்று விட்டார். புதன்புத்தி முழுவதும் வேலைக்குச் செல்ல வில்லை. அதன்பின் புதன் (9) தசாவில் கேது (8) புத்தி நடக்கிறது. இவருக்கு மனத்துக்குப் பிடித்தமான வேலை கிடைக்கவில்லை என வீட்டிலேயே இருந்து வருகிறார். இன்னும் திருமணமும் ஆகவில்லை.

அடுத்து சுக்கிரன் புத்தி (8), சூரிய புத்தி (9) முடிந்து, சந்திர புத்தி (10) வரும்வரை சரியான மணத்திற்குப் பிடித்த வேலை கிடைக்காது என்றும் பலன் கூறலாம்.

12. முனைவர். தம்பிதுரை (79040 71504) பிறந்த நாள் : 09.10.1991

பிறந்த நேரம் : அதிகாலை 3.30 பிறந்த ஊர் : தர்மபுரி.

|  | 26 | 25 | 31 | 39 |  |
|---|---|---|---|---|---|
|  |  |  |  | கேது |  |
| 21 |  | இராசி |  |  | 34 |
| 31 | சனி | சித்திரை-4 |  | சுக் குரு லக் | 32 |
|  | ராகு |  | சந் செவ் | சூரி புத |  |
|  | 23 | 32 | 23 | 20 |  |

|  | 8 | 9 | 10 | 11 |  |
|---|---|---|---|---|---|
|  |  |  |  | கேது |  |
| 7 |  | ஸ்ரீபதி பாவகம் |  |  | 12 |
| 6 | சனி |  |  | லக் சுக் குரு | 1 |
|  | ராகு |  | செவ் சந் | சூரி புத |  |
|  | 5 | 4 | 3 | 2 |  |

Dr. THAMBITHURAI
09-10-1991 03:30:00
Dharmapuri, T.N.
செவ் திசை இருப்பு 01-வருடம் 04-மாதம் 17-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1, 5, 9 | சுக் குரு ராகு |
| 2, 6, 10 | சூரி புத சனி |
| 3, 7, 11 | செவ் சந் கேது |
| 4, 8, 12 | |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| செ | 24-02-1986-24-02-1993 | குரு | குரு | 24-02-2011-14-04-2013 |
| ராகு | 24-02-1993-24-02-2011 | குரு | சனி | 14-04-2013-26-10-2015 |
| குரு | 24-02-2011-24-02-2027 | குரு | புத | 26-10-2015-31-01-2018 |
| சனி | 24-02-2027-24-02-2046 | குரு | கே | 31-01-2018-07-01-2019 |
| புத | 24-02-2046-24-02-2063 | குரு | சுக் | 07-01-2019-07-09-2021 |
| கே | 24-02-2063-24-02-2070 | குரு | சூரி | 07-09-2021-26-06-2022 |
| சுக் | 24-02-2070-24-02-2090 | குரு | சந் | 26-06-2022-26-10-2023 |
| சூரி | 24-02-2090-25-02-2096 | குரு | செ | 26-10-2023-01-10-2024 |
| சந் | 25-02-2096-25-02-2106 | குரு | ராகு | 01-10-2024-24-02-2027 |

இந்தச் சாதகர் எம்.எஸ்.சி., முனைவர் பட்டம் படித்துள்ளார். இவரின் இராசிக் கட்டத்தில் 6 ஆம் அதிபதி சனி 6 ஆம் வீட்டில் இருக்கிறார். அடுத்தவரிடத்தில் வேலை செய்வது உத்தமம் ஆகும். குரு தசாவில் (1) சனி புத்தியில் (6) ஒரு கல்லூரியில் பேராசிரியர் பணியில் சேர்ந்துள்ளார். புதன் புத்தி (2), கேது புத்தி (11) முடியும் வரை பேராசிரியராக அதே கல்லூரியில் பணிபுரிந்து வந்துள்ளார்.

அதன்பின் வந்த சுக்கிர புத்தியில் (1) வேலைக்குச் செல்ல ஏனோ விருப்பமில்லாமல் வீட்டில் இருந்து வருகிறார். மூன்றுமாதங்கள் முன்பு சுக்கிர புத்தியில் (1) குழந்தையும் பிறந்துள்ளது. புத்தியை நடத்தும் கோள் 1 ஆம் பாவகத்தில் இருந்து 5 ஆம் பாவகப் பலனை 100 விழுக்காடு கொடுத்து அதன்மூலம் குழந்தை கிடைத்துள்ளது. அதேநேரத்தில் புத்தியை நடத்தும் கோள் 1 இல் இருந்தபடியால் 2, 6, 10 ஆம் பாவகக் காரகத்துவங்கள் பாதிக்கப்பட்டுள்ளது.

13. சாதகர் : மோனிகா (97157 74074) பிறந்த நாள் : 09.09.1999

பிறந்த நேரம் : அதிகாலை 5.12 பிறந்த ஊர் : தர்மபுரி.

| | 23 | 23 | 32 | 40 | |
|---|---|---|---|---|---|
| | | குரு சனி | | | |
| 28 | | இராசி | | ராகு சுக் | 19 |
| 33 | கேது | மகம்-4 | | லக் சந் சூரி புத | 29 |
| | | செவ் | | | |
| | 27 | 28 | 28 | 27 | |

| | 8 | 9 | 10 | 11 | |
|---|---|---|---|---|---|
| | | குரு சனி | | | |
| 7 | | ஸ்ரீபதி பாவகம் | | ராகு | 12 |
| 6 | கேது | | | லக் சுக் சந் சூரி புத | 1 |
| | | செவ் | | | |
| | 5 | 4 | 3 | 2 | |

MONIKA
09-09-1999 05:12:00
Dharmapuri, T.N.
கேது திசை இருப்பு 01-வருடம் 05-மாதம் 26-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சுக் சந் சூரி புத குரு சனி |
| 2,6,10 | கேது |
| 3,7,11 | |
| 4,8,12 | செவ் ராகு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| கே | 06-03-1994-06-03-2001 | சுக் | சுக் | 06-03-2001-05-07-2004 |
| சுக் | 06-03-2001-06-03-2021 | சுக் | சூரி | 05-07-2004-06-07-2005 |
| சூரி | 06-03-2021-06-03-2027 | சுக் | சந் | 06-07-2005-06-03-2007 |
| சந் | 06-03-2027-06-03-2037 | சுக் | செ | 06-03-2007-06-05-2008 |
| செ | 06-03-2037-06-03-2044 | சுக் | ராகு | 06-05-2008-06-05-2011 |
| ராகு | 06-03-2044-06-03-2062 | சுக் | குரு | 06-05-2011-04-01-2014 |
| குரு | 06-03-2062-06-03-2078 | சுக் | சனி | 04-01-2014-06-03-2017 |
| சனி | 06-03-2078-06-03-2097 | சுக் | புத | 06-03-2017-05-01-2020 |
| புத | 06-03-2097-07-03-2114 | சுக் | கே | 05-01-2020-06-03-2021 |

இந்தச் சாதகர் பி.எஸ்சி., பி.எட்., படித்துள்ளார். நடப்பு சுக்கிர தசா (1) புதன் புத்தி (1) ஆகும். இவர் படித்து முடித்ததோடு சரி எந்த வேலைக்கும் போகவில்லை. நடப்பு புதன் 1 ஆம் பாவகப் புத்தியில் காதல் வயப்பட்டு ஒரு பையனைக் காதல் செய்து வருகிறார். புத்தியை நடத்தும் கோள் 1 இல் இருக்கும்போது 5 ஆம் பாவகக் காரகங்கள் 100 விழுக்காடு இயங்கும். அதன்படி இவர் 5 ஆம் பாவகக் காரகமான காதல் செய்து வருகிறார்.

இவரது இராசிக் கட்டம் படி 6 ஆம் அதிபதி சனி, 9 இல் இருப்பதால் அடுத்தவரிடத்தில் வேலைக்குச் செல்ல விருப்பம் இருக்காது. மேலும் 1, 5, 9 ஆம் திரிகோணங்களில் மொத்தம் 6 கோள்கள் உள்ளதால் அடிமை வேலைக்குச் செல்லும் எண்ணம் வராது.

14. சாதகர் : பால்ராஜ் (79045 31456) பிறந்த நாள் : 08.03.1978

பிறந்த நேரம் : அதிகாலை 05.47 பிறந்த ஊர் : மேட்டூர்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 28 | 35 | 28 | 23 | |
| | கேது சுக் புத | | | குரு செவ் | |
| 25 | சூரி லக் சந் | இராசி | | | 31 |
| 28 | | சதயம்-1 | | சனி | 24 |
| | | | | ராகு | |
| | 39 | 34 | 22 | 20 | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 2 | 3 | 4 | 5 | |
| | புத சுக் கேது | | | குரு | |
| 1 | லக் சந் சூரி | ஸ்ரீபதி பாவகம் | | செவ் | 6 |
| 12 | | | | சனி | 7 |
| | | | | ராகு | |
| | 11 | 10 | 9 | 8 | |

PAL RAJ
08-03-1978 05:47:00
Mettur,T.N.
ராகு திசை இருப்பு 14-வருடம் 08-மாதம் 03-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சந் சூரி குரு |
| 2,6,10 | புத சுக் கேது செவ் |
| 3,7,11 | சனி |
| 4,8,12 | ராகு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| ராகு | 10-11-1974-09-11-1992 | சனி | சனி | 09-11-2008-13-11-2011 |
| குரு | 09-11-1992-09-11-2008 | சனி | புத | 13-11-2011-23-07-2014 |
| சனி | 09-11-2008-10-11-2027 | சனி | கே | 23-07-2014-01-09-2015 |
| புத | 10-11-2027-09-11-2044 | சனி | சுக் | 01-09-2015-31-10-2018 |
| கே | 09-11-2044-10-11-2051 | சனி | சூரி | 31-10-2018-13-10-2019 |
| சுக் | 10-11-2051-10-11-2071 | சனி | சந் | 13-10-2019-14-05-2021 |
| சூரி | 10-11-2071-09-11-2077 | சனி | செ | 14-05-2021-23-06-2022 |
| சந் | 09-11-2077-10-11-2087 | சனி | ராகு | 23-06-2022-28-04-2025 |
| செ | 10-11-2087-10-11-2094 | சனி | குரு | 28-04-2025-10-11-2027 |

இந்தச் சாதகர் அரசுப் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்து வந்தார். கடந்த ஓர் ஆண்டாக வேலைக்குப் போகாமல் வீட்டிலேயே இருந்து வருகிறார். என்ன காரணம் என்று சொல்லவும் தெரியவில்லை, ஏனோ வேலைக்குப் போக விருப்பம் இல்லை கட்டாயபடுத்தாதீர் என்று கூறி வருகிறார். இவரது ஆரோக்கியம் (1) நன்றாகத்தான் உள்ளது.

இவரது இராசிக் கட்டத்தில் 6 ஆம் அதிபதி சந்திரன் 1 ஆம் வீட்டில் உள்ளதால் அடிமை உத்தியோகம் பார்க்க விருப்பம் இராது. மேலும் கடந்த ஓர் ஆண்டாக இவருக்குச் சனி தசாவில் (7) சூரிய புத்தி (1) நடந்து உள்ளது. இப்போது நடக்கும் புத்தி சந்திரன், சந்திரனும் 1 ஆம் பாவகத்தில் உள்ளார். 1 ஆம் பாவகம் என்பது 2 ஆம் பாவகத்திற்கு 12 ஆகவும், 6 ஆம் பாவகத்திற்கு 8 ஆகவும், 10 ஆம் பாவகத்திற்கு 4 ஆகவும் வருகிறபடியால், 2, 6, 10 ஆம் பாவகக் காரகங்கள் பாதிக்கப்படுகிறது.

39. சாதகர் : தமிழ் செல்வன் (63817 08726) பிறந்த நாள் : 30.06.1988

பிறந்த நேரம் : மதியம் 02.18 பிறந்த ஊர் : மணப்பாறை

| | 42 | 27 | 23 | 18 | |
|---|---|---|---|---|---|
| | | | குரு சுக் புத | சூரி | |
| 30 | செவ் ராகு | இராசி | | | 27 |
| 28 | | பூராடம்-3 | | கேது | 27 |
| | சந் சனி | | லக் | | |
| | 30 | 19 | 38 | 28 | |

| | 6 | 7 | 8 | 9 | |
|---|---|---|---|---|---|
| | செவ் | | குரு சுக் புத | சூரி | |
| 5 | ராகு | ஸ்ரீபதி பாவகம் | | | 10 |
| 4 | | | | கேது | 11 |
| | சனி சந் | | லக் | | |
| | 3 | 2 | 1 | 12 | |

Tamil Selvan
30-06-1988 14:18:00
Manapparai,T.N.
சுக் திசை இருப்பு 06-வருடம் 04-மாதம் 00-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | ராகு சூரி |
| 2,6,10 | செவ் |
| 3,7,11 | சனி சந் கேது |
| 4,8,12 | குரு சுக் புத |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| சுக் | 31-10-1974-31-10-1994 | ராகு ராகு | 31-10-2017-13-07-2020 |
| சூரி | 31-10-1994-30-10-2000 | ராகு குரு | 13-07-2020-06-12-2022 |
| சந் | 30-10-2000-31-10-2010 | ராகு சனி | 06-12-2022-12-10-2025 |
| செ | 31-10-2010-31-10-2017 | ராகு புத | 12-10-2025-01-05-2028 |
| ராகு | 31-10-2017-31-10-2035 | ராகு கே | 01-05-2028-19-05-2029 |
| குரு | 31-10-2035-31-10-2051 | ராகு சுக் | 19-05-2029-19-05-2032 |
| சனி | 31-10-2051-31-10-2070 | ராகு சூரி | 19-05-2032-13-04-2033 |
| புத | 31-10-2070-31-10-2087 | ராகு சந் | 13-04-2033-13-10-2034 |
| கே | 31-10-2087-31-10-2094 | ராகு செ | 13-10-2034-31-10-2035 |

இந்தச் சாதகருக்கு விதிக்கொடுப்பினைப்படி 6 ஆம் அதிபதி குரு 8 இல், 7 ஆம் அதிபதி செவ்வாய் 5 இல். அடிமை வேலையை விடச் சுயதொழில் வருமானம் குறைவாக இருந்தாலும் சுயகௌரவத்தோடு செய்யலாம்.

இவர் ஒரு தனியார் ஐ.டி.ஐ இல் தொழில் கல்வி ஆசிரியராகப் பணி புரிந்து வந்தார். இவருக்கு இராகு தசா (1) இராகு புத்தி (1) 31.10.2017 முதல் 13.07.2020 வரை நடைபெறும் காலம் ஆகும். இந்தப் புத்தி ஆரம்பித்த பின்னர் எதற்காகத் தனது வேலையை இராஜினாமா செய்கிறோம் என்ற சிந்தனை சிறிதும் இல்லாமல் வேலையை விட்டுவிட்டுத் தற்சமயம் வரை வீட்டில் சும்மா இருந்து வருகிறார்.

மற்றவரிடத்தில் பணிபுரிவது என்பது 6 ஆம் பாவகம் ஆகும். 6 ஆம் பாவகத்தில் இருந்து புத்தியை நடத்தும் கோள் 8 ஆக வருகிறபடியால் 6 ஆம் பாவகத்தின் காரகத்துவத்திற்கு எதிரான முடிவுகளை எடுத்துள்ளார்.

40. சாதகர் : கேசவ மூர்த்தி (94420 47930) பிறந்த நாள் : 30.04.1971

பிறந்த நேரம் : மதியம் 02.50 பிறந்த ஊர் : நெய்வேலி

| 8 | 9 | 10 | 11 |
|---|---|---|---|
| சுக் புத | சூரி சனி | | சந் |
| 7 | Kesava Moorthy 30-04-1971 14:50:00 Neyveli,T.N. | | 12 கேது |
| 6 ராகு | ஸ்ரீபதி பாவகம் வயது 48-வருடம் 05-மாதம் 28-நாள் | | 1 143.39.37லக் |
| 5 செவ் | 4 குரு | 3 | 2 |

DEG

ஸ்ரீபதி பாவகப்படி

| திரிகோணம் | கோள்கள் |
|---|---|
| 1,5,9 | செவ் சூரி சனி |
| 2,6,10 | ராகு |
| 3,7,11 | சந் |
| 4,8,12 | குரு சுக் புத கேது |
| குரு திசை இருப்பு | |
| 11-வருடம் 05-மாதம் 10-நாள் | |

| திசைகள் | |
|---|---|
| குரு | 10-10-1966-10-10-1982 |
| சனி | 10-10-1982-10-10-2001 |
| புத | 10-10-2001-10-10-2018 |
| கேது | 10-10-2018-10-10-2025 |
| சுக் | 10-10-2025-10-10-2045 |
| சூரி | 10-10-2045-10-10-2051 |
| சந் | 10-10-2051-10-10-2061 |
| செவ் | 10-10-2061-09-10-2068 |
| ராகு | 09-10-2068-10-10-2086 |

| திசை புக்திகள் | | |
|---|---|---|
| சனி | சனி | 10-10-1982-13-10-1985 |
| சனி | புத | 13-10-1985-22-06-1988 |
| சனி | கேது | 22-06-1988-01-08-1989 |
| சனி | சுக் | 01-08-1989-30-09-1992 |
| சனி | சூரி | 30-09-1992-12-09-1993 |
| சனி | சந் | 12-09-1993-13-04-1995 |
| சனி | செவ் | 13-04-1995-22-05-1996 |
| சனி | ராகு | 22-05-1996-29-03-1999 |
| சனி | குரு | 29-03-1999-10-10-2001 |

| திசை புக்தி அந்தரங்கள் | | | |
|---|---|---|---|
| சனி | சூரி | சூரி | 30-09-1992-17-10-1992 |
| சனி | சூரி | சந் | 17-10-1992-15-11-1992 |
| சனி | சூரி | செவ் | 15-11-1992-06-12-1992 |
| சனி | சூரி | ராகு | 06-12-1992-27-01-1993 |
| சனி | சூரி | குரு | 27-01-1993-14-03-1993 |
| சனி | சூரி | சனி | 14-03-1993-08-05-1993 |
| சனி | சூரி | புத | 08-05-1993-26-06-1993 |
| சனி | சூரி | கேது | 26-06-1993-16-07-1993 |
| சனி | சூரி | சுக் | 16-07-1993-12-09-1993 |

இந்தச் சாதகருக்குச் சனி தசாவில் (9) சூரிய புத்தி (9) 30.09.1992 முதல் 12.09.1993 வரை நடைபெற்றுள்ளது. அப்போது இவர் சிங்கப்பூரில் வேலை செய்து வந்தகாலம் ஆகும். இவருக்கும் இவரது மேலதிகாரிக்கும் ஒத்துவராது. இவரை வேலையை விட்டு நீக்க அவர்களும் முயற்சித்து இருக்கிறார்கள், இவரே வேலையை இராஜினாமா செய்து விட்டார்.

அடுத்து வந்த சந்திர புத்தியில் (11) வேறு வேலையில் சேர்ந்தார். அதன்பின் வந்த செவ்வாய் புத்தியில் (5) அந்த வேலையையும் இராஜினாமா செய்துள்ளார். ஆக இவர் 1, 5, 9 ஆம் புத்திகளில் தொடர்ந்து வேலையை இராஜினாமா செய்து வந்துள்ளார். 1993 சூரிய புத்தி முதல் சோதிடமும் கற்றுக்கொண்டு பயிற்சியும் செய்து வருகிறார்.

4, 8 ஆகிய பாவங்களில் 3 கோள்கள் இருந்தபடியால் தொடர்ந்து இருக்க முடியவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

41. சாதகர் : சுரேஷ் குமார் (63838 02925)  பிறந்த நாள் : 30.12.1974

பிறந்த நேரம் : மதியம் 02.30  பிறந்த ஊர் : சென்னை.

| | லக் | கேது | சனி |
|---|---|---|---|
| குரு | இராசி | | சந் |
| | புனர்பூசம்-4 | | |
| சுக் புத சூரி | செவ் ராகு | | |

மேல்: 19 30 30 23 ; இடம்: 30 26 ; வலம்: 27 29 ; கீழ்: 30 23 31 39

| | லக் | கேது | சனி சந் |
|---|---|---|---|
| குரு | ஸ்ரீபதி பாவகம் | | |
| | | | |
| சூரி புத சுக் | ராகு செவ் | | |

மேல்: 12 1 2 3 ; இடம்: 11 10 ; வலம்: 4 5 ; கீழ்: 9 8 7 6

Suresh Kumar.J
30-12-1974 14:30:00
Chennai, T.N.
குரு திசை இருப்பு 02-வருடம் 02-மாதம் 23-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சூரி புத சுக் |
| 2,6,10 | கேது |
| 3,7,11 | சனி சந் குரு |
| 4,8,12 | ராகு செவ் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| குரு | 24-03-1961-24-03-1977 | கே | கே | 24-03-2013-20-08-2013 |
| சனி | 24-03-1977-24-03-1996 | கே | சுக் | 20-08-2013-20-10-2014 |
| புத | 24-03-1996-24-03-2013 | கே | சூரி | 20-10-2014-25-02-2015 |
| கே | 24-03-2013-24-03-2020 | கே | சந் | 25-02-2015-26-09-2015 |
| சுக் | 24-03-2020-24-03-2040 | கே | செ | 26-09-2015-22-02-2016 |
| சூரி | 24-03-2040-24-03-2046 | கே | ராகு | 22-02-2016-12-03-2017 |
| சந் | 24-03-2046-24-03-2056 | கே | குரு | 12-03-2017-16-02-2018 |
| செ | 24-03-2056-25-03-2063 | கே | சனி | 16-02-2018-28-03-2019 |
| ராகு | 25-03-2063-24-03-2081 | கே | புத | 28-03-2019-24-03-2020 |

இந்தச் சாதகரின் விதிக்கொடுப்பினை 6 ஆம் அதிபதி புதன் 9 இல். 7 ஆம் அதிபதி சுக்கிரன் 9 இல். அடிமை வேலைக்குச் சுயதொழில் மேன்மை தரும்.

இவர் ஒரு சந்தைப்படுத்துதல் நிறுவனத்தில் சந்தைப்படுத்துதல் வேலை செய்து வருகிறார். நடப்பு கேது தசா (2) புதன் புத்தி (9) 28.03.2019 முதல் 24.03.2020 வரை நடைபெற்று வருகிறது. தசா பலன் முறிவு வேறு உள்ளது. அதன்படி இவர் வேலைக்குத் தொடர்ந்து செல்கிறார். ஆனால் வாங்கும் சம்பளம் 10 நாட்களில் காலி ஆகி விடுவதாகக் கூறுகிறார். அதனால் பணம் பற்றாக்குறை யாரிடமாவது கடன் வாங்கலாம் என்றால் அதுவும் கிடைக்கவில்லை. பணம் பிரச்சினையாக இருப்பதால் வேலையில் கவனம் செலுத்த முடியாத நிலை ஏற்பட்டுள்ளது. 1, 5, 9 ஆம் பாவகம் இயங்கும்போது 2, 6, 10 ஆம் பாவகங்கள் எப்படி பாதிக்கப்படும் என்பதை அறிய முடிகிறது.

42. சாதகா் : நெல்லையப்பன் (95854 47495) பிறந்த நாள் : 23.09.1974

பிறந்த நேரம் : அதிகாலை 05.25 பிறந்த ஊா் : மதுரை

<table>
<tr><td>8</td><td>9</td><td>10<br>கேது</td><td>11<br>சனி</td></tr>
<tr><td>7<br>குரு</td><td colspan="2" rowspan="2">Nellaiappan<br>23-09-1974 05:25:00<br>Madurai,T.N.<br>ஸ்ரீபதி பாவகம்<br>வயது<br>45-வருடம் 01-மாதம் 03-நாள்</td><td>12</td></tr>
<tr><td>6</td><td>1<br>144.41.16லக்<br>சுக்<br>சூரி</td></tr>
<tr><td>5</td><td>4<br>ராகு<br>சந்</td><td>3</td><td>2<br>செவ்<br>புத</td></tr>
</table>

DEG

| ஸ்ரீபதி பாவகப்படி | |
|---|---|
| திரிகோணம் | கோள்கள் |
| 1,5,9 | சுக் சூரி |
| 2,6,10 | செவ் புத கேது |
| 3,7,11 | குரு சனி |
| 4,8,12 | ராகு சந் |
| கேது திசை இருப்பு | |
| 05-வருடம் 06-மாதம் 27-நாள் | |

| திசைகள் | |
|---|---|
| கேது | 21-04-1973-20-04-1980 |
| சுக் | 20-04-1980-20-04-2000 |
| சூரி | 20-04-2000-21-04-2006 |
| சந் | 21-04-2006-20-04-2016 |
| செவ் | 20-04-2016-21-04-2023 |
| ராகு | 21-04-2023-21-04-2041 |
| குரு | 21-04-2041-21-04-2057 |
| சனி | 21-04-2057-20-04-2076 |
| புத | 20-04-2076-21-04-2093 |

| திசை புக்திகள் | | |
|---|---|---|
| சூரி | சூரி | 20-04-2000-08-08-2000 |
| சூரி | சந் | 08-08-2000-07-02-2001 |
| சூரி | செவ் | 07-02-2001-14-06-2001 |
| சூரி | ராகு | 14-06-2001-09-05-2002 |
| சூரி | குரு | 09-05-2002-25-02-2003 |
| சூரி | சனி | 25-02-2003-07-02-2004 |
| சூரி | புத | 07-02-2004-14-12-2004 |
| சூரி | கேது | 14-12-2004-21-04-2005 |
| சூரி | சுக் | 21-04-2005-21-04-2006 |

| திசை புக்தி அந்தரங்கள் | | | |
|---|---|---|---|
| சூரி | சுக் | சுக் | 21-04-2005-20-06-2005 |
| சூரி | சுக் | சூரி | 20-06-2005-09-07-2005 |
| சூரி | சுக் | சந் | 09-07-2005-08-08-2005 |
| சூரி | சுக் | செவ் | 08-08-2005-29-08-2005 |
| சூரி | சுக் | ராகு | 29-08-2005-23-10-2005 |
| சூரி | சுக் | குரு | 23-10-2005-11-12-2005 |
| சூரி | சுக் | சனி | 11-12-2005-07-02-2006 |
| சூரி | சுக் | புத | 07-02-2006-31-03-2006 |
| சூரி | சுக் | கேது | 31-03-2006-21-04-2006 |

இவருக்குச் சூரிய திசை (1) குரு புத்தியில் (7) திருமணம். சனி புத்தியில் (11) முதல் பெண்குழந்தை. சுக்கிர புத்தியில் (1) இரண்டாவது பெண் குழந்தை செனனம்.

இந்த 2 ஆவது குழந்தை பிறந்த நேரத்தில் இவா் வெளியூரில் பணி செய்துக்கொண்டு இருந்துள்ளாா். குழந்தையைப் பாா்க்க வர வேண்டும். ஆனால் கையில் 10 ருபாய் கூட இல்லையாம். அடுத்தவரிடத்தில் கடன் கேட்பது சுயகௌரவக் குறைச்சல் என்று ஒருநாள் முழுவதும் அமைதியாக இருந்துள்ளாா். அடுத்தநாள் இவரது தம்பி யாரிடமோ கடன் வாங்கி அதன்பின் சொந்த ஊருக்குச் சென்று குழந்தையைப் பாா்த்து இருக்கிறாா்.

இங்குப் பல விசயங்களைக் கவனிக்க வேண்டும். சுக்கிர புத்தியில் (1) 5 ஆம் பாவகம் இயங்கிக் குழந்தை பிறந்துள்ளது. 2 ஆம் பாவகம் சரியாக இயங்காததால் பணநெருக்கடி, 6 ஆம் பாவகம் கடன் என்றால் புத்தியை நடத்தும் கோள் 6 க்கு 8 ஆகும். எனவே கடன் (6) வாங்கச் சுயகௌரவம் (1) தடுத்துள்ளது.

43. சாதகர் : ஜெகநாதன் (87787 61261) பிறந்த நாள் : 14.02.1969

பிறந்த நேரம் : அதிகாலை 05.43 பிறந்த ஊர் : மதுரை.

| | 25 | 24 | 29 | 31 | |
|---|---|---|---|---|---|
| | சனி சுக் ராகு | | | | |
| 24 | சூரி | இராசி | | | 26 |
| 31 | லக் புத | பூராடம்-4 | | | 27 |
| | சந் | செவ் | | கேது குரு | |
| | 27 | 33 | 31 | 29 | |

| | 3 | 4 | 5 | 6 | |
|---|---|---|---|---|---|
| | ராகு சுக் சனி | | | | |
| 2 | | ஸ்ரீபதி பாவகம் | | | 7 |
| 1 | லக் புத சூரி | | | | 8 |
| | சந் | | செவ் | கேது குரு | |
| | 12 | 11 | 10 | 9 | |

Jaganathan
14-02-1969 05:43:00
Madurai,T.N.
சுக் திசை இருப்பு 01-வருடம் 11-மாதம் 17-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | புத சூரி கேது குரு |
| 2,6,10 | செவ் |
| 3,7,11 | ராகு சுக் சனி |
| 4,8,12 | சந் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சுக் | 02-02-1951-02-02-1971 | குரு | குரு | 02-02-2012-22-03-2014 |
| சூரி | 02-02-1971-01-02-1977 | குரு | சனி | 22-03-2014-02-10-2016 |
| சந் | 01-02-1977-02-02-1987 | குரு | புத | 02-10-2016-08-01-2019 |
| செ | 02-02-1987-01-02-1994 | குரு | கே | 08-01-2019-15-12-2019 |
| ராகு | 01-02-1994-02-02-2012 | குரு | சுக் | 15-12-2019-15-08-2022 |
| குரு | 02-02-2012-02-02-2028 | குரு | சூரி | 15-08-2022-03-06-2023 |
| சனி | 02-02-2028-02-02-2047 | குரு | சந் | 03-06-2023-02-10-2024 |
| புத | 02-02-2047-02-02-2064 | குரு | செ | 02-10-2024-08-09-2025 |
| கே | 02-02-2064-02-02-2071 | குரு | ராகு | 08-09-2025-02-02-2028 |

இந்த இராகு தசா (3) கேது புத்தியில் (9) வெளிநாடு சென்று உள்ளார். தற்சமயம் குரு தசா (9) கேது புத்தி (9) 08.01.2019 முதல் 15.12.2019 வரை நடக்கிறது.

தெய்வபக்தி ஏதும் இல்லாமல் நாத்திகவாதியாக இவர் இருந்துள்ளார். ஆனால் தற்சமயம் குருதிசை கேதுபுத்தி துவங்கிய நாள் முதல் மகான்கள் தரிசனத்திற்குப் பயணம் செய்துகொண்டு இருக்கிறார். சாய்பாபா கோவில், இராகவேந்திரர் ஆலயம் என யாத்திரைகள் அதிகம் மேற்கொண்டு வருகிறார். சோதிடம் பொய் என்று வாக்குவாதம் செய்து வந்தவர், இப்போது சோதிட ஆலோசனை இன்றி ஏதும் செய்வது இல்லை.

1, 5, 9 இல் மொத்தம் நான்கு கோள்கள் இவருக்கு உள்ளன. ஆதலால் இயற்கை மற்றும் தெய்வபக்தி கண்டிப்பாக வந்தாக வேண்டும்.

44. சாதகர் : ஜெய் சுரேஷ் (95854 47495) பிறந்த நாள் : 09.07.1982

பிறந்த நேரம் : மதியம் 2.01 பிறந்த ஊர் : மதுரை

| | 38 | 30 | 23 | 28 | |
|---|---|---|---|---|---|
| | | | சுக் | புத ராகு சூரி | |
| 25 | | இராசி | | | 32 |
| 27 | சந் | அவிட்டம்-2 | | | 30 |
| | கேது | | லக் குரு | சனி செவ் | |
| | 23 | 29 | 29 | 23 | |

| | 6 | 7 | 8 | 9 | |
|---|---|---|---|---|---|
| | | | சுக் | புத ராகு சூரி | |
| 5 | | ஸ்ரீபதி பாவகம் | | | 10 |
| 4 | சந் | | | | 11 |
| | கேது | | லக் குரு | சனி செவ் | |
| | 3 | 2 | 1 | 12 | |

Jai Suresh D.C.E.,
09-07-1982 14:01:00
Madurai,T.N.
செவ் திசை இருப்பு 05-வருடம் 02-மாதம் 29-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | குரு புத ராகு சூரி |
| 2,6,10 | |
| 3,7,11 | கேது |
| 4,8,12 | சந் சுக் சனி செவ் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| செ | 08-10-1980-09-10-1987 | குரு | குரு | 08-10-2005-26-11-2007 |
| ராகு | 09-10-1987-08-10-2005 | குரு | சனி | 26-11-2007-09-06-2010 |
| குரு | 08-10-2005-08-10-2021 | குரு | புத | 09-06-2010-13-09-2012 |
| சனி | 08-10-2021-08-10-2040 | குரு | கே | 13-09-2012-20-08-2013 |
| புத | 08-10-2040-08-10-2057 | குரு | சுக் | 20-08-2013-20-04-2016 |
| கே | 08-10-2057-08-10-2064 | குரு | சூரி | 20-04-2016-07-02-2017 |
| சுக் | 08-10-2064-08-10-2084 | குரு | சந் | 07-02-2017-09-06-2018 |
| சூரி | 08-10-2084-08-10-2090 | குரு | செ | 09-06-2018-15-05-2019 |
| சந் | 08-10-2090-09-10-2100 | குரு | ராகு | 15-05-2019-08-10-2021 |

இந்தச் சாதகர் டி.சி.இ.,படித்துள்ளார். இவரின் விதிப்படி கொடுப்பினை 6 ஆம் அதிபதி குரு 1 ஆம் வீட்டில், 7 ஆம் அதிபதி செவ்வாய் 12 ஆம் வீட்டில். அடிமை, சுயம் இரண்டும் சரியில்லை. அடிமை வேலைக்கு எதிரான 1, 5, 9 ஆம் திரிகோணத்தில் 4 கோள்கள், சுயதொழிலைக் கெடுக்கும் 8, 12 ஆம் பாவகத்தில் 3 கோள்கள். சிக்கலான சாதக அமைப்பு. அதாவது இவரின் சாதப்படி 1, 5, 9 ஆம் பாவகத்தில் உள்ள புத்திகளில் 2, 6, 10 ஆம் பாவகங்கள் பாதிக்கப்படும். 4, 8, 12 ஆம் பாவகங்களில் உள்ள கோள்களின் புத்திகளில் 1, 5, 9 ஆம் பாவகக் காரகங்கள் பாதிக்கப்படும்.

நடப்பு குரு தசா (1) இராகு புத்தி (9) ஆகும். நடப்பு புத்தி 9 ஆம் பாவகம் ஆகையால் படித்த படிப்புக்குத் தகுதியான வேலை கிடைக்காததால் குடும்பக் கஷ்டத்தைப் போக்க பல சரக்குமளிகைக் கடையில் வேலைசெய்து வருகிறார்.

45. சாதகர் : கோமதி (99440 83119) பிறந்த நாள் : 12.06.1972

பிறந்த நேரம் : காலை 06.45 பிறந்த ஊர் : மதுரை

| | 38 | 40 | 20 | 23 | |
|---|---|---|---|---|---|
| | | | சனி சூரி | சந் புத சுக் லக் செவ் | |
| 27 | | இராசி | | கேது | 26 |
| 21 | ராகு | மிருகசீருஷம்-4 | | | 30 |
| | குரு | | | | |
| | 21 | 35 | 30 | 26 | |

| | 10 | 11 | 12 | 1 | |
|---|---|---|---|---|---|
| | | | சனி | லக் சூரி சந் புத சுக் | |
| 9 | | ஸ்ரீபதி பாவகம் | | செவ் கேது | 2 |
| 8 | ராகு | | | | 3 |
| | குரு | | | | |
| | 7 | 6 | 5 | 4 | |

Gomathi
12-06-1972 06:45:00
Madurai,T.N.
செவ் திசை இருப்பு 00-வருடம் 06-மாதம் 20-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சூரி சந் புத சுக் |
| 2,6,10 | செவ் கேது |
| 3,7,11 | குரு |
| 4,8,12 | ராகு சனி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| செ | 01-01-1966-01-01-1973 | சனி | சனி | 01-01-2007-04-01-2010 |
| ராகு | 01-01-1973-01-01-1991 | சனி | புத | 04-01-2010-13-09-2012 |
| குரு | 01-01-1991-01-01-2007 | சனி | கே | 13-09-2012-23-10-2013 |
| சனி | 01-01-2007-01-01-2026 | சனி | சுக் | 23-10-2013-23-12-2016 |
| புத | 01-01-2026-01-01-2043 | சனி | சூரி | 23-12-2016-05-12-2017 |
| கே | 01-01-2043-01-01-2050 | சனி | சந் | 05-12-2017-06-07-2019 |
| சுக் | 01-01-2050-01-01-2070 | சனி | செ | 06-07-2019-14-08-2020 |
| சூரி | 01-01-2070-02-01-2076 | சனி | ராகு | 14-08-2020-21-06-2023 |
| சந் | 02-01-2076-01-01-2086 | சனி | குரு | 21-06-2023-01-01-2026 |

இந்தச் சாதகர் வேலைக்கு ஏதும் போகவில்லை. இராசிக் கட்டப்படி விதி கொடுப்பினை 6 ஆம் அதிபதி செவ்வாய் 1 ஆம் வீட்டில், மேலும் 1, 5, 9 திரிகோணத்தில் மொத்தம் 4 கோள்கள் உள்ளன.

இவருக்கு நடப்பு சனி (12) தசாவில் (1) செவ்வாய் புத்தி, இதற்கு முன் சுக்கிரன் (1) புத்தி, சூரிய (1) புத்தி, சந்திர (1) புத்தி ஆகியவை 2013 ஆம் ஆண்டுமுதல் நடைபெற்று வருகிறது. இந்தக் கால கட்டத்தில் ஆரோக்கியம் (1) நன்றாக உள்ளது, யோகாப் பயிற்சிகள், மந்திர ஜெபங்கள் (5) ஆன்மிக (9) சிந்தனை, தீர்த்த யாத்திரைகள் ஆகியவை செய்து கொண்டு இருக்கிறார்.

இவருக்குப் புத்தியை நடத்திய கோள்கள் 1 ஆம் பாவகத்தில் இருந்து 1, 5, 9 ஆம் பாவகங்களை 100 விழுக்காடு இயக்கி அதன் பலன்களைப் பெறச் செய்துள்ளது. 2, 6, 10 ஆம் பாவகக் காரகங்கள் இயங்கவில்லை.

46. சாதகர் : குமார் (99440 83119) பிறந்த நாள் : 14.01.1998

பிறந்த நேரம் : இரவு 07.05 பிறந்த ஊர் : மதுரை

| | 19 | 28 | 35 | 20 | |
|---|---|---|---|---|---|
| | சனி | | | | |
| 23 | கேது குரு | இராசி | | லக் சந் | 27 |
| 23 | செவ் சுக் சூரி | ஆயில்யம்-2 | | ராகு | 28 |
| | புத | | | | |
| | 32 | 35 | 34 | 33 | |

| | 9 | 10 | 11 | 12 | |
|---|---|---|---|---|---|
| | சனி | | | | |
| 8 | குரு கேது | ஸ்ரீபதி பாவகம் | | லக் சந் | 1 |
| 7 | சூரி சுக் செவ் | | | ராகு | 2 |
| | புத | | | | |
| | 6 | 5 | 4 | 3 | |

Kumar
14-01-1998 19:05:00
Madurai,T.N.
புத திசை இருப்பு 10-வருடம் 04-மாதம் 25-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சந் சனி |
| 2,6,10 | ராகு புத |
| 3,7,11 | சூரி சுக் செவ் |
| 4,8,12 | குரு கேது |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| புத | 11-06-1991-11-06-2008 | சுக் | சுக் | 11-06-2015-11-10-2018 |
| கே | 11-06-2008-11-06-2015 | சுக் | சூரி | 11-10-2018-11-10-2019 |
| சுக் | 11-06-2015-11-06-2035 | சுக் | சந் | 11-10-2019-11-06-2021 |
| சூரி | 11-06-2035-11-06-2041 | சுக் | செ | 11-06-2021-11-08-2022 |
| சந் | 11-06-2041-11-06-2051 | சுக் | ராகு | 11-08-2022-11-08-2025 |
| செ | 11-06-2051-11-06-2058 | சுக் | குரு | 11-08-2025-11-04-2028 |
| ராகு | 11-06-2058-11-06-2076 | சுக் | சனி | 11-04-2028-11-06-2031 |
| குரு | 11-06-2076-11-06-2092 | சுக் | புத | 11-06-2031-11-04-2034 |
| சனி | 11-06-2092-12-06-2111 | சுக் | கே | 11-04-2034-11-06-2035 |

இவர் B.Com., படித்துவிட்டுச் சென்னையில் ஒரு தனியார் கம்பெனியில் பணிபுரிந்து வருகிறார். இவருக்குச் சுக்கிர தசாவில் (7) சந்திர புத்தி (1) கடந்த 11.10.2019 அன்று முதல் நடந்து வருகிறது.

இந்தச் சந்திர புத்தி துவங்கிய நாள் முதல், தான் படித்த படிப்புக்குக் குறைவான சம்பளம் வருகிறது என்பதை உணர்ந்து மேற்கொண்டு படிக்க வேண்டும் என்கிற முடிவுக்கு வந்து இருக்கிறார். ஆகையால் அவர் இதுவரை பார்த்து வந்த வேலையினை இராஜினாமா செய்யகிறார்.

ஆய்வு விதிப்படி புத்தியை நடத்தும் கோள் 1, 5, 9 ஆம் பாவகங்களில் இருக்கும்போது வருமானம் தொடர்பான சிந்தனை வராது தனது தகுதியை வளர்த்துக்கொள்ளும் சிந்தனை வரும் என்பதற்கேற்ப இந்தச் சாதகம் அமைந்துள்ளது.

47. சாதகர் : சுருதி (99440 83119) பிறந்த நாள் : 01.07.2000

பிறந்த நேரம் : மதியம் 01.58 பிறந்த ஊர் : மதுரை.

| | 41 | 40 | 18 | 19 | |
|---|---|---|---|---|---|
| | | | சனி குரு | சந் சூரி செவ் சுக் புத | |
| 28 | | இராசி | | ராகு | 26 |
| 27 | கேது | திருவாதிரை-1 | | | 32 |
| | | | லக் | | |
| | 26 | 29 | 29 | 22 | |

| | 6 | 7 | 8 | 9 | |
|---|---|---|---|---|---|
| | | | சனி குரு | சந் சூரி செவ் சுக் புத | |
| 5 | | ஸ்ரீபதி பாவகம் | | ராகு | 10 |
| 4 | கேது | | | | 11 |
| | | | லக் | | |
| | 3 | 2 | 1 | 12 | |

Suruthi
01-07-2000 13:58:00
Madurai,T.N.
ராகு திசை இருப்பு 14-வருடம் 02-மாதம் 11-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சந் சூரி செவ் சுக் புத |
| 2,6,10 | ராகு |
| 3,7,11 | |
| 4,8,12 | கேது சனி குரு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| ராகு | 12-09-1996-12-09-2014 | குரு குரு | 12-09-2014-31-10-2016 |
| குரு | 12-09-2014-12-09-2030 | குரு சனி | 31-10-2016-14-05-2019 |
| சனி | 12-09-2030-12-09-2049 | குரு புத | 14-05-2019-19-08-2021 |
| புத | 12-09-2049-12-09-2066 | குரு கே | 19-08-2021-26-07-2022 |
| கே | 12-09-2066-12-09-2073 | குரு சுக் | 26-07-2022-26-03-2025 |
| சுக் | 12-09-2073-12-09-2093 | குரு சூரி | 26-03-2025-12-01-2026 |
| சூரி | 12-09-2093-13-09-2099 | குரு சந் | 12-01-2026-14-05-2027 |
| சந் | 13-09-2099-13-09-2109 | குரு செ | 14-05-2027-19-04-2028 |
| செ | 13-09-2109-13-09-2116 | குரு ராகு | 19-04-2028-12-09-2030 |

இந்தச் சாதகர் இளங்கலை படித்து வருகிறார். இவரின் பாவகப்படி 9 ஆம் பாவகத்தில் 5 கோள்கள் உள்ளன.

இவருக்குக் குரு தசாவில் (8), குரு புத்தி (8) மற்றும் சனி புத்தியில் (8) 8 ஆம் பாவகம் இயங்கி 1, 5, 9 ஆம் பாவகக் காரகத்துவ பலன்களைக் கொடுக்காமல் இருந்து வந்தது. இப்போது 14.05.2019 முதல் புதன் புத்தி நடந்து வருகிறது. புதன் 9 ஆம் பாவகத்தில் இருந்து 1, 5, 9 ஆம் பாவகங்களை 100 விழுக்காடு இயக்கி வருகிறபடியால் ஆரோக்கியம் நன்றாக உள்ளது. 5 ஆம் பாவகக் காரகத்துவமான இசைமீது ஆர்வம் ஏற்பட்டு இசை பயின்று வருகிறார். ஆன்மிக விசயங்களில் பற்று ஏற்பட்டும் இருக்கிறது.

பொதுவாக இசைத் துறையில் இருப்பவர்களுக்கு 1, 5, 9 திரிகோணத்தில் அதிகக் கோள்கள் இருந்தால் மட்டுமே மனத்தில் அமைதி ஏற்பட்டு இசை கலையின்மீது ஆர்வம் வரும்.

48. சாதகர் : பாலமுருகன் (97913 88730) பிறந்த நாள் : 14.12.1987

பிறந்த நேரம் : காலை 06.10 பிறந்த ஊர் : கும்பகோணம்.

| | 24 | 29 | 20 | 24 | |
|---|---|---|---|---|---|
| | குரு ராகு | | | | |
| 29 | | இராசி | | | 33 |
| 33 | | உத்திரம்-3 | | | 36 |
| | சுக் | சனி சூரி லக் புத | செவ் | சந் கேது | |
| | 20 | 29 | 24 | 36 | |

| | 5 | 6 | 7 | 8 | |
|---|---|---|---|---|---|
| | குரு | | | | |
| 4 | ராகு | ஸ்ரீபதி பாவகம் | | | 9 |
| 3 | | | | சந் கேது | 10 |
| | சுக் | லக் புத சூரி சனி | செவ் | | |
| | 2 | 1 | 12 | 11 | |

Balamurugan
14-12-1987 06:10:00
Kumbakonam,T.N.
சூரி திசை இருப்பு 02-வருடம் 09-மாதம் 20-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | புத சூரி சனி குரு |
| 2,6,10 | சுக் சந் கேது |
| 3,7,11 | |
| 4,8,12 | ராகு செவ் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| சூரி | 03-10-1984-04-10-1990 | ராகு ராகு | 04-10-2007-16-06-2010 |
| சந் | 04-10-1990-03-10-2000 | ராகு குரு | 16-06-2010-09-11-2012 |
| செ | 03-10-2000-04-10-2007 | ராகு சனி | 09-11-2012-16-09-2015 |
| ராகு | 04-10-2007-03-10-2025 | ராகு புத | 16-09-2015-04-04-2018 |
| குரு | 03-10-2025-03-10-2041 | ராகு கே | 04-04-2018-23-04-2019 |
| சனி | 03-10-2041-03-10-2060 | ராகு சுக் | 23-04-2019-22-04-2022 |
| புத | 03-10-2060-03-10-2077 | ராகு சூரி | 22-04-2022-17-03-2023 |
| கே | 03-10-2077-03-10-2084 | ராகு சந் | 17-03-2023-15-09-2024 |
| சுக் | 03-10-2084-04-10-2104 | ராகு செ | 15-09-2024-03-10-2025 |

இந்தச் சாதகர் கோவில் அர்ச்சகராகப் பணிபுரிந்து வருகிறார். இராசிக் கட்டப்படி 7 ஆம் அதிபதி சுக்கிரன் 2 இல் இருப்பதால் சுயமாக ஓமங்களும் செய்து அதன்மூலம் வருமானம் ஈட்டி வருகிறார்.

இவருக்கு இராகு தசாவில் (4) குரு புத்தி (5) 16.06.2010 முதல் 09.11.2012 வரை நடைபெற்று உள்ளது. இந்தக் காலக்கட்டத்தில் தனது தங்கைக்குத் திருமண செலவுகளைத் தானே ஏற்று நடத்தி வைத்துள்ளார். இதன்படி மனமகிழ்ச்சி கிடைத்துள்ளது என்றாலும் 2 ஆம் பாவகம் செலவுகள் மூலம் பாதிக்கப்பட்டுள்ளது. மேலும் இதே புத்தியில் இவர் செய்து வந்த கோவில் அர்ச்சகர் பணி பறிபோனது.

அடுத்து வந்த சனி புத்தியில் (1) அதிக சிரமங்கள் பட்டு குடும்பக் கடனை நிவர்த்தி செய்துள்ளார். கடன் என்பது 6 ஆம் பாவகக் காரகம் ஆகும். 1 ஆம் பாவகப் புத்தியில் கடன் அடைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

49. சாதகர் : உப்பிலி ராஜ் (97861 12131) பிறந்த நாள் :14.11.1986

பிறந்த நேரம் : மதியம் 12.05 பிறந்த ஊர் : திருச்சி

| | 27 | 22 | 23 | 33 | |
|---|---|---|---|---|---|
| | ராகு | சந் | | | |
| 33 | குரு | இராசி | | | 28 |
| 28 | செவ் லக் | அசுவனி-1 | | | 34 |
| | | சனி | சூரி புத சுக் | கேது | |
| | 25 | 30 | 25 | 29 | |

| | 3 | 4 | 5 | 6 | |
|---|---|---|---|---|---|
| | ராகு சந் | | | | |
| 2 | குரு | ஸ்ரீபதி பாவகம் | | | 7 |
| 1 | லக் செவ் | | | | 8 |
| | | சனி | சுக் புத சூரி | கேது | |
| | 12 | 11 | 10 | 9 | |

Uppili Raj
14-11-1986 12:05:00
Tiruchchirappalli,T.N.
கேது திசை இருப்பு 05-வருடம் 06-மாதம் 11-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | செவ் கேது |
| 2,6,10 | குரு சுக் புத சூரி |
| 3,7,11 | ராகு சந் சனி |
| 4,8,12 | |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| கே | 27-05-1985-27-05-1992 | சந் | சந் | 27-05-2018-28-03-2019 |
| சுக் | 27-05-1992-27-05-2012 | சந் | செ | 28-03-2019-27-10-2019 |
| சூரி | 27-05-2012-27-05-2018 | சந் | ராகு | 27-10-2019-27-04-2021 |
| சந் | 27-05-2018-27-05-2028 | சந் | குரு | 27-04-2021-27-08-2022 |
| செ | 27-05-2028-27-05-2035 | சந் | சனி | 27-08-2022-27-03-2024 |
| ராகு | 27-05-2035-27-05-2053 | சந் | புத | 27-03-2024-26-08-2025 |
| குரு | 27-05-2053-27-05-2069 | சந் | கே | 26-08-2025-27-03-2026 |
| சனி | 27-05-2069-27-05-2088 | சந் | சுக் | 27-03-2026-26-11-2027 |
| புத | 27-05-2088-28-05-2105 | சந் | சூரி | 26-11-2027-27-05-2028 |

இந்தச் சாதகர் அரசு வங்கியில் பணிபுரிந்து வருகிறார். விதிக்கொடுப்பினை 6 ஆம் அதிபதி புதன் 10 இல். எனவே அடிமை வேலை உத்தமம். வங்கி பணிக்குக் காரணம் சூரியன், குரு, 10 இல் உள்ளனர். இவருக்குச் சந்திர தசாவில் (3) செவ்வாய் புத்தி (1) 28.03.2019 முதல் 27.10.2019 வரை நடைபெற்று வந்துள்ளது. இக்காலகட்டத்தில் இவருக்குப் பெண்குழந்தை (5) பிறந்துள்ளது. சுபச் செலவுகள் காரணமாகத் தான் பணிபுரியும் வங்கியில் லோன் அப்ளை செய்து இருக்கிறார். ஆனால் செவ்வாய் புத்தி முடியும் வரை லோன் கிடைக்கவில்லை.

செவ்வாய் 1 இல் இருந்து 5 ஆம் பாவகத்தை இயக்கி உள்ளது. ஆனால் கடன் என்னும் 6 ஆம் பாவகத்தை இயக்கவில்லை. வங்கியில் பணிபுரிபவருக்கே லோன் கிடைக்கவில்லை என்ற பலன் கூடுதல் சிறப்பு ஆகும்.

50. சாதகர் : நீலாவதி (93821 41740) பிறந்த நாள் : 21.09.1977

பிறந்த நேரம் : காலை 07.30 பிறந்த ஊர் : சென்னை

| | 26 | 36 | 28 | 38 | |
|---|---|---|---|---|---|
| | கேது | | | குரு செவ் | |
| 26 | | இராசி | | | 29 |
| 28 | | பூராடம்-1 | | சனி சுக் புத | 17 |
| | சந் | | | சூரி ராகு லக் | |
| | 30 | 25 | 31 | 23 | |

| | 7 | 8 | 9 | 10 | |
|---|---|---|---|---|---|
| | கேது | | | குரு செவ் | |
| 6 | | ஸ்ரீபதி பாவகம் | | சனி சுக் | 11 |
| 5 | | | | புத சூரி | 12 |
| | சந் | | | லக் ராகு | |
| | 4 | 3 | 2 | 1 | |

NEELAVATHI
21-09-1977 07:30:00
Chennai, T.N.
சுக் திசை இருப்பு 17-வருடம் 01-மாதம் 12-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | ராகு |
| 2,6,10 | குரு செவ் |
| 3,7,11 | கேது சனி சுக் |
| 4,8,12 | சந் புத சூரி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| சுக் | 03-11-1974-03-11-1994 | ராகு ராகு | 03-11-2017-16-07-2020 |
| சூரி | 03-11-1994-02-11-2000 | ராகு குரு | 16-07-2020-10-12-2022 |
| சந் | 02-11-2000-03-11-2010 | ராகு சனி | 10-12-2022-15-10-2025 |
| செ | 03-11-2010-03-11-2017 | ராகு புத | 15-10-2025-04-05-2028 |
| ராகு | 03-11-2017-03-11-2035 | ராகு கே | 04-05-2028-22-05-2029 |
| குரு | 03-11-2035-03-11-2051 | ராகு சுக் | 22-05-2029-22-05-2032 |
| சனி | 03-11-2051-03-11-2070 | ராகு சூரி | 22-05-2032-16-04-2033 |
| புத | 03-11-2070-03-11-2087 | ராகு சந் | 16-04-2033-16-10-2034 |
| கே | 03-11-2087-03-11-2094 | ராகு செ | 16-10-2034-03-11-2035 |

இந்தச் சாதகரின் விதி கொடுப்பனை 6 ஆம் அதிபதி சனி 12 இல், 7 ஆம் அதிபதி குரு 10 இல். ஆகவே சுயமாக இன்சூரன்ஸ் கம்பெனியில் ஏஜென்டாகப் பணி புரிந்து வருகிறார்.

இவருக்குச் சிறு வயது முதலே சோஷியல் சர்வீஸ் செய்ய வேண்டும் என்கிற கனவு இருந்துள்ளது. ஆனால் இதற்கு நேரமும் காலமும் சரியாக அமையவில்லை. இராகு தசா (1) துவங்கிய பின்னர் கடந்த இரண்டு ஆண்டுகளாகச் செய்யும் வேலை மற்றும் வருமானம்மீது நாட்டம் இல்லாமல், சோஷியல் சர்வீஸ் அதிகம் செய்து வருகிறார். மேலும் இந்தப் புத்தியில்தான் சின்ன பெண்ணாக இருந்தபோது எழுதிய கவிதைகளைப் (5) புத்தமாக வெளியீடு செய்து ஆத்ம திருப்தி அடைந்துள்ளார் என்பது கூடுதல் சிறப்பு ஆகும். இவருக்கு 1 இல் இருக்கும் இராகு 1, 5, 9 ஆம் பாவகக் காரகப் பலன்களை கொடுத்து, 2, 6, 10 ஆம் பாவக இயக்கத்திற்குத் தடை போட்டு வருகிறார்.

**இச்சாதகர்களுக்குக் கிடைத்துள்ள சாதகமான பலன்கள்:**

1, 5, 9 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 1, 5, 9 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் 100 விழுக்காடு இயங்கி இந்தப் பாவகங்கள் மூலம் சாதகருக்கு மனமகிழ்ச்சியைக் கொடுக்கிறது.

சுயகௌரவம், தன்னம்பிக்கை, ஆரோக்கியம் நன்றாக இருந்துள்ளது, சுயமுயற்சிகள், செயல்திறன் கருத்துச் சுதந்திரம், தன்னைப்போல் பிற உயிர்களும் வாழவேண்டும் என்கிற சிந்தனை இருந்துள்ளதைக் காணமுடிகிறது.

புத்திர உற்பத்திக்கான உயிர்அணுக்கள், இரசனை, உல்லாசம், பொழுதுபோக்கு, உடலை அழகுபடுத்திக் கொள்வது, இயல், இசை, நாடகம், இலக்கியம், வர்ணனை, சினிமா மற்றும் அனைத்துக் கலைகளிலும் நாட்டம் இருந்துள்ளது. கடன், நோய், வழக்கு இவர்களுக்கு இல்லை. கற்பனைவளம் (Creativity) மிகுதியாகவும், காதல், யூகஅறிவு, புதுப்புதுப் படைப்புகள், விட்டுக்கொடுத்து வாழ்தல், இயற்கையைப் பாதுகாத்து இயற்கையோடு ஒன்றிவாழ்தல், மந்திரம், யோகா, இயற்கையைப் பாதுக்காக்கப் போராடுவது, இயற்கை வேளாண்மை, செயற்கையான பொருள்களை அழித்தல், இயற்கை மருத்துவத்தை ஊக்குவித்தல் ஆகிய சாதகமான பலன்கள் கிடைத்துள்ளதையும் காணமுடிகிறது.

மேலும் ஆன்மிகம், தீர்த்தயாத்திரை, சமூகச்சேவையில் ஈடுபாடு, பாரம்பரியம் மாறாததன்மை, பெரியோர்களை மதித்து நடந்து கொள்ளுதல், ஒழுக்கம், சட்டங்களை மதித்துச் செயல்படுதல், தர்மச் சிந்தனை, கடவுள் பக்தி, ஆய்வுக்கல்வி, முன்னோர்கள் ஆசிர்வாதம் மற்றும் பூர்வீகச் சொத்துக்கள், சட்டங்கள் இயற்றுவது, அதிகாரப் பகிர்வுக்கு முனைதல், குரு உபதேசம் ஆகிய இப்பலன்கள் நடைபெற்றதை அறிய முடிகிறது.

**இச்சாதகர்களுக்குக் கிடைத்துள்ள பாதகமான பலன்கள்:**

1, 5, 9 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 2, 6, 10 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் இயங்காமல் இந்தப் பாவகங்கள்மூலம் சாதகருக்குக் கிடைக்க வேண்டிய மனமகிழ்ச்சி தடைபட்டுள்ளது.

பணம் உற்பத்தி செய்யும் திறன் குறைவாக இருந்துள்ளது, பணத்திற்கு முக்கியத்துவம் கொடுத்துச் சிக்கனம் செய்யாமல் ஆடம்பரச் செலவுகள் செய்துள்ளனர், சுயகௌரவம் பார்க்காமல் பணத்திற்காக மற்றவர்களிம் கையேந்தியது, குடும்பத்தில் உள்ள பிற உறுப்பினர்களின் உழைப்பில் வாழ்வது, கையில் இருக்கும் பணத்தினைத் திட்டம்போட்டுச் செலவு செய்ய இயலாமல் பணபுழக்கம் பாதிக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

உடல் உழைப்பில் நாட்டம் இல்லாமல், ஒழுங்காக வேலைக்குச் செல்லாமல், சுதந்திரம் அதிகம் எதிர்பார்த்து அடிமை வேலை பிடிக்காமல் வேலையை விட்டவர்கள், சோம்பேறித்தனம் மெத்தனப்போக்கு இவர்களிடம் காணப்பட்டது. அளவுக்கு அதிகமாக விட்டுக்கொடுத்து ஏமாந்தும் இருக்கின்றனர். பூர்வீகச் சொத்துக்களைக் கேட்டு வாங்காமல் விட்டுக் கொடுத்துள்ளனர். புதியவேலைக்கு முயற்சி செய்யாமல் இருந்து உள்ளனர், இருப்பது, மற்றவர்களுக்கு அடிபணிந்து வேலை செய்ய விருப்பம் இல்லாதவர்கள், இவர்களுக்குக் கடன் கிடைக்காத நிலையும் இருந்துள்ளதைக் காணமுடிகிறது.

எதிர்காலத் திட்டமிடுதல் சரியாக இல்லாமல், எல்லோரையும் நம்பி ஏமார்ந்துள்ளனர். தானதரும காரியங்களில் ஈடுபட்டுப் பணத்தைச் செலவு செய்துள்ளனர். கொடுத்த வேலையைச் சரியான நேரத்தில் முடிக்க முடியாமல் சிரமப்பட்டுள்ளனர். தனக்குக்கீழ் பணிபுரிபவர்களிடம் வேலைவாங்கச் சிரமம் இருந்துள்ளது, நிர்வாகத் திறனற்றும் வேலையில் பொறுப்பு உணர்ச்சி குறைவாக இருந்துள்ளதையும் காணமுடிகிறது. இவர்களே தனது வேலையை இராஜினாமா செய்து பின் வேலை இல்லாமலும், வேலையை இழந்துள்ளவர்களும் உண்டு. நிரந்தரவேலை இல்லாமல், பதவி உயர்வும் கிடைக்காமல், அடிக்கடி வேலைக்கு விடுப்பு, விருப்பஓய்வு பெற்றவர்கள், பொதுவாக வேலையில் ஸ்திரதன்மை இல்லை என்பதைக் காணமுடிகிறது.

1, 5, 9 ஆம் பாவகங்களுக்குரிய புத்திகளில் நற்பலன் தீயபலன்களைச் சாகங்களுடன் ஒப்பிட்டு ஆராய்ந்ததன் வழி அவை முன்னர் கூறிய விதிமுறைக்கேற்ப நற்பலன் மற்றும் தீயபலன் தந்திருப்பதைக் கண்டறிய முடிகிறது.

## தொகுப்புரை

50 சாதகங்களின் வழி அறியப்பட்ட செய்திகள். அறம் என்னும் திரிகோணத்தில் புத்தியை நடத்தும் கோள் 1 அல்லது 5 அல்லது 9 ஆகிய பாவகங்களில் இருந்தபோது நடைபெற்ற பலன்கள் குறித்து 50 சாதகங்களைக் கொண்டு ஆய்வு செய்யப்பட்டது. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட விதிகளின்படி இவர்களுக்கு அகம் தொடர்பானக் காரகப் பலன்கள் நல்லமுறையில் கிடைத்துள்ளது. அதேசமயம் புறம் தொடர்பானக் காரகப் பலன்கள் பாதிக்கப்பட்டுள்ளது. அதுவும் குறிப்பாக 2, 6, 10 ஆம் பாவகக் காரகங்கள் பாதிக்கபப்பட்டுள்ள நிலைகுறித்து அறிய முடிகிறது.

## இயல் - 3

## பொருள் என்ற திரிகோணப் பாவங்கள்

### முன்னுரை

பன்னிரு பாவகங்களில் 2, 6, 10 ஆகிய திரிகோணப் பாவகங்கள் பொருள் என்று அழைக்கப்படுகிறது[21]. புத்தியை நடத்தும் கோள் பொருள் என்னும் 2, 6, 10 ஆகிய திரிகோணப் பாவகங்களில் இருக்கும் நிலையை ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு, 50 சாதகங்களுடன் பொருத்திப் பலன் அறிவதாகப் பொருள் என்ற இம் மூன்றாம் இயல் அமைகின்றது.

### 2, 6, 10 ஆகிய திரிகோணங்களின் விளக்கம்

ஒற்றைப்படை பாவகங்களான 1, 5, 9 மற்றும் 3, 7, 11 ஆம் பாவகங்கள் அகம் என்றும், இரட்டைப்படை பாவகங்களான 2, 6, 10 மற்றும் 4, 8, 12 ஆம் பாவகங்கள் புறம் என்றும் அழைக்கப்படுகிறது.

அதன்படி 2, 6, 10 ஆம் பாவகங்கள் இரட்டைப்படை பாவகங்களில் வருகின்றது. ஆகையால் இந்தப் பொருள் திரிகோணம் என்பது புறத்தைச் சார்ந்தது ஆகும். எனவே இந்த இயலில் ஆராயப்பட இருக்கும் சாதகங்களில் புறம் தொடர்பான பலன்கள் நல்லமுறையில் சாதகருக்குக் கிடைக்கும். அதேவேளையில் அகம் தொடர்பான காரகங்களில் பாதிப்புகளை ஏற்படுத்தும். அதுவும் முக்கியமாக 3, 7, 11 ஆம் பாவகங்களின் காரகத்துவப் பலன்களில் அதிகப் பாதிப்புகளைக் கொடுக்கும்.

காரணம் 2, 6, 10 ஆம் பாவகங்கள் என்பது 3, 7, 11 ஆம் பாவகங்களுக்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக வரும். ஆய்விற்கு உட்படுத்தப்பட்டுள்ள பன்னிரு விதிகளின்படி விதிஎண் 4 என்பது 70 விழுக்காடு பாதிப்புகளையும், விதிஎண் 8 என்பது எதிர்மறையாகவும், விதிஎண் 12 என்பது இயங்காது என வரும்.

---

[21] இரா. அருள்வேல், ஸ்ரீ ராஜ ஜோதிடம், ப 99

**பொருள் என்ற திரிகோணத்தின் விளைவுகள்**

திரிகோண விதிகளின்படி, புத்தியை நடத்தும் கோள் 2, 6, 10 என்னும் பொருள் திரிகோணப் பாவகங்களில் இருக்கும்போது,

1, 5, 9 ஆம் பாவகங்கள் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்,

2, 6, 10 ஆம் பாவகங்கள் 100 விழுக்காடு இயங்கும்,

3, 7, 11 ஆம் பாவகங்கள் இயங்காது,

4, 8, 12 ஆம் பாவகங்கள் பன்மடங்கு இயங்கும்.

திரிகோண விதிகளின்படி புத்தியை நடத்தும் கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 2, 6, 10 ஆம் பாவகங்களில் கூறப்பட்டுள்ள பலன்கள் யாவும் இந்தப் புத்தியில் நூறு விழுக்காடு நடைபெறும். அதேவேளையில் 3, 7, 11 ஆம் பாவகங்களில் கூறப்பட்டுள்ள பலன்கள் யாவும் கிடைக்காது என்பதை அறியலாம்.

**2, 6, 10 ஆம் பாவகங்களின் புத்தி தரும் பலன்**

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து ஒரு கோள் புத்தியை நடத்தும்போது நன்மையான பலன்கள் மற்றும் தீமையான பலன்கள் இரண்டும் சேர்ந்தே நடக்கும். அதன்படி 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருந்து ஒரு கோள் புத்தியை நடத்தும் போது ஏற்படும் நன்மை மற்றும் தீமையான பலன்கள் கீழ்கண்டவாறு அமைந்துள்ளது.

**சாதகமான பலன்கள் :**

2, 6, 10 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 2, 6, 10 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் 100 விழுக்காடு இயங்கி இந்தப் பாவகங்கள் மூலம் சாதகருக்கு மனமகிழ்ச்சியைக் கொடுக்கும். அதாவது இதனை நன்மை எனக் கொள்ளலாம்.

புத்தியை நடத்தக் கூடிய கோள் 2, 6, 10 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 2 ஆம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும், 6 ஆம் பாவகம் 100 விழுக்காடு இயங்கும், 10 ஆம் பாவகமும் 100 விழுக்காடு இயங்கும்.

எனவே 2, 6, 10 ஆம் பாவகங்களில் கூறப்பட்டுள்ள பலன்கள் யாவும் சாதகருக்கு நல்லமுறையில் அமையும்.

எதையும் பணம் ஆக்கும் திறமை சாதகரிடத்தில் அபாரமாக இருக்கும். பணத்தை விரையம் செய்யாமல் திட்டமிட்டுச் சிக்கனமாகச் செலவு செய்தல், எதிர்காலத் திட்டமிடுதல் நன்றாக இருக்கும். குடும்பத்திற்குத் தேவையான செலவுகளைச் சமாளிக்கும் திறன் இருக்கும் மற்றவர்களின் பணத்தினைத் தனது கையில் வைத்து இருப்பார்கள். கேட்ட இடத்தில் கடன் கிடைக்கும். செய்யும் முயற்சியைக் கைவிட மாட்டார்கள். உடல் உழைப்பில் நாட்டம் இருக்கும். வேலைக்கு ஒழுங்காகச் செல்வார்கள். மற்றவர்களிடத்தில் கீழ்படிந்து ஒழுங்காக வேலை செய்தல், போட்டி தேர்வுகளில் வெற்றி பெறுதல், புதிய வேலைக்கு விண்ணப்பித்துப் புதிய வேலையில் சேருதல், விடுப்பு மற்றும் ஒய்வு எடுக்காமல் வேலை செய்வார்கள், போட்டிகளில் வெற்றி பெறுதல், வழக்குகளில் வெற்றி பெறுவது, பொதுத்தேர்தலில் வெற்றி பெறுவது சுலபம் ஆகும்.

சமுதாயத்தில் எதையாவது சாதித்துக் காட்டி அதன்மூலம் வரும் கௌரவம், தகுதிக்குத் தகுந்த நல்லவேலையைத் தேடிக்கொள்ளுதல், மற்றவர்களைவிடச் சாதுர்யமாகச் செயல்படுதல், பொழுதுபோக்கு அம்சங்களில் ஈடுபடாமல் செய்யும் வேலையில் பொறுப்பாகச் செயல்படுவார்கள், முதலாளியின் நம்பிக்கையைப் பெறுதல், சம்பள உயர்வு, புதியபொறுப்புக்கள், அதிகாரம், கட்டுப்பாடு, மற்றவர்களிடம் வேலை வாங்கும் திறன், பதவி உயர்வு, பெரிய அந்தஸ்து உடைய பதவி வகுத்தல், செய்யக் கூடிய வேலைமூலம் மரியாதை, புகழ், கௌரவம் கிடைக்கும். அரசியலில் பதவிகள், அரசமரியாதை பெறுதல்.

**பாதகமான பலன்கள் :**

2, 6, 10 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 3, 7, 11 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் இயங்காமல் இந்தப் பாவகங்கள்மூலம் சாதகருக்குக் கிடைக்க வேண்டிய மனமகிழ்ச்சி தடைப்படும். அதாவது தீமை எனக் கொள்ளலாம்.

மற்றவர்களிடம் மனம் விட்டுப் பேச மாட்டார்கள், புதிய நபர்களைச் சந்திக்கத் தயக்கம் கூச்சசுபாவம், சிறு பயணங்களில் விருப்பம் இருக்காது,

எதையும் பதிவுசெய்து வைக்க மாட்டார்கள், பத்திரங்கள் சேதப்படுவது மற்றும் காணாமல் போகும், உண்ணும் உணவே இவர்களுக்கு நோய்களை உருவாக்கி விடும் (Food Poison). வேலை நிமித்தமாகச் செல்லும் இடத்தில் சுகாதாரமில்லாத உணவுகளை உட்கொண்டு நேரம் தவறிச் சாப்பிடுவதாலும், மென்று முழுங்காமல் அவசரமாக முழுங்கி விடுவதாலும் ஜீரணக் கோளாறுகள் ஏற்படும். மலச்சிக்கல் ஏற்படும். அதனால் இவர்களுக்கு மருந்துக்குக் கட்டுப்படும் நோய்கள் வரக்கூடும். தவறான பதிவுகள் மற்றும் தகவல் தொடர்பு சாதனங்கள்மூலம் பிரச்சினைகள், மனம் விட்டு யாரிடமும் பேசாமல் அதனால் மனஅழுத்தம், ஏதோ ஒருவிதமான பயம் பதட்டம் இருந்துகொண்டே இருக்கும். இவர்களின் ஆதிக்கப் போக்கினால் மற்றவர்களிடம் விரோதம் ஏற்படும், வாழ்க்கைத் துணையை அதிகாரம் செய்து தனக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்கிற ஆதிக்கப்போக்கு இவர்களிடம் காணப்படும், வாழ்க்கைத்துணை அடிபணியாவிட்டால் விவாகரத்துவரை கூடச் செல்வார்கள், ஸ்பரிச சுகங்களில் நாட்டமிராது. நண்பர்களை வெட்டி விடுவார்கள், தொழில் பங்காளிகளை மட்டம் தட்டித் தனது ஆதிக்கத்தைச் செலுத்துவார்கள், தன்னுடன் வேலை செய்பவர்களைக் காட்டிக்கொடுத்து அதன்மூலம் ஆதாயம்பெற நினைப்பார்கள், பதவிஆசை மேலோங்கி நிற்கும் அதனால் உடன் இருப்பவர்களுக்குச் சிக்கல் ஏற்படும், ஓய்வின்றி வேலை அதனால் உடலில் நோய் எதிர்ப்புத் திறன் வெகுவாகக் குறைந்துவிடும், எதிலும் திருப்பதி அற்றநிலை, தீராத ஆசைகள், குடுப்பத்தைவிடச் செய்யும் தொழிலுக்கு முக்கியத்துவம் கொடுப்பதால் இவர்களின் குடும்பம் வெகுவாகப் பாதிக்கப்படும்.

51. சாதகர் : செந்தில் குமார் (75982 89279) பிறந்த நாள் : 11.03.1977

பிறந்த நேரம் : காலை 10.55 பிறந்த ஊர் : முசிறி.

| | 30 | 28 | 26 | 21 | |
|---|---|---|---|---|---|
| | | சுக் கேது | குரு லக் | | |
| 33 | சூரி புத | இராசி | | சனி | 27 |
| 24 | செவ் | அனுஷம்-3 | | | 25 |
| | | சந் | ராகு | | |
| | 32 | 29 | 31 | 31 | |

| | 11 | 12 | 1 | 2 | |
|---|---|---|---|---|---|
| | புத சூரி | சுக் கேது | லக் குரு | | |
| 10 | செவ் | ஸ்ரீபதி பாவகம் | | சனி | 3 |
| 9 | | | | | 4 |
| | | சந் | ராகு | | |
| | 8 | 7 | 6 | 5 | |

Senthil Kumar
11-03-1977 10:55:00
Musiri,T.N.
சனி திசை இருப்பு 08-வருடம் 10-மாதம் 10-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | குரு |
| 2,6,10 | ராகு செவ் |
| 3,7,11 | சனி சந் புத சூரி |
| 4,8,12 | சுக் கேது |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சனி | 20-01-1967-20-01-1986 | சுக் | சுக் | 20-01-2010-21-05-2013 |
| புத | 20-01-1986-20-01-2003 | சுக் | சூரி | 21-05-2013-22-05-2014 |
| கே | 20-01-2003-20-01-2010 | சுக் | சந் | 22-05-2014-20-01-2016 |
| சுக் | 20-01-2010-20-01-2030 | சுக் | செ | 20-01-2016-21-03-2017 |
| சூரி | 20-01-2030-20-01-2036 | சுக் | ராகு | 21-03-2017-21-03-2020 |
| சந் | 20-01-2036-20-01-2046 | சுக் | குரு | 21-03-2020-20-11-2022 |
| செ | 20-01-2046-20-01-2053 | சுக் | சனி | 20-11-2022-20-01-2026 |
| ராகு | 20-01-2053-20-01-2071 | சுக் | புத | 20-01-2026-20-11-2028 |
| குரு | 20-01-2071-20-01-2087 | சுக் | கே | 20-11-2028-20-01-2030 |

இந்தச் சாதகர் காவல் துறையில் பணிபுரிந்து வருகிறார். அரசு கோள் சூரியன் 10 இல். உள்ளார். இவருக்குச் சுக்கிர தசாவில் (12) இராகு புத்தி (6) 21.03.2017 முதல் 21.03.2020 வரை நடைபெறுகிறது.

இந்தக் காலக் கட்டத்தில் கடுமையான உழைப்பு, கேட்காமலேயே கடன் கிடைத்து வருகிறது, அடுத்தவரின் பணம் இவரது கைகளில் நிறைய புரள்கிறது, வீட்டைக் கவனிக்காமல் வேலைக்கு முக்கியத்துவம் தருகிறார் என மனைவியுடன் பிரச்சினை வந்து மனைவி மனமுடைந்து தற்கொலை வரை சென்று இருந்தார். வயிறு தொடர்பான பிரச்சினைகள் இருந்து கொண்டு இருக்கிறது.

2, 6, 10 ஆம் பாவகக் காரகப் பலன்கள் 100 விழுக்காடு இயங்குகிறது, அதேவேளையில் 3, 7, 11 ஆம் பாவகக் காரகப் பலன்கள் பாதிக்கப்பட்டுள்ளது என்பதை அறியமுடிகிறது.

52. சாதகர் : நந்த குமார்( 9364161122) பிறந்த நாள் : 10.02.1980

பிறந்த நேரம் : அதிகாலை 00.10 பிறந்த ஊர் : முசிறி.

Entry... Bhava... Rasi_D9... Rect... Transit... Nadi D1_Bh Print... Exit.

| 6 | 7 | 8 | 9 |
|---|---|---|---|
| | | | |
| 5: புத சுக் | Nanda Kumar<br>10-02-1980 00:10:00<br>Musiri,T.N.<br>ஸ்ரீபதி பாவகம்<br>வயது<br>39-வருடம் 08-மாதம் 19-நாள் | | 10: ராகு |
| 4: சூரி கேது | | | 11: குரு செவ் சனி |
| 3 | 2 | 1: 202.59.12லக் சந் | 12 |

DEG

ஸ்ரீபதி பாவகப்படி

| திரிகோணம் | கோள்கள் |
|---|---|
| 1,5,9 | சந் புத சுக் |
| 2,6,10 | ராகு |
| 3,7,11 | குரு செவ் சனி |
| 4,8,12 | சூரி கேது |
| குரு திசை இருப்பு | |
| 01-வருடம் 09-மாதம் 01-நாள் | |

| திசைகள் | |
|---|---|
| குரு | 11-11-1965-11-11-1981 |
| சனி | 11-11-1981-11-11-2000 |
| புத | 11-11-2000-11-11-2017 |
| கேது | 11-11-2017-11-11-2024 |
| சுக் | 11-11-2024-11-11-2044 |
| சூரி | 11-11-2044-12-11-2050 |
| சந் | 12-11-2050-11-11-2060 |
| செவ் | 11-11-2060-12-11-2067 |
| ராகு | 12-11-2067-11-11-2085 |

| திசை புக்திகள் | | |
|---|---|---|
| புத | புத | 11-11-2000-10-04-2003 |
| புத | கேது | 10-04-2003-06-04-2004 |
| புத | சுக் | 06-04-2004-05-02-2007 |
| புத | சூரி | 05-02-2007-12-12-2007 |
| புத | சந் | 12-12-2007-13-05-2009 |
| புத | செவ் | 13-05-2009-10-05-2010 |
| புத | ராகு | 10-05-2010-26-11-2012 |
| புத | குரு | 26-11-2012-04-03-2015 |
| புத | சனி | 04-03-2015-11-11-2017 |

| திசை புக்தி அந்தரங்கள் | | | |
|---|---|---|---|
| புத | ராகு | ராகு | 10-05-2010-27-09-2010 |
| புத | ராகு | குரு | 27-09-2010-29-01-2011 |
| புத | ராகு | சனி | 29-01-2011-25-06-2011 |
| புத | ராகு | புத | 25-06-2011-04-11-2011 |
| புத | ராகு | கேது | 04-11-2011-29-12-2011 |
| புத | ராகு | சுக் | 29-12-2011-01-06-2012 |
| புத | ராகு | சூரி | 01-06-2012-17-07-2012 |
| புத | ராகு | சந் | 17-07-2012-03-10-2012 |
| புத | ராகு | செவ் | 03-10-2012-26-11-2012 |

இந்தச் சாதகர் தனியார் துறையில் வேலை செய்கிறார். இவரது கம்பெனி வேலை சுற்றுலா அழைத்து செல்வது.

இவர் புதன் தசா (5) இராகு புத்தியில் (10) கடன் (6) வாங்கி வீடு (4) வாங்கியுள்ளார். 10 இல் உள்ள இராகு புத்தியில் 2, 6, 10 ஆம் பாவகக் காரகங்கள் 100 விழுக்காடு இயங்கும் என்கிற விதிக்கு தக்கபடி இவருக்கு இராகு புத்தியில் 6 ஆம் பாவகக் காரகமான கடன் கிடைத்துள்ளது. அதன்மூலம் வீடு (4) வாங்கியுள்ளார். ஆய்வு விதிப்படி இரட்டைப்படைப் பாவகங்களில் சொத்து வாங்கலாம் என்பதாகும்.

மேலும் இந்த இராகு புத்தியில் எதையும் பணமாக்கும் திறமை, நல்ல வருமானம், அடுத்தவர் பணம் தனது கையில் புரளுவது ஆகிய பலன்களும் நடந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது ஆகும். இவருக்கு 10 ஆம் பாவகப் புத்தியில் நல்ல பணபுழக்கம் இருந்துள்ளது.

53. சாதகர் : ஜெய கிருஷ்ணா (99652 04133) பிறந்த நாள் : 05.02.1969

பிறந்த நேரம் : காலை 09.13 பிறந்த ஊர் : கோவை.

| | 25 | 23 | 29 | 36 | |
|---|---|---|---|---|---|
| | சனி சுக் ராகு லக் | | | | |
| 18 | | இராசி | | | 29 |
| 37 | சூரி புத | பூரம்-3 | | சந் | 33 |
| | | | செவ் | கேது குரு | |
| | 25 | 32 | 29 | 21 | |

| | 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|---|
| | லக் ராகு சுக் | சனி | | | |
| 12 | சூரி | ஸ்ரீபதி பாவகம் | | | 5 |
| 11 | புத | | | | 6 |
| | | செவ் | | சந் கேது குரு | |
| | 10 | 9 | 8 | 7 | |

Jaya Krishna
05-02-1969 09:13:00
Coimbatore, T.N.
சுக் திசை இருப்பு 05-வருடம் 06-மாதம் 13-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | ராகு சுக் செவ் |
| 2,6,10 | சனி |
| 3,7,11 | சந் கேது குரு புத |
| 4,8,12 | சூரி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சுக் | 21-08-1954-21-08-1974 | குரு | குரு | 21-08-2015-08-10-2017 |
| சூரி | 21-08-1974-20-08-1980 | குரு | சனி | 08-10-2017-20-04-2020 |
| சந் | 20-08-1980-21-08-1990 | குரு | புத | 20-04-2020-27-07-2022 |
| செ | 21-08-1990-20-08-1997 | குரு | கே | 27-07-2022-03-07-2023 |
| ராகு | 20-08-1997-21-08-2015 | குரு | சுக் | 03-07-2023-03-03-2026 |
| குரு | 21-08-2015-21-08-2031 | குரு | சூரி | 03-03-2026-20-12-2026 |
| சனி | 21-08-2031-21-08-2050 | குரு | சந் | 20-12-2026-20-04-2028 |
| புத | 21-08-2050-21-08-2067 | குரு | செ | 20-04-2028-27-03-2029 |
| கே | 21-08-2067-21-08-2074 | குரு | ராகு | 27-03-2029-21-08-2031 |

இந்தச் சாதகர் குரு திசை குரு புத்தியில் ஒரு மலையாளி பெண்ணைக் காதல் திருமணம் செய்துகொண்டார். அதன்பின் மனைவியின் நடத்தையில் சந்தேகப்பட்டு குரு தசா (7) சனி புத்தியில் (2) பிரிந்து வாழ்ந்து வருகிறார். ஆய்வு முறைப்படி 7 ஆம் பாகத்திற்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக வரக்கூடிய 2, 6, 10 ஆம் பாவகங்களில் 6 ஆம் பாவகம் மட்டுமே திருமண முறிவினைக் கொடுக்கும் என்பதாகும். ஆனால் சில நேரங்களில் தம்பதியினர் இருவருக்கும் ஒரு நல்ல புரிதல் இல்லாத காலகட்டங்களில் இரட்டைப்படைப் புத்திகள் அகங்காரத்தின் மூலம் பிரிவினைக்கு வழி வகுக்க கூடும்.

இந்தச் சாதகருக்கு 7 இல் இருந்து குரு தசா நடக்கும் போது, புத்தியை நடத்தும் கோள் சனி 2 இல். அதாவது 7 ஆம் பாவகத்திற்கு 8 ஆக வரும் காலம் தசா பலன் முறிவு ஏற்பட்டு 7 ஆம் பாவகப் பலனைக் கெடுத்து உள்ளது.

54. சாதகர் : ராதா கிருஷ்ணன் (99652 04133) பிறந்த நாள் : 09.04.1964

பிறந்த நேரம் : இரவு 09.30 பிறந்த ஊர் : ஈரோடு.

| | 27 | 31 | 17 | 24 | |
|---|---|---|---|---|---|
| | சூரி செவ் | குரு புத | சுக் | ராகு | |
| 31 | சந் சனி | இராசி | | | 22 |
| 34 | | சதயம்-4 | | | 29 |
| | கேது | லக் | | | |
| | 37 | 27 | 23 | 35 | |

| | 5 | 6 | 7 | 8 | |
|---|---|---|---|---|---|
| | செவ் | சூரி குரு புத | சுக் | ராகு | |
| 4 | சனி சந் | ஸ்ரீபதி பாவகம் | | | 9 |
| 3 | | | | | 10 |
| | கேது | லக் | | | |
| | 2 | 1 | 12 | 11 | |

Ratha Krishnan
09-04-1964 21:30:00
Erode, T.N.
ராகு திசை இருப்பு 01-வருடம் 11-மாதம் 20-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | செவ் |
| 2,6,10 | கேது சூரி குரு புத |
| 3,7,11 | சுக் |
| 4,8,12 | சனி சந் ராகு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| ராகு | 31-03-1948-31-03-1966 | கே | கே | 31-03-2018-28-08-2018 |
| குரு | 31-03-1966-31-03-1982 | கே | சுக் | 28-08-2018-28-10-2019 |
| சனி | 31-03-1982-31-03-2001 | கே | சூரி | 28-10-2019-04-03-2020 |
| புத | 31-03-2001-31-03-2018 | கே | சந் | 04-03-2020-03-10-2020 |
| கே | 31-03-2018-31-03-2025 | கே | செ | 03-10-2020-01-03-2021 |
| சுக் | 31-03-2025-31-03-2045 | கே | ராகு | 01-03-2021-19-03-2022 |
| சூரி | 31-03-2045-01-04-2051 | கே | குரு | 19-03-2022-23-02-2023 |
| சந் | 01-04-2051-31-03-2061 | கே | சனி | 23-02-2023-03-04-2024 |
| செ | 31-03-2061-31-03-2068 | கே | புத | 03-04-2024-31-03-2025 |

இந்தச் சாதகர் தமிழகப் போக்குவரத்துத் துறையில் நடத்துனர் வேலை செய்து வந்தார். இவருக்குக் கேது தசா (2) திசை கேது புத்தியில் (2) கண்நோய் வந்துள்ளது. வெளியூர்களுக்குச் சென்று வரும் பணி என்பதால் குடும்பம் மற்றும் கண் மேலும் பாதிப்படைந்துள்ளது. பணி ஒய்வுக்கு இன்னும் ஒர் ஆண்டு காலம் உள்ளது. இந்நிலையில் கண் கோளாறு எனக் காரணம் காட்டி வேலையில் இருந்து ஒய்வு அளித்துள்ளனர். தற்சமயம் புதன் தசாவில் சூரிய புத்தி 28.10.2019 முதல் நடந்து வருகிறது. தனக்கு விருப்பம் இல்லாமல் கட்டாய ஒய்வு அளிக்கப்பட்டதை எதிர்த்துப் போக்குவரத்து துறைமீது இவர் வழக்கு (6) தொடர்ந்துள்ளார்.

ஆய்வு விதிப்படி 2 ஆம் பாவகப் புத்தி நோயைக் கொடுத்துள்ளது. மேலும் இவர் 6 ஆம் பாவகப் புத்தியில் வழக்குப் போடும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளார்.

55. சாதகர் : கண்ணன் (99652 04133) பிறந்த நாள் : 06.01.1994

பிறந்த நேரம் : 06.01.1994 பிறந்த ஊர் :கோவை

| | 30 | 24 | 31 | 22 | |
|---|---|---|---|---|---|
| | | | கேது லக் | | |
| 28 | சனி | இராசி | | | 29 |
| 19 | | சுவாதி-2 | | | 38 |
| | புத சூரி சுக் செவ் | ராகு | குரு சந் | | |
| | 26 | 19 | 41 | 30 | |

| | 11 | 12 | 1 | 2 | |
|---|---|---|---|---|---|
| | | கேது | லக் | | |
| 10 | | ஸ்ரீபதி பாவகம் | | | 3 |
| 9 | சனி | | | | 4 |
| | செவ் சுக் சூரி புத | | சந் குரு ராகு | | |
| | 8 | 7 | 6 | 5 | |

Kannan
06-01-1994 16:30:00
Coimbatore, T.N.
ராகு திசை இருப்பு 11-வருடம் 10-மாதம் 01-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சனி |
| 2,6,10 | சந் குரு ராகு |
| 3,7,11 | |
| 4,8,12 | செவ் சுக் சூரி புத கேது |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| ராகு | 09-11-1987-08-11-2005 | குரு | குரு | 08-11-2005-27-12-2007 |
| குரு | 08-11-2005-08-11-2021 | குரு | சனி | 27-12-2007-10-07-2010 |
| சனி | 08-11-2021-08-11-2040 | குரு | புத | 10-07-2010-14-10-2012 |
| புத | 08-11-2040-08-11-2057 | குரு | கே | 14-10-2012-20-09-2013 |
| கே | 08-11-2057-08-11-2064 | குரு | சுக் | 20-09-2013-21-05-2016 |
| சுக் | 08-11-2064-08-11-2084 | குரு | சூரி | 21-05-2016-10-03-2017 |
| சூரி | 08-11-2084-08-11-2090 | குரு | சந் | 10-03-2017-10-07-2018 |
| சந் | 08-11-2090-09-11-2100 | குரு | செ | 10-07-2018-15-06-2019 |
| செ | 09-11-2100-10-11-2107 | குரு | ராகு | 15-06-2019-08-11-2021 |

இந்தச் சாதகர் பி.இ., பொறியியல் படித்து இருக்கிறார். பார்ட்னர்ஷிப் தொழில் ஈடுபட்டுக்கொண்டு இருந்தார். குரு தசாவில் (6) இராகு புத்தி (6) துவங்கிய நாள் முதல் பங்குதாரர்களுடன் (7) சில பிரச்சினைகள் ஏற்பட்டுத் தனியாக வந்து விட்டார்.

இவரின் சாதகப்படி தொழில் கொடுப்பினை 7 ஆம் அதிபதி செவ்வாய் 8 இல் இருக்கிறார். அதன்படி தற்சமயம் அதிக முதலீடு போடாமல் தூசு அகற்றும் கருவி வாணிகம் (Vacum Cleaner Dealership) செய்கிறார். நல்ல வருமானமும் வருகிறது.

இவருக்கு அடிக்கடி விபத்துக்கள் ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றது. இன்னும் திருமணம் ஆகவில்லை. இவரின் ஆதிக்கப்போக்கினால் உறவினர்களுடன் மனக் கசப்பு உள்ளது. 6 ஆம் பாவகக் காரகங்கள் இயங்கிய 7 ஆம் பாவகக் காரகங்கள் பாதிக்கப்படுகிறது.

56. சாதகர் : ரம்யா (99652 04133) பிறந்த நாள் : 20.03.1992

பிறந்த நேரம் : இரவு 09. 40 பிறந்த ஊர் : கோவை

| | 33 | 19 | 27 | 26 | |
|---|---|---|---|---|---|
| | புத சூரி | | | கேது | |
| 19 | சுக் செவ் | | | | 31 |
| 33 | சனி | இராசி | சித்திரை-3 | குரு | 35 |
| | ராகு | | லக் சந் | | |
| | 37 | 31 | 27 | 19 | |

| | 6 | 7 | 8 | 9 | |
|---|---|---|---|---|---|
| | புத | | | கேது | |
| 5 | சுக் சூரி | | | | 10 |
| 4 | சனி செவ் | ஸ்ரீபதி பாவகம் | | குரு | 11 |
| | ராகு | | லக் | சந் | |
| | 3 | 2 | 1 | 12 | |

Ramya B.E.,
20-03-1992 21:40:00
Salem,T.N.
செவ் திசை இருப்பு 02-வருடம் 04-மாதம் 25-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சுக் சூரி கேது |
| 2,6,10 | புத |
| 3,7,11 | ராகு குரு |
| 4,8,12 | சனி செவ் சந் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| செ | 16-08-1987-16-08-1994 | குரு குரு | 16-08-2012-04-10-2014 |
| ராகு | 16-08-1994-16-08-2012 | குரு சனி | 04-10-2014-16-04-2017 |
| குரு | 16-08-2012-16-08-2028 | குரு புத | 16-04-2017-23-07-2019 |
| சனி | 16-08-2028-16-08-2047 | குரு கே | 23-07-2019-28-06-2020 |
| புத | 16-08-2047-16-08-2064 | குரு சுக் | 28-06-2020-27-02-2023 |
| கே | 16-08-2064-16-08-2071 | குரு சூரி | 27-02-2023-16-12-2023 |
| சுக் | 16-08-2071-16-08-2091 | குரு சந் | 16-12-2023-16-04-2025 |
| சூரி | 16-08-2091-16-08-2097 | குரு செ | 16-04-2025-23-03-2026 |
| சந் | 16-08-2097-17-08-2107 | குரு ராகு | 23-03-2026-16-08-2028 |

இந்தச் சாதகி பி.இ., பொறியியல் படித்துள்ளார். இவர் கடந்த சில ஆண்டுகளாக அரசு வங்கியில் பணிபுரிந்து வருகிறார். இவரின் இராசிக் கட்டப் படி அரசு கோள் சூரியன் 6 இல் உள்ளார். மேலும் வங்கி பணி செய்ய கூடியவர்களுக்கு இராசிக் கட்டத்தில் குரு அல்லது புதன் 2, 4, 6, 10 ஆகிய வீடுகளில் இருப்பது கூடுதல் சிறப்பு ஆகும்.

இவர் 01.04.2018 அன்று வங்கி மேலாளர் ஆகப் பதவி உயர்வு பெற்றுள்ளார். அப்போது இவருக்கு குரு தசாவில் (11) புதன் புத்தி (6) நடைபெற்றுள்ளது. இங்கு இவரின் சாதகத்தில் புத்தியை நடத்தும் கோள் 6 இல் இருந்து, போட்டி தேர்வு வெற்றி இது 6 ஆம் பாவகச் செயல், அதன்மூலம் பதவி இது 10 ஆம் பாவகச் செயல், அதன்மூலம் அதிக வருமானம் இது 2 ஆம் பாவகச் செயல் நடைபெற்று உள்ளது. ஆக 2, 6, 10 ஆம் பாவகங்கள் 100 விழுக்காடு இயங்கியுள்ளது.

147. சாதகர் : வெங்கடேஷ் (91505 10728) பிறந்த நாள் : 05.05.1981

பிறந்த நேரம் : பகல் 10.30 பிறந்த ஊர் : கும்பகோணம்

| | 28 | 28 | 21 | 30 | |
|---|---|---|---|---|---|
| | | செவ் சூரி சுக் புத | சந் | லக் | |
| 39 | | இராசி | | ராகு | 33 |
| 30 | கேது | கார்த்திகை-3 | | | 27 |
| | | | | குரு சனி | |
| | 25 | 27 | 21 | 28 | |

| | 10 | 11 | 12 | 1 | |
|---|---|---|---|---|---|
| | | செவ் சூரி சுக் புத சந் | | லக் | |
| 9 | | ஸ்ரீபதி பாவகம் | | ராகு | 2 |
| 8 | கேது | | | குரு சனி | 3 |
| | | | | | |
| | 7 | 6 | 5 | 4 | |

Venkatesh
05-05-1981 10:30:00
Kumbakonam, T.N.
சூரி திசை இருப்பு 01-வருடம் 10-மாதம் 28-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1, 5, 9 | |
| 2, 6, 10 | ராகு |
| 3, 7, 11 | குரு சனி செவ் சூரி சுக் புத சந் |
| 4, 8, 12 | கேது |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சூரி | 03-04-1977-04-04-1983 | குரு | குரு | 03-04-2018-22-05-2020 |
| சந் | 04-04-1983-03-04-1993 | குரு | சனி | 22-05-2020-03-12-2022 |
| செ | 03-04-1993-03-04-2000 | குரு | புத | 03-12-2022-10-03-2025 |
| ராகு | 03-04-2000-03-04-2018 | குரு | கே | 10-03-2025-14-02-2026 |
| குரு | 03-04-2018-03-04-2034 | குரு | சுக் | 14-02-2026-15-10-2028 |
| சனி | 03-04-2034-03-04-2053 | குரு | சூரி | 15-10-2028-03-08-2029 |
| புத | 03-04-2053-03-04-2070 | குரு | சந் | 03-08-2029-03-12-2030 |
| கே | 03-04-2070-03-04-2077 | குரு | செ | 03-12-2030-09-11-2031 |
| சுக் | 03-04-2077-03-04-2097 | குரு | ராகு | 09-11-2031-03-04-2034 |

இந்தச் சாதகர் 2006 ஆம் ஆண்டு முதல் குவைத் நாட்டில் வேலை செய்து வருகிறார். இத்தனை ஆண்டுகள் வெளிநாட்டு வருமானம் வந்தும் இவரால் ஒரு நிலம் கூடத் தன் பெயரில் வாங்க முடியவில்லை. இவரது 4 ஆம் பாவகக் கொடுப்பினை : 4 இல் தீயகோள் சனி, 4 ஆம் வீட்டு அதிபதி புதன் 11 இல், 4 ஆம் பாவகக் காரகக் கோள் செவ்வாய் மற்றும் சுக்கிரன் 11 இல் (அதாவது 4 இக்கு 8 இல்) 4 ஆம் பாவக சர்வாஷ்டக வர்ககம் 28 ஆகும். எனவே 4 ஆம் பாவகக் கொடுப்பனை 25 விழுக்காடு மட்டுமே. இவர் இத்தனை ஆண்டுகள் சம்பாதித்த பணம் அனைத்தும் சுபச் செலவுகள் செய்துள்ளார். ஒரு தங்கை, அக்கா மகள் இரண்டு, அதன்பின் தனக்கு என்று மொத்தம் 4 திருமணங்களை நடத்தி செலவுச் செய்துள்ளார், அதனால் வீடுகட்ட முடியவில்லை.

மேலும் 3,7,11 ஆம் திரிகோணத்தில் மொத்தம் 7 கோள்கள், அதனால் இவருக்கு இதுவரை எந்த நோயும் வந்ததில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

148. சாதகர் : பால கிருஷ்ணன் (98425 54524) பிறந்த நாள் : 14.02.1970

பிறந்த நேரம் : அதிகாலை 03.45 பிறந்த ஊர் : திருநெல்வேலி

| 32 | 21 | 29 | 26 |
|---|---|---|---|
| செவ் | சனி | சந் | |
| ராகு சுக் சூரி (25) | இராசி | | (26) |
| புத (26) | ரோகிணி-1 | | கேது (26) |
| லக் | | குரு | |
| 34 | 27 | 33 | 32 |

| 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|
| செவ் | சனி | சந் | |
| சுக் ராகு (3) | ஸ்ரீபதி பாவகம் | | (8) |
| புத சூரி (2) | | | கேது (9) |
| லக் | | குரு | |
| 1 | 12 | 11 | 10 |

Bala Krishnan
14-02-1970 03:45:00
Tirunelvelli,T.N.
சந் திசை இருப்பு 09-வருடம் 11-மாதம் 07-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1, 5, 9 | சனி கேது |
| 2, 6, 10 | புத சூரி சந் |
| 3, 7, 11 | சுக் ராகு குரு |
| 4, 8, 12 | செவ் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| சந் | 22-01-1970-22-01-1980 | குரு குரு | 22-01-2005-12-03-2007 |
| செ | 22-01-1980-22-01-1987 | குரு சனி | 12-03-2007-22-09-2009 |
| ராகு | 22-01-1987-22-01-2005 | குரு புத | 22-09-2009-29-12-2011 |
| குரு | 22-01-2005-22-01-2021 | குரு கே | 29-12-2011-04-12-2012 |
| சனி | 22-01-2021-22-01-2040 | குரு சுக் | 04-12-2012-05-08-2015 |
| புத | 22-01-2040-22-01-2057 | குரு சூரி | 05-08-2015-23-05-2016 |
| கே | 22-01-2057-22-01-2064 | குரு சந் | 23-05-2016-22-09-2017 |
| சுக் | 22-01-2064-22-01-2084 | குரு செ | 22-09-2017-29-08-2018 |
| சூரி | 22-01-2084-22-01-2090 | குரு ராகு | 29-08-2018-22-01-2021 |

இந்தச் சாதகர் கோவையில் துணை ஆட்சியராகப் பணிபுரிந்து வருகிறார். இவருக்குக் குரு தசாவில் (11) செவ்வாய் புத்தி (4) 22.09.2017 முதல் 29.08.2018 வரை நடைபெற்றுக்கொண்டு இருந்தது. 2018 ஜுன் மாதம் தனது சொந்த ஊரான நெல்லையில் ஒரு பழைய வீடு வாங்கினார். இரட்டைப்படைப் புத்தியில் சொத்துச் சேர்கை என்பது சரியாகத்தான் இருந்தது.

அதன்பின் 2018 ஆவணி மாதம் முதல் வாங்கிய வீட்டைக் கொஞ்சம் கொஞ்சமாக வாஸ்துபடி மாற்றி அமைத்து வந்தார். கடந்த 2019 ஜுன் தனது தாயாருக்கு உடல்நிலை மிகவும் மோசமாக மாற மருத்துவமனையில் சேர்த்துச் சிகிச்சை அளித்து வந்தனர். அப்போது வீடு கட்டும் வேலையை நிறுத்தினர், சரியாக 10 நாட்களில் தாயார் பூரணமாக நலம் பெற்றுவிட்டார். இவருக்குப் புத்தியை நடத்தும் கோள் இராகு 3 ஆம் பாவகத்தில் இருக்கும்போது வீட்டு வேலை செய்தது 4 ஆம் பாவகத் தாயாரைப் பாதித்துள்ளது.

149. சாதகர் : ராஜேஷ் மோகன் (99400 22332) பிறந்த நாள் : 16.04.1973

பிறந்த நேரம் : 16.04.1973 பிறந்த ஊர் : முசிறி

| | 26 | 16 | 24 | 22 | |
|---|---|---|---|---|---|
| | புத | சூரி சுக் | சனி | கேது | |
| 33 | | இராசி | | | 35 |
| 32 | செவ் குரு | ஹஸ்தம்-4 | | | 32 |
| | ராகு | | லக் | சந் | |
| | 29 | 38 | 29 | 21 | |

| | 6 | 7 | 8 | 9 | |
|---|---|---|---|---|---|
| | சூரி சுக் | | சனி | கேது | |
| 5 | புத | ஸ்ரீபதி பாவகம் | | | 10 |
| 4 | குரு செவ் | | | | 11 |
| | ராகு | | லக் | சந் | |
| | 3 | 2 | 1 | 12 | |

RAJESH MOHAN
16-04-1973 20:05:00
Musiri,T.N.
சந் திசை இருப்பு 01-வருடம் 02-மாதம் 00-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | புத கேது |
| 2,6,10 | சூரி சுக் |
| 3,7,11 | ராகு |
| 4,8,12 | குரு செவ் சனி சந் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சந் | 16-06-1964-17-06-1974 | சனி | சனி | 17-06-2015-20-06-2018 |
| செ | 17-06-1974-17-06-1981 | சனி | புத | 20-06-2018-27-02-2021 |
| ராகு | 17-06-1981-17-06-1999 | சனி | கே | 27-02-2021-08-04-2022 |
| குரு | 17-06-1999-17-06-2015 | சனி | சுக் | 08-04-2022-07-06-2025 |
| சனி | 17-06-2015-17-06-2034 | சனி | சூரி | 07-06-2025-20-05-2026 |
| புத | 17-06-2034-17-06-2051 | சனி | சந் | 20-05-2026-20-12-2027 |
| கே | 17-06-2051-17-06-2058 | சனி | செ | 20-12-2027-28-01-2029 |
| சுக் | 17-06-2058-17-06-2078 | சனி | ராகு | 28-01-2029-04-12-2031 |
| சூரி | 17-06-2078-16-06-2084 | சனி | குரு | 04-12-2031-17-06-2034 |

இந்தச் சாதகர் பி.இ., படித்துவிட்டு ஒரு தகவல் தொழில் நுட்ப நிறுவனத்தில் உதவி மேலாளராக நல்லநிலையில் பணிபுரிந்து வந்தார். இவருக்குக் குரு தசாவில் இராகு புத்தி 21.01.2013 முதல் 17.06.2015 வரை நடந்துகொண்டு இருந்த சமயம் 2014 ஆம் ஆண்டு தைமாதம் திருப்போரூரில் அதிக மதிப்பு கொண்டு நிலம் வாங்கியுள்ளார். இந்த நிலம் வாங்கி 3 மாதத்திற்குள் தான் பார்த்து வந்த வேலை பறிபோய் உள்ளது.

ஆய்வு விதிப்படி புத்தியை நடத்தும் கோள் 3 இல் இருக்கும்போது பார்த்து வரும்வேலை அதே நிலையில் நீடிக்கும். ஆனால் இவருக்கு வேலை பறிபோய் உள்ளது. அதனை எதிர்விளைவு என்று அழைக்கலாம். ஒவ்வொரு செயலுக்கும் ஒரு எதிர்விளைவு உண்டு என்பது நியூட்டனின் கோட்பாடு ஆகும். சொத்து வாங்க வேண்டிய காலத்தில் வாங்க வேண்டும். இரட்டைப்படையை இயக்கும்போது மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

150. முனைவர்.தி. விமலன் (94431 93084) பிறந்த நாள் : 10.01.1962

பிறந்த நேரம் : அதிகாலை 05.55 பிறந்த ஊர் : மதுரை.

| 28 | 24 | 31 | 26 |
|---|---|---|---|
| | | | |
| சந் (20) | இராசி | | ராகு (25) |
| கேது குரு புத சனி (23) | சதயம்-3 | | (25) |
| சூரி சுக் செவ் லக் | | | |
| 29 | 31 | 42 | 33 |

| 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|
| | | | |
| சந் (3) | ஸ்ரீபதி பாவகம் | | ராகு (8) |
| சனி புத குரு கேது (2) | | | (9) |
| லக் செவ் சுக் சூரி | | | |
| 1 | 12 | 11 | 10 |

Dr.T.Vimalan
10-01-1962 05:55:00
Madurai,T.N.
ராகு திசை இருப்பு 08-வருடம் 06-மாதம் 00-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | செவ் சுக் சூரி |
| 2,6,10 | சனி புத குரு கேது |
| 3,7,11 | சந் |
| 4,8,12 | ராகு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| ராகு | 12-07-1952-12-07-1970 | புத | புத | 12-07-2005-09-12-2007 |
| குரு | 12-07-1970-12-07-1986 | புத | கே | 09-12-2007-05-12-2008 |
| சனி | 12-07-1986-12-07-2005 | புத | சுக் | 05-12-2008-06-10-2011 |
| புத | 12-07-2005-12-07-2022 | புத | சூரி | 06-10-2011-11-08-2012 |
| கே | 12-07-2022-12-07-2029 | புத | சந் | 11-08-2012-11-01-2014 |
| சுக் | 12-07-2029-12-07-2049 | புத | செ | 11-01-2014-08-01-2015 |
| சூரி | 12-07-2049-12-07-2055 | புத | ராகு | 08-01-2015-27-07-2017 |
| சந் | 12-07-2055-12-07-2065 | புத | குரு | 27-07-2017-02-11-2019 |
| செ | 12-07-2065-12-07-2072 | புத | சனி | 02-11-2019-12-07-2022 |

இவர் கற்பகம் பல்கலைக்கழகத்தில், சோதிடவியல் துறை தலைவராகப் பணிபுரிந்து வந்தார். 2012 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் கோவையில் ஒரு வீடு வாங்கினார். அப்போது இவருக்கு நடப்பு புதன் தசாவில் (2) சந்திர புத்தி (3) ஆகும். இவர் வாங்கிய வீட்டைப் புதுப்பித்து அந்த வீட்டிற்கு கிரகபிரவேசம் செய்து நுழைவதற்குள் பல்கலைக்கழகத்தில் தான் பார்த்து வந்த வேலையை இழந்தார்.

ஆய்வு விதிப்படி புத்தியை நடத்தும் கோள் 3 ஆம் பாவகத்தில் இருக்கும்போது இருக்கும் வேலையில் அப்படியே தொடர்வதை குறிக்கும். ஆனால் இவருக்கு நிரந்தர வருமானத்தைக் கொடுத்து வந்த வேலை பறிபோய் உள்ளது. காரணம் 3 ஆம் பாவகப் புத்தியில் வீடு வாங்கியதே ஆகும், இதனை எதிர்விளைவு என்று கூறலாம்.

**இச்சாதகர்களுக்குக் கிடைத்துள்ள சாதகமான பலன்கள்**

3, 7, 11 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 3, 7, 11 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் 100 விழுக்காடு இயங்கி இந்தப் பாவகங்கள மூலம் சாதகருக்கு மனமகிழ்ச்சியை கொடுத்துள்ளது.

புதுப்புது அறிமுகம், புதுமுகங்களை தைரியமாகச் சந்தித்தல், புதுப்புது தொடர்புகள், மனத்தில் தோன்றுவதைச் சரியாகப் பதிவு செய்தல், தைரியம், விடாமுயற்சி, சரியான தகவல் தொடர்புகள், தகவல் தொடர்பு சாதனங்களில் உள்ள தொழில் நுட்பங்களை அறிந்து கொள்ளுதல், மனோபலம், சொல்லவரும் கருத்துக்களைச் சுருக்கமாக தெளிவாக எடுத்துரைத்தல், சிறுபயணங்கள், உடற்பயிற்சி, உடல் எடையைக் குறைத்தல், விளம்பரம், புதியபரிணாமம், அடுத்த கட்டதிற்குச் செல்லுதல், கூச்சமின்றிப் பழகுதல், தன்னைதானே வெளிப்படுத்துதல், தேவைக்கு மட்டும் பணம் சம்பாதித்தால் போதும் என்கிற குணம், ஓர் இடத்தில் உள்ள பொருள்களை மற்றொரு இடத்திற்கு மாற்றுதல், வீரியம் போன்ற பலன்களும்,

வாழ்க்கைத்துணை, திருமணம், தொழில் கூட்டாளி, எல்லோரிடமும் அன்பாகப் பழகுதல், அனைவரையும் சமமாகக் கருதுதல், வாடிக்கையாளர்களுக்கு முக்கியத்துவம் அளித்தல், வாழ்க்கை துணையிடம் அன்பாக இருத்தல், வாழ்க்கைத்துணை மற்றும் தொழில் கூட்டாளிகளிடம் கலந்து ஆலோசித்து முடிவு எடுத்தல், வெளிப்படையாகச் செயல்படுதல், சமமாகப் பங்கு போட்டுக்கொள்வது, நாளைய சிந்தனை இல்லாமல் அன்றைய நாளை மட்டும் கருத்தில் கொள்ளுதல், சமுதாயத்தடன் இணைந்துச் செயல்படுதல், மனிதவள மேம்பாட்டிற்குத் திட்டமிடுதல், சட்டத்திற்குப் புறம்பான செயல் மற்றும் தீய விசயங்களுக்குத் துணை போகாதிருப்பது, தீராத நோயில் இருந்து விடுதலை போன்ற பலன்கள் நடைபெற்றுள்ளது.

மேலும் தான்கொண்ட கொள்கையில் உறுதிப்பாடு, வாரிசுகளின் கல்விக்கு முக்கியத்துவம் அளித்தல், உடலை ஆரோக்கியமாக வைத்துக்கொள்ளுதல், மனஅமைதி, நோய் எதிர்ப்புத் திறன், சங்கக் கூட்ட

நடவடிக்கைகள், ஒருமித்த கருத்து கொண்டவர்களின் கூட்டம், நலன் விரும்பிகளின் ஆலோசனை கேட்டு அதன்படி செயல்படுதல். மொத்தத்தில் இருப்பதைக் கொண்டு திருப்தியாக வாழ இவர்களுக்குத் தெரிந்துள்ளது.

**இச்சாதகர்களுக்குக் கிடைத்துள்ள பாதகமான பலன்கள்**

3, 7, 11 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 4, 8, 12 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் இயங்காமல் இந்தப் பாவகங்கள் மூலம் சாதகருக்குக் கிடைக்க வேண்டிய ஒரு சில சாதகமான பலன்களும் தடைபட்டுள்ளது.

சொத்துச் சேர்க்கச் சிரமப்பட்டுள்ளனர். நவீன இயந்திரங்களைப் பயன்படுத்துவதைத் தவிர்த்து இருக்கின்றனர். இடமாற்றம், தனது நிலையை அடிக்கடி மாற்றிக்கொள்வது, சொந்தமாக வீடுகட்ட வேண்டும் என்ற எண்ணம் இல்லாதிருத்தல், வாரிசுகளுக்குச் சொத்துச் சேர்த்து வைக்காமல், முன்னோர்கள் மூலம் சொத்துச் சேர்த்து இருந்தால், அதையும் பாதுக்காக்காமல் விற்று விட்டவர்கள், இரகசியங்களைப் பாதுகாக்கத் தெரியாமல் சிக்கலில் மாட்டிக்கொண்டவர்கள், இரகசியத் தொழில் செய்யக் கூடிய இடத்தில் மாட்டிக்கொண்டதால் தனிமைப்படுத்தப்பட்டவர்கள், சட்டதிற்குப் புறம்பான வில்லங்கமான பிரச்சினைகள் ஏதாவது வந்தால் அதனைச் சந்திக்கத் தயங்கியது, பணம் சேமித்து வைப்பதில் நாட்டம் இல்லாதிருத்தல், முன்னர் சேமிக்கப்பட்டிருந்த பணம் (வங்கி வைப்பு தொகை) இருந்தாலும் அதை உடைத்தது, ஒரு தொழிலுக்குமேல் அடுத்த தொழில் செய்ய வாய்ப்பு இருந்தும் பயன்படுத்திக் கொள்ளாது இருத்தல். திடீர் யோகத்தை இவர்கள் நம்புவதில்லை. உடலை வருத்தும் எந்த வேலையும் செய்ய மறுப்பது போன்ற பலன்கள் நடைபெற்றுள்ளதை அறியமுடிகிறது.

3, 7, 11 ஆம் பாவகங்களுக்குரிய புத்திகளில் நற்பலன் தீயபலன்களைச் சாகங்களுடன் ஒப்பிட்டு ஆராய்ந்ததன் வழி அவை முன்னர் கூறிய விதிமுறைக்கேற்ப நற்பலன் மற்றும் தீயபலன் தந்திருப்பதைக் கண்டறிய முடிகிறது.

## தொகுப்புரை

50 சாதகங்களின்வழி கிடைக்கப்பெற்ற செய்திகள். இன்பம் திரிகோணத்தில் புத்தியை நடத்தும் கோள் 3 அல்லது 7 அல்லது 11 ஆகிய பாவகங்களில் இருந்தபோது நடைபெற்ற பலன்கள் குறித்து 50 சாதகங்களைக் கொண்டு ஆய்வு செய்யப்பட்டது. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட விதிகளின்படி இவர்களுக்கு அகம் தொடர்பான காரகப் பலன்கள் நல்ல முறையில் கிடைத்துள்ளது. அதேசமயம் புறம் தொடர்பான காரகப் பலன்கள் பாதிக்கப்பட்டுள்ளது. அதுவும் குறிப்பாக 4, 8, 12 ஆம் பாவகக் காரகங்கள் பாதிக்கப்பட்டுள்ளது என்பதை அறியமுடிகிறது.

## இயல் 5

## வீடு என்ற திரிகோணப்பாவங்கள்

### முன்னுரை

பன்னிரு பாவகங்களில் 4, 8, 12 ஆகிய திரிகோணப் பாவகங்கள் வீடு என்று அழைக்கப்படுகிறது[23]. புத்தியை நடத்தும் கோள் வீடு என்னும் 4, 8, 12 ஆகிய திரிகோணப் பாவகங்களில் இருக்கும் நிலையை ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட 50 சாதகங்களுடன் பொருத்திப் பலன் அறிவதாக வீடு என்ற திரிகோணப் பாவகங்கள் என்னும் ஐந்தாம் இயல் அமைகின்றது.

### 4, 8, 12 ஆகிய திரிகோணங்களின் விளக்கம்

ஒற்றைப்படை பாவகங்களான 1, 5, 9 மற்றும் 3, 7, 11 ஆம் பாவகங்கள் அகம் என்றும், இரட்டைப்படை பாவகங்களான 2, 6, 10 மற்றும் 4, 8, 12 ஆம் பாவகங்கள் புறம் என்றும் அழைக்கப்படுகிறது.

அதன்படி 4, 8, 12 ஆம் பாவகங்கள் இரட்டைப்படை பாவகங்களில் வருகின்றது. ஆகையால் இந்த வீடு எனும் திரிகோணம் புறத்தைச் சார்ந்தது ஆகும். எனவே இந்த இயலில் ஆராயப்பட இருக்கும் சாதகங்களில் புறம் தொடர்பான பலன்கள் நல்லமுறையில் சாதகருக்குக் கிடைக்கும். அதேவேளையில் அகம் தொடர்பான காரகங்களில் பாதிப்புகளை ஏற்படுத்தும். அதுவும் முக்கியமாக 1, 5, 9 ஆம் பாவகங்களின் காரகத்துவப் பலன்களில் அதிக பாதிப்புகளைக் கொடுக்கும்.

காரணம் 4, 8, 12 ஆம் பாவகங்கள் என்பது 1, 5, 9 ஆம் பாவகங்களுக்கு 4, 8, 12 ஆம் பாவகங்களாக வரும். ஆய்விற்கு உட்படுத்தப்பட்டுள்ள பன்னிரு விதிகளின்படி விதிஎண் 4 என்பது 70 விழுக்காடு பாதிப்புகளையும், விதிஎண் 8 என்பது எதிர்மறையாகவும், விதிஎண் 12 என்பது இயங்காது என அமையும்.

[23] இரா. அருள்வேல், ஸ்ரீ ராஜ ஜோதிடம், ப 99

**வீடு என்ற திரிகோணத்தின் விளைவுகள்**

திரிகோண விதிகளின்படி, புத்தியை நடத்தும் கோள் 4, 8, 12 என்னும் வீடு திரிகோணப் பாவகங்களில் இருக்கும்போது,

4, 8, 12 ஆம் பாவகங்கள் 100 விழுக்காடு இயங்கும்,

1, 5, 9 ஆம் பாவகங்கள் இயங்காது,

2, 6, 10 ஆம் பாவகங்கள் பன்மடங்கு இயங்கும்.

3, 7, 11 ஆம் பாவகங்கள் ஒரு வரைமுறைக்கு உட்பட்டு இயங்கும்,

திரிகோண விதிகளின்படி புத்தியை நடத்தும் கோள் 4, 8, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது 4, 8, 12 ஆம் பாவகங்களில் கூறப்பட்டுள்ள பலன்கள் யாவும் இந்தப் புத்தியில் நூறு விழுக்காடு நடைபெறும். அதேவேளையில் 1, 5, 9 ஆம் பாவகங்களில் கூறப்பட்டுள்ள பலன்கள் யாவும் கிடைக்காத நிலைகளில் அமையும்.

**4, 8, 12 ஆம் பாவகங்களின் புத்தி தரும் பலன்கள்**

ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருந்து ஒரு கோள் புத்தியை நடத்தும்போது நன்மையான பலன்கள் மற்றும் தீமையான பலன்கள் இரண்டும் சேர்ந்தே நடக்கும். அதன்படி 4, 8, 12 ஆம் பாவகங்களில் இருந்து ஒரு கோள் புத்தியை நடத்தும் போது ஏற்படும் நன்மை மற்றும் தீமையான பலன்கள் கீழ்கண்டவாறு அமையும்.

**சாதகமான பலன்கள்:**

4, 8, 12 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 4, 8, 12 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் 100 விழுக்காடு இயங்கும். பொதுவாக 4, 8, 12 ஆம் பாவகங்களில் பெரிய நன்மையான பலன்கள் ஏதும் இல்லை. 4 ஆம் பாவகத்தில் 30 விழுக்காடு இலக்கினத்திற்கு நன்மையான பலன்கள் கிடைக்கும். ஆனால் 8, 12 பாவகங்கள்மூலம் நன்மை என்பது மிகமிகக் குறைவு.

அசையும் அசையாச் சொத்துக்கள் சேர்த்தல், தேவைக்கு அதிகமான கையிருப்புப் பணம், மறைமுகச் சொத்து (பினாமி), யூகங்களை

நம்பாதிருத்தல், புரட்சிகரமான சிந்தனை, ஒரு விசயத்தை மெருகேற்றிப் பேசாமல் வெட்டு ஒன்று துண்டு இரண்டு எனப் போட்டு உடைத்தல், ஒரே வேலையை மீண்டும் மீண்டும் செய்கிறோமே என்கிற சலிப்பு இல்லாமல் செய்த வேலையைச் செய்து கொண்டே இருத்தல், ஏதாவது ஒரு வேலையைச் செய்து கொண்டே இருப்பார்கள்.

காப்பீட்டு பணம், எதிர்பாராத தனவருவாய் இறப்பு காப்பீடு, லாட்டரியில் பரிசு பணம், இழப்பீடு பெறுதல், நஷ்ட ஈடு பெறுதல், கேட்பார் இல்லாமல் கிடைக்கும் பொருள் மற்றும் பணம், புதையல், அசிங்கம் பாராமல் வேலை செய்யக் கூடியவர்கள், மிகக் கடுமையான வேலைகளைச் செய்வது, மூளைச்சலவை செய்து இவர்களை மதமாற்றம் செய்ய முடியாது, பல தோல்விகளைச் சந்திந்து மனம் பக்குவப்பட்டு இருக்கும், அமானுச சக்திகள் இருக்கக் கூடும், ஒற்றன் வேலை செய்ய கூடியவர்கள்.

இரவுபகல் பாராமல் கடின உடல் உழைப்பு, கௌரவம் பார்க்காமல் உழைப்பது, அறிவியல் ஆராய்ச்சியாளர்கள், துப்பறியும் நுணுக்கங்கள், மற்றவர்களின் இயலாமையைக் கண்டறிவது இவர்களுக்குக் கைவந்த கலையாகும், பல தலைமுறைக்குத் தேவையான சொத்துக்கள் சேர்த்து வைப்பர். ஒன்றுக்கு மேற்பட்ட தொழில், நாடு கடத்தப்படுதல், வெளிநாட்டுக் குடியுரிமை (12) தான் என்கிற அகம்பாவம் (1) அழிந்து முக்தி (12) பெற வழிவகைசெய்யும்.

**பாதகமான பலன்கள்:**

4, 8, 12 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 8, 12 ஆம் பாவகங்களின் தீமையுடன் 1, 5, 9 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்களும் இயங்காமல் இந்தப் பாவகங்கள்மூலம் சாதகருக்குக் கிடைக்க வேண்டிய மனமகிழ்ச்சி தடைப்படும். அதாவது தீமை எனக் கொள்ளலாம்.

சாதகரின் ஆரோக்கியம் பாழ்பட்டுவிடும், மனபலம் இருக்காது, எதிலும் பயம், தோற்றப் பொழிவை இழப்பது, சுயகௌரவத்தை இழத்தல், கலைத் துறையில் இருந்து வெளியேறுதல், மறைந்து வாழ்தல், எப்போதும் ஒருவிதப் பதட்டம் இவர்களிடத்தில் காணப்படும். மரணபயம், எதிர்மறை சிந்தனைகள், சமுதாயத்தில் இருந்து தனிமைப்படுத்தப்படுதல்,

சிறைச்சாலை, மருத்துவமனையில் மாட்டிக்கொள்வது, புத்தி பேதலிப்பு, மனநோய், வியாபாரக் கூட்டாளியிடம் ஏமாந்து போகுதல், திருமணமுறிவு, தனது பணத்தை அடுத்தவரிடம் கொடுத்து ஏமாந்து போகுதல், தவறான முடிவுகள், மனவலி வேதனை, துக்கம், கண்டறிய முடியாத நோய்கள், மருந்துகளுக்குக் கட்டுப்படாத நோய்கள், உடலில் உள்ள உறுப்புகள் சேதமடைதல், உடல் உறுப்புக்கள் அகற்றப்படுதல், உடலுக்கும் மூளைக்கும் உள்ள தொடர்பு துண்டிக்கப்படுதல் (மூளைச்சாவு), கோமாவில் இருத்தல், இதயக் கோளாறு, இதய அறுவை சிகிச்சை, புத்திர சோகம், காதல் முறிவு, யூக வணிகத்தில் நஷ்டம், கலைத்துறையில் இருந்து வெளியேறுதல், அவமானம், மற்றவர்களைக் கொலை செய்தல், தற்கொலை சிந்தனை, தெய்வ அனுக்கிரகம் இருக்காது இருத்தல், ஆய்வுக் கல்வியில் தடை, வீட்டை விட்டு வெளியேறுதல், நாடோடிகள், இலஞ்சம் வாங்கிச் சிக்கிக்கொள்ளுதல், சட்டத்திற்குப் புறம்பான செயல்கள், பதுக்கல், கடத்தல், எதிர்பாராத விபத்துக்கள், வெளிநாட்டு வணிகத் தொடர்பு துண்டிப்பு, யூக வணிகத்தில் நஷ்டம், தீவிரவாதம், நாத்திகம் பேசுவது, பிற உயிர்களுக்குத் தீங்கு செய்வது, இயற்கையை அழிப்பது, சட்டத்திற்குப் புறம்பான இரகசியத் தொழில், அளவிற்கு அதிமான கடன், பல எதிரிகள், பிறரிடம் பணம் வாங்கிவிட்டு மீண்டும் கொடுக்காமல் ஏமாற்றுவது அல்லது மஞ்சள் நோட்டீஸ் விடுவது, பிறர் சொல் கேளாமை. சுயசித்ரவதை செய்தல் (தற்கொலை படை) பிற மனிதர்களின் துயரத்தில் இன்பம் காணுதல், பிறர் கண்கூச வைக்கும் வன்மமான செயல்கள், கேவலமான செயல்கள் போன்றவை காணப்படும்.

151. சாதகர் : பாஸ்கரன் (63821 72056) பிறந்த நாள் : 26.12.1963

பிறந்த நேரம் : காலை 09.07 பிறந்த ஊர்: நாமக்கல்.

| | 24 | 26 | 26 | 29 | |
|---|---|---|---|---|---|
| | குரு | சந் | | ராகு | |
| 30 | | இராசி | | | 22 |
| 29 | சனி லக் சுக் | அசுவனி-4 | | | 27 |
| | புத செவ் கேது சூரி | | | | |
| | 21 | 30 | 40 | 33 | |

| | 3 | 4 | 5 | 6 | |
|---|---|---|---|---|---|
| | குரு | சந் | | ராகு | |
| 2 | | ஸ்ரீபதி பாவகம் | | | 7 |
| 1 | லக் சுக் சனி | | | | 8 |
| | சூரி கேது செவ் புத | | | | |
| | 12 | 11 | 10 | 9 | |

BASKARAN
26-12-1963 09:07:00
Namakkal,T.N.
கேது திசை இருப்பு 01-வருடம் 04-மாதம் 26-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சுக் சனி |
| 2,6,10 | ராகு |
| 3,7,11 | குரு |
| 4,8,12 | சந் சூரி கேது செவ் புத |

| திசை விபரம் | புத்தி விபரம் |
|---|---|
| கேது 23-05-1958-23-05-1965 | ராகு ராகு 23-05-2008-03-02-2011 |
| சுக் 23-05-1965-23-05-1985 | ராகு குரு 03-02-2011-29-06-2013 |
| சூரி 23-05-1985-24-05-1991 | ராகு சனி 29-06-2013-05-05-2016 |
| சந் 24-05-1991-23-05-2001 | ராகு புத 05-05-2016-22-11-2018 |
| செவ் 23-05-2001-23-05-2008 | ராகு கேது 22-11-2018-10-12-2019 |
| ராகு 23-05-2008-23-05-2026 | ராகு சுக் 10-12-2019-10-12-2022 |
| குரு 23-05-2026-23-05-2042 | ராகு சூரி 10-12-2022-04-11-2023 |
| சனி 23-05-2042-23-05-2061 | ராகு சந் 04-11-2023-05-05-2025 |
| புத 23-05-2061-23-05-2078 | ராகு செவ் 05-05-2025-23-05-2026 |

இந்தச் சாதகர் நிதி நிறுவனம் நடத்தி வந்தார். 2017 ஆம் ஆண்டு வெளியில் கொடுத்த பல கோடி ரூபாய் வசூல் செய்ய முடியாமல் நிதி நிறுவனம் தொடர்ந்து நடத்த முடியாமல் நிறுத்தி விட்டார்.

பொதுவாக 12 ஆம் பாவகம் என்பது சாதரின் பணம் வெளியில் செல்வது, முதலீடு செய்வதைக் குறிக்கும். வெளியே கொடுத்த பணத்தை மீண்டும் பெறுவதை 11 ஆம் பாவகம் குறிக்கும். 12 ஆம் பாவகத்தில் அதிக கோள்கள் உடைய நபர்கள் வெளியே கொடுத்த பணத்தை மீட்க முடியாமல் சிரமப்படுவார்கள்.

அதன்படி இந்தச் சாதகருக்கு 2017 ஆம் ஆண்டு இராகுதசாவில் (6) புதன் புத்தி (12) நடைபெற்ற காலத்தில் பணத்தை ஏமாந்து இருக்கிறார். மேலும் இவருக்கு 12 ஆம் பாவகத்தில் 4 கோள்கள் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

152. சாதகர் : பானு (94453 65162) பிறந்த நாள் : 14.07.1982

பிறந்த நேரம் : மதியம் 14.56 பிறந்த ஊர்: திருவள்ளூர்.

| | 30 | 35 | 23 | 28 | |
|---|---|---|---|---|---|
| | | சந் | சுக் | புத ராகு சூரி | |
| 32 | | இராசி | | | 28 |
| 28 | | அசுவனி-1 | | | 29 |
| | கேது | லக் | குரு | சனி செவ் | |
| | 22 | 26 | 24 | 32 | |

| | 5 | 6 | 7 | 8 | |
|---|---|---|---|---|---|
| | | சந் | | சுக் புத ராகு | |
| 4 | | ஸ்ரீபதி பாவகம் | | சூரி | 9 |
| 3 | | | | | 10 |
| | கேது | லக் | சனி செவ் குரு | | |
| | 2 | 1 | 12 | 11 | |

BANU
14-07-1982 14:56:00
Tiruvallur,T.N.
கேது திசை இருப்பு 06-வருடம் 06-மாதம் 00-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சூரி |
| 2,6,10 | கேது சந் |
| 3,7,11 | |
| 4,8,12 | சுக் புத ராகு சனி செவ் குரு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| கே | 13-01-1982-13-01-1989 | சந் | சந் | 13-01-2015-14-11-2015 |
| சுக் | 13-01-1989-13-01-2009 | சந் | செ | 14-11-2015-14-06-2016 |
| சூரி | 13-01-2009-13-01-2015 | சந் | ராகு | 14-06-2016-14-12-2017 |
| சந் | 13-01-2015-13-01-2025 | சந் | குரு | 14-12-2017-15-04-2019 |
| செ | 13-01-2025-13-01-2032 | சந் | சனி | 15-04-2019-13-11-2020 |
| ராகு | 13-01-2032-13-01-2050 | சந் | புத | 13-11-2020-14-04-2022 |
| குரு | 13-01-2050-13-01-2066 | சந் | கே | 14-04-2022-13-11-2022 |
| சனி | 13-01-2066-13-01-2085 | சந் | சுக் | 13-11-2022-14-07-2024 |
| புத | 13-01-2085-14-01-2102 | சந் | சூரி | 14-07-2024-13-01-2025 |

இந்தச் சாதகருக்கு திருமணம் ஆகி 10 ஆண்டுகள் ஆகியுள்ள நிலையில் இதுவரை குழந்தை இல்லை. மேலும் மனவிரக்தியின் உச்சத்தில் தற்கொலை முயற்சியும் செய்து இருக்கிறார். இவரது கணவர் சாதகத்தில் 100 விழுக்காடு புத்திர தோசம் இருக்கிறது. இவரது சாதகப்படி 50 விழுக்காடு புத்திர தோஷம் உள்ளது. ஒருவருக்குப் புத்திரதோசம் இருந்தால் அவரது ஜோடிக்குப் புத்திர தோசம் இல்லாமல் இணைக்க வேண்டும். மேலும் இந்தப் பெண்ணிற்கு 5 ஆம் பாகத்தைக் கெடுக்கக் கூடிய திரிகோணமான 4, 8, 12 ஆம் திரிகோணத்தில் மொத்தம் 6 கோள்கள் உள்ளன, அதனால் 4, 8, 12 ஆம் பாவக இயக்கம் மீண்டும் மீண்டும் வரும் என்பதால் புத்திரம் (5) கிடைக்காமலேயே போய் உள்ளது.

மேலும் இவருக்குச் சந்திர தசா (6) இராகு புத்தியில் (8) தற்கொலை சிந்தனை வந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

153. சாதகர் : ராதா கிருண்ணன் (95851 21899) பிறந்த நாள் : 26.04.1963

பிறந்த நேரம் : காலை 08.34 பிறந்த ஊர் : பெங்களூர்.

| | 35 | 22 | 28 | 20 | |
|---|---|---|---|---|---|
| | குரு சுக் | சூரி | புத சந் லக் | | |
| 34 | | இராசி | | ராகு செவ் | 32 |
| 34 | சனி கேது | ரோகிணி-2 | | | 28 |
| | | | | | |
| | 20 | 24 | 36 | 24 | |

| | 11 | 12 | 1 | 2 | |
|---|---|---|---|---|---|
| | சுக் குரு | சூரி புத | லக் சந் | | |
| 10 | சனி | ஸ்ரீபதி பாவகம் | | ராகு செவ் | 3 |
| 9 | கேது | | | | 4 |
| | | | | | |
| | 8 | 7 | 6 | 5 | |

RADHA KRISHNAN
26-04-1963 08:34:00
Bangalore, Kar.
சந் திசை இருப்பு 06-வருடம் 11-மாதம் 06-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சந் கேது |
| 2,6,10 | சனி |
| 3,7,11 | ராகு செவ் சுக் குரு |
| 4,8,12 | சூரி புத |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| சந் | 01-04-1960-01-04-1970 | சனி சனி | 02-04-2011-04-04-2014 |
| செவ் | 01-04-1970-01-04-1977 | சனி புத | 04-04-2014-12-12-2016 |
| ராகு | 01-04-1977-02-04-1995 | சனி கேது | 12-12-2016-21-01-2018 |
| குரு | 02-04-1995-02-04-2011 | சனி சுக் | 21-01-2018-23-03-2021 |
| சனி | 02-04-2011-01-04-2030 | சனி சூரி | 23-03-2021-05-03-2022 |
| புத | 01-04-2030-02-04-2047 | சனி சந் | 05-03-2022-04-10-2023 |
| கேது | 02-04-2047-01-04-2054 | சனி செவ் | 04-10-2023-12-11-2024 |
| சுக் | 01-04-2054-01-04-2074 | சனி ராகு | 12-11-2024-19-09-2027 |
| சூரி | 01-04-2074-01-04-2080 | சனி குரு | 19-09-2027-01-04-2030 |

இந்தச் சாதகர் தான் வேலை செய்த நிறுவனத்தில் பணம் கையாடல் செய்து விட்டதாக 2015 ஆம் ஆண்டு சிறையில் தண்டிக்கப்பட்டுள்ளார்.

ஆய்வு விதிப்படி புத்தியை நடத்த கூடிய கோள் 8 அல்லது 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது தவறு செய்யத் தூண்டும், அதே வேளையில் தான் செய்யும் தவறுகளில் வசமாகச் சிக்கிக் கொண்டு தண்டிக்கப்படுவதும் இதே புத்திக் காலத்தில் நடைபெறும்.

அதன்படி இவர் 2015 ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில், தான் பணிபுரிந்து அலுவலகத்தில் பணம் கையாடல் செய்து விட்டதாகப் காவல் துறை விசாரணையின் அடிப்படையில் 2015 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் சிறை தண்டனை பெற்று இருக்கிறார். இச்சம்பவம் நடைபெற்ற காலம் சனி (10) தசாவில் புதன் (12) புத்தியாகும் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும். அடுத்து வந்த சுக்கிர (11) புத்தியில் குற்றமற்றவன் என்று நிருபிக்கபட்டுச் சிறையில் இருந்து வெளியே வந்துவிட்டார் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

154. சாதகர் : சுமதி (9840355292) பிறந்த நாள் : 30.04.1975

பிறந்த நேரம் : காலை 07.10 பிறந்த ஊர்: ஸ்ரீவில்லிபுதூர்.

| | 31 | 22 | 22 | 24 | |
|---|---|---|---|---|---|
| | குரு | சூரி புத | லக் கேது சுக் | சனி | |
| 40 | செவ் | இராசி | | | 23 |
| 32 | | மூலம்-3 | | | 30 |
| | சந் | ராகு | | | |
| | 29 | 22 | 34 | 28 | |

| | 11 | 12 | 1 | 2 | |
|---|---|---|---|---|---|
| | செவ் | குரு சூரி | லக் புத கேது | சுக் | |
| 10 | | ஸ்ரீபதி பாவகம் | | சனி | 3 |
| 9 | | | | | 4 |
| | சந் | ராகு | | | |
| | 8 | 7 | 6 | 5 | |

Sumathi
30-04-1975 07:10:00
Srivilliputtur,T.NM.
கேது திசை இருப்பு 02-வருடம் 00-மாதம் 13-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | புத கேது |
| 2,6,10 | சுக் |
| 3,7,11 | சனி ராகு செவ் |
| 4,8,12 | சந் குரு சூரி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| கேது | 14-05-1970-13-05-1977 | செவ்செவ் | 13-05-2013-09-10-2013 |
| சுக் | 13-05-1977-13-05-1997 | செவ்ராகு | 09-10-2013-28-10-2014 |
| சூரி | 13-05-1997-14-05-2003 | செவ்குரு | 28-10-2014-04-10-2015 |
| சந் | 14-05-2003-13-05-2013 | செவ்சனி | 04-10-2015-12-11-2016 |
| செவ் | 13-05-2013-13-05-2020 | செவ்புத | 12-11-2016-09-11-2017 |
| ராகு | 13-05-2020-14-05-2038 | செவ்கேது | 09-11-2017-07-04-2018 |
| குரு | 14-05-2038-14-05-2054 | செவ்சுக் | 07-04-2018-07-06-2019 |
| சனி | 14-05-2054-13-05-2073 | செவ்சூரி | 07-06-2019-13-10-2019 |
| புத | 13-05-2073-14-05-2090 | செவ்சந் | 13-10-2019-13-05-2020 |

இந்தச் சாதகருக்கு 2007 ஆண்டு ஜூன் மாதம் மனவளர்ச்சி குன்றிய குழந்தை பிறந்துள்ளது. அப்போது இவருக்குச் சந்திர (8) தசாவில் குரு (12) புத்தி நடைபெற்ற காலம் அகும். இவரின் இராசிக் கட்டப்படி 5 ஆம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு நன்றாக உள்ளது. இருந்தும் இவர் கருவுற்ற காலம் மற்றும் குழந்தை பிறந்த காலம் இரண்டும் 12 ஆம் பாவகப் புத்தியில் என்பதால் புத்திரசோகம் ஏற்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

ஆய்வு விதிப்படி 5 ஆம் பாவகம் பாதிக்கப்பட்டவர்கள் 4, 8, 12 ஆம் பாவகப் புத்திகளில் கருவுறக்கூடாது என்பதாகும். மேலும் தசாவை நடத்தக் கூடிய கோள் 4, 8, 12 இல் இருக்கும்போது, புத்தியை நடத்தும் கோள் 3, 7, 11 இல் இருக்கும் சமயம் கருவுற்று குழந்தை பெற்றுக்கொள்வது சிறப்பாகும். காரணம் இங்குத் தசா பலன் முறிவு 5 ஆம் பாவக நல்ல பலனை ஏற்படுத்தும்.

155. சாதகர் : கதிர்வேலு (70949 46156) பிறந்த நாள் : 25.09.1959

பிறந்த நேரம் : இரவு 7.30 பிறந்த ஊர் : திருவண்ணாமலை

| | 23 | 35 | 24 | 36 | |
|---|---|---|---|---|---|
| | கேது | லக் | | சந் | |
| 29 | | இராசி | | | 38 |
| 26 | | திருவாதிரை-3 | | சுக் | 24 |
| | சனி | குரு | | சூரி ராகு புத செவ் | |
| | 21 | 24 | 25 | 32 | |

| | 12 | 1 | 2 | 3 | |
|---|---|---|---|---|---|
| | கேது | லக் | | | |
| 11 | | ஸ்ரீபதி பாவகம் | | சந் | 4 |
| 10 | | | | சுக் | 5 |
| | சனி | குரு | செவ் | சூரி ராகு புத | |
| | 9 | 8 | 7 | 6 | |

KATHIRVELU
25-09-1959 19:30:00
Tiruvannamalai
ராகு திசை இருப்பு 08-வருடம் 04-மாதம் 05-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சுக் சனி |
| 2,6,10 | சூரி ராகு புத |
| 3,7,11 | செவ் |
| 4,8,12 | சந் குரு கேது |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| ராகு | 30-01-1950-31-01-1968 | புத | புத | 31-01-2003-28-06-2005 |
| குரு | 31-01-1968-31-01-1984 | புத | கேது | 28-06-2005-26-06-2006 |
| சனி | 31-01-1984-31-01-2003 | புத | சுக் | 26-06-2006-25-04-2009 |
| புத | 31-01-2003-31-01-2020 | புத | சூரி | 25-04-2009-02-03-2010 |
| கேது | 31-01-2020-31-01-2027 | புத | சந் | 02-03-2010-01-08-2011 |
| சுக் | 31-01-2027-31-01-2047 | புத | செவ் | 01-08-2011-29-07-2012 |
| சூரி | 31-01-2047-30-01-2053 | புத | ராகு | 29-07-2012-15-02-2015 |
| சந் | 30-01-2053-31-01-2063 | புத | குரு | 15-02-2015-23-05-2017 |
| செவ் | 31-01-2063-30-01-2070 | புத | சனி | 23-05-2017-31-01-2020 |

இந்தச் சாதகர் 2016 ஆம் ஆண்டு தனது வீட்டைக் கட்டியுள்ளார். அப்போது இவருக்குப் புதன் தசாவில் (6) குரு புத்தி (8) ஆகும்.

8, 12 ஆம் பாவகம் என்பது எல்லா விசயங்களுக்கும் தீமை என்று எடுத்துக்கொள்ள முடியாது. 8, 12 ஆம் பாவகம் என்பது 1 ஆம் பாவகப் பலனை 100 விழுக்காடு கெடுக்கும் அதில் மாற்றுக்கருத்து இல்லை. ஆனால் 8 மற்றும் 12 ஆம் பாவகம் 4 ஆம் பாவகத்திற்கு 100 விழுக்காடு ஆதரவாகச் செயல்படும். அதாவது புத்தியை நடத்தும் கோள் 8, 12 ஆம் பாவகங்களில் இருந்தாலும் 4 ஆம் பாவகக் காரகமான நிலம் அல்லது வீடு கட்டுவதோ, வாங்குவதோ செய்யலாம்.

இவரது சாதகப்படி 4 ஆம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு நன்றாக உள்ளது. அதன்படி இவர் குரு புத்தியில் (8) வீடு கட்டியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

156. சாதகா் : மோகன் (90030 17286) பிறந்த நாள் : 21.11.1973

பிறந்த நேரம் : இரவு 10.46 பிறந்த ஊா் : ஸ்ரீவில்லிபுதுாா்.

| | 25 | 28 | 28 | 25 | |
|---|---|---|---|---|---|
| | | செவ் | | கேது சனி | |
| 28 | | இராசி | | லக் | 27 |
| 23 | குரு | சித்திரை-3 | | | 37 |
| | சுக் ராகு | சூரி | புத சந் | | |
| | 32 | 26 | 30 | 28 | |

| | 9 | 10 | 11 | 12 | |
|---|---|---|---|---|---|
| | | செவ் | | கேது சனி | |
| 8 | | ஸ்ரீபதி பாவகம் | | லக் | 1 |
| 7 | குரு | | | | 2 |
| | ராகு சுக் | சூரி | புத | சந் | |
| | 6 | 5 | 4 | 3 | |

Mohan
21-11-1973 22:46:00
Srivilliputtur,T.NM.
செவ் திசை இருப்பு 03-வருடம் 04-மாதம் 14-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சூரி |
| 2,6,10 | ராகு சுக் செவ் |
| 3,7,11 | சந் குரு |
| 4,8,12 | புத கேது சனி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| செ | 07-04-1970-07-04-1977 | சனி | சனி | 07-04-2011-10-04-2014 |
| ராகு | 07-04-1977-07-04-1995 | சனி | புத | 10-04-2014-18-12-2016 |
| குரு | 07-04-1995-07-04-2011 | சனி | கே | 18-12-2016-27-01-2018 |
| சனி | 07-04-2011-07-04-2030 | சனி | சுக் | 27-01-2018-29-03-2021 |
| புத | 07-04-2030-07-04-2047 | சனி | சூரி | 29-03-2021-11-03-2022 |
| கே | 07-04-2047-07-04-2054 | சனி | சந் | 11-03-2022-10-10-2023 |
| சுக் | 07-04-2054-07-04-2074 | சனி | செ | 10-10-2023-18-11-2024 |
| சூரி | 07-04-2074-07-04-2080 | சனி | ராகு | 18-11-2024-25-09-2027 |
| சந் | 07-04-2080-07-04-2090 | சனி | குரு | 25-09-2027-07-04-2030 |

இந்தச் சாதகா் பி.இ., எம்.பி.ஏ., படித்துவிட்டுப் பல ஆண்டுகள் துபாய் நாட்டில் நிா்வாக அதிகாரியாக குடும்பத்துடன் செய்து வந்தவா் ஆவாா்.

இவரது சனி தசாவில் (12) புதன் புத்தி (4) காலத்தில் துபாயில் இருந்து ஏதோ சூழ்நிலை காரணமாகத் தாயகம் திரும்ப நேரிட்டது. இங்கு வந்தபின் அதே புதன் புத்தி (4) காலத்தில் மீண்டும் வெளிநாடு செல்ல பல முயற்சிகள் செய்தும் வெளிநாடு போக முடியவில்லை. கானா என்கிற நாட்டிற்கு 3 நாள் சென்றுதான் வேலை செய்ய வேண்டிய இடம் குடும்பத்துடன் தங்க இருக்கும் வீடு ஆகியவற்றைப் பாா்த்துவிட்டு வந்த போதும் அங்கு வேலைக்குச் செல்ல முடியாமல் கடைசி நேரத்தில் அந்த முயற்சி கைவிடப்பட்டது. வெளிநாடு என்பது 9 ஆம் பாவகம் ஆகும். 9 ஆம் பாவகத்திற்கு 8, 12 ஆக வரும் 4 மற்றும் 8 ஆம் பாவகப் புத்தியில் வெளிநாட்டிற்குத் தடையைக் கொடுக்கும் என்பது ஆய்வு விதி ஆகும்.

157. சாதகர் : ஸ்ரீ ரக்ஷணா (63743 09683) பிறந்த நாள் : 06.12.1996

பிறந்த நேரம் : மாலை 06.36 பிறந்த ஊர்: கோவை

| | 25 | 29 | 30 | 31 | |
|---|---|---|---|---|---|
| | கேது சனி | | | லக் | |
| 25 | | இராசி | | | 28 |
| 21 | | சித்திரை-2 | | செவ் | 31 |
| | குரு புத | சூரி | சுக் | ராகு சந் | |
| | 21 | 32 | 30 | 34 | |

| | 10 | 11 | 12 | 1 | |
|---|---|---|---|---|---|
| | சனி | கேது | | லக் | |
| 9 | | ஸ்ரீபதி பாவகம் | | | 2 |
| 8 | குரு | | | | 3 |
| | சூரி புத | சுக் | ராகு சந் | செவ் | |
| | 7 | 6 | 5 | 4 | |

R.SRI RAKSHANA
06-12-1996 18:36:00
Coimbatore, T.N.
செவ் திசை இருப்பு 04-வருடம் 04-மாதம் 10-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | ராகு சந் |
| 2,6,10 | சுக் சனி |
| 3,7,11 | சூரி புத கேது |
| 4,8,12 | செவ் குரு |

| திசை விபரம் | புத்தி விபரம் |
|---|---|
| செவ் 18-04-1994-17-04-2001 | ராகு ராகு 17-04-2001-29-12-2003 |
| ராகு 17-04-2001-18-04-2019 | ராகு குரு 29-12-2003-24-05-2006 |
| குரு 18-04-2019-18-04-2035 | ராகு சனி 24-05-2006-30-03-2009 |
| சனி 18-04-2035-18-04-2054 | ராகு புத 30-03-2009-17-10-2011 |
| புத 18-04-2054-18-04-2071 | ராகு கேது 17-10-2011-04-11-2012 |
| கேது 18-04-2071-18-04-2078 | ராகு சுக் 04-11-2012-05-11-2015 |
| சுக் 18-04-2078-18-04-2098 | ராகு சூரி 05-11-2015-28-09-2016 |
| சூரி 18-04-2098-18-04-2104 | ராகு சந் 28-09-2016-30-03-2018 |
| சந் 18-04-2104-19-04-2114 | ராகு செவ் 30-03-2018-18-04-2019 |

இந்தச் சாதகர் 2015 முதல் 2018 ஆம் ஆண்டு வரை ஒருவரைக் காதலித்து வந்தார். காதல் என்பது 5 ஆம் பாவகக் காரகச் செயல் ஆகும். பொதுவாகக் காதலுக்கு ஒற்றைப்படைப் புத்திகள் ஆதரவாகச் செயல்படும். ஆனால் 4, 8, 12 ஆம் பாவகப் புத்திகள் காதலுக்குத் தடையை ஏற்படுத்தும் என்பது ஆய்வு விதி ஆகும். அதன்படி இவர் காதலித்து வந்த காலம் இராகு தசாவில் (5) சூரியன் புத்தி (7) மற்றும் சந்திர புத்தி (5) காலம் ஆகும்.

அதன்பின் வந்த செவ்வாய் (4) புத்தி 30.03.2018 முதல் துவங்கியது. இந்தக் காலக்கட்டத்தில் காதலர்கள் இருவரும் சந்தித்துக்கொள்வோ, பேசவோ சரியாக நேரம் காலம் ஒத்துவராமல், அத்துடன் கருத்து வேறுபாடும் ஏற்பட்டு இருவரும் பிரிந்து விட்டனர்.

ஆய்வு விதிப்படி 5, 7 மற்றும் 11 ஆம் பாவகத் தொடர்பு இருந்தாலும், 4, 8, 12 ஆம் பாவகப் புத்திகள் தடையைக் கொடுக்கும்.

158. சாதகர் : சத்தீஸ்வரன் (94435 92642) பிறந்த நாள் : 15.12.1990

பிறந்த நேரம் : மாலை 03.04 பிறந்த ஊர் : பாண்டிசேரி

23 33 34 27

| 32 / 27 | | | 23 / 28 |
|---|---|---|---|
| | லக் | செவ் | |
| | இராசி | | கேது குரு |
| ராகு சனி | அனுஷம்-3 | | |
| புத சுக் | சூரி சந் | | |

22 26 26 36

12 1 2 3

| 11 / 10 | | | 4 / 5 |
|---|---|---|---|
| | லக் | செவ் | |
| | ஸ்ரீபதி பாவகம் | | கேது குரு |
| சனி ராகு | | | |
| சுக் புத | சந் சூரி | | |

9 8 7 6

Satheeswaran
15-12-1990 15:04:00
Pondicherry,Pon.
சனி திசை இருப்பு 09-வருடம் 03-மாதம் 23-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சுக் புத |
| 2,6,10 | செவ் சனி ராகு |
| 3,7,11 | |
| 4,8,12 | கேது குரு சந் சூரி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சனி | 09-04-1981-09-04-2000 | கே | கே | 09-04-2017-05-09-2017 |
| புத | 09-04-2000-09-04-2017 | கே | சுக் | 05-09-2017-05-11-2018 |
| கே | 09-04-2017-09-04-2024 | கே | சூரி | 05-11-2018-13-03-2019 |
| சுக் | 09-04-2024-09-04-2044 | கே | சந் | 13-03-2019-12-10-2019 |
| சூரி | 09-04-2044-09-04-2050 | கே | செ | 12-10-2019-09-03-2020 |
| சந் | 09-04-2050-09-04-2060 | கே | ராகு | 09-03-2020-28-03-2021 |
| செ | 09-04-2060-10-04-2067 | கே | குரு | 28-03-2021-04-03-2022 |
| ராகு | 10-04-2067-09-04-2085 | கே | சனி | 04-03-2022-13-04-2023 |
| குரு | 09-04-2085-10-04-2101 | கே | புத | 13-04-2023-09-04-2024 |

இந்தச் சாதகருக்கு 2019 ஆம் ஆண்டு தை மாதம் திருமணத்திற்கு நாள் குறித்து உள்ளார்கள். திருமணத்தில் சில கருத்து வேறுபாடு மற்றும் குழப்பங்கள் நிலவி உள்ளது. இதனால் திருமணத்திற்குப் பத்திரிகை அடித்த பின்னர் திருமணம் நடைபெறாமல் நின்று போயுள்ளது.

ஆய்வு விதிப்படி 6 மற்றும் 12 ஆம் பாவகங்கள் திருமணத்திற்கு எதிரானது, இதனுடன் 8 ஆம் பாவகப் புத்தியிலும் திருமணம் செய்யக் கூடாது. காரணம் இலக்கினத்திற்கு 8 என்பது சாதகருக்கு ஏமாற்றத்தைக் கொடுக்கக் கூடிய இடம் ஆகும். அதனால் 6 மற்றும் 12 பாவகத்ததுடன் 8 ஆம் பாவகப் புத்தியிலும் திருமணம் செய்யக் கூடாது.

அதன்படி இவருக்குத் திருமணம் செய்வதாக இருந்த காலத்தில் இவருக்கு கேது தசாவில் (4) சூரிய புத்தி (8) நடைபெற்றுக்கொண்டு இருந்தது என்பது குறிப்படத்தக்கது ஆகும்.

159. சாதகர் : துரை ராஜ் (98940 38666) பிறந்த நாள் : 08.05.1956

பிறந்த நேரம் : காலை 07.20 பிறந்த ஊர் : கோவை

| | 30 | 27 | 32 | 22 | |
|---|---|---|---|---|---|
| | சந் | சூரி | லக் புத கேது | சுக் | |
| 36 | | இராசி | | குரு | 28 |
| 32 | செவ் | ரேவதி-2 | | | 26 |
| | | ராகு சனி | | | |
| | 20 | 26 | 31 | 27 | |

| | 11 | 12 | 1 | 2 | |
|---|---|---|---|---|---|
| | சந் | சூரி | லக் புத கேது | சுக் | |
| 10 | | ஸ்ரீபதி பாவகம் | | | 3 |
| 9 | செவ் | | | குரு | 4 |
| | | சனி ராகு | | | |
| | 8 | 7 | 6 | 5 | |

Durai Raj
08-05-1956 07:20:00
Coimbatore, T.N.
புத திசை இருப்பு 10-வருடம் 00-மாதம் 13-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | புத கேது செவ் |
| 2,6,10 | சுக் |
| 3,7,11 | சனி ராகு சந் |
| 4,8,12 | குரு சூரி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| புத | 22-05-1949-22-05-1966 | ராகு ராகு | 21-05-2016-02-02-2019 |
| கே | 22-05-1966-22-05-1973 | ராகு குரு | 02-02-2019-27-06-2021 |
| சுக் | 22-05-1973-22-05-1993 | ராகு சனி | 27-06-2021-03-05-2024 |
| சூரி | 22-05-1993-22-05-1999 | ராகு புத | 03-05-2024-20-11-2026 |
| சந் | 22-05-1999-22-05-2009 | ராகு கே | 20-11-2026-09-12-2027 |
| செ | 22-05-2009-21-05-2016 | ராகு சுக் | 09-12-2027-09-12-2030 |
| ராகு | 21-05-2016-22-05-2034 | ராகு சூரி | 09-12-2030-02-11-2031 |
| குரு | 22-05-2034-22-05-2050 | ராகு சந் | 02-11-2031-03-05-2033 |
| சனி | 22-05-2050-22-05-2069 | ராகு செ | 03-05-2033-22-05-2034 |

இந்தச் சாதகருக்கு நடப்பு 02.02.2019 முதல் 27.06.2021 வரை இராகு தசாவில் (7) குரு புத்தி (4) ஆகும். இந்தக் காலக் கட்டத்தில் இவருக்கு எதிர்பாராத வகையில் ஓர் இடத்தில் இருந்து பணம் வந்துள்ளது. மேலும் இதே காலக்கட்டத்தில் 75 இலட்சம் ரூபாய்க்குத் தனது மகன் பெயரில் ஒரு நிலமும் வாங்கிப் போட்டுள்ளார்.

ஆய்வு விதிப்படி புத்தியை நடத்தும் கோள் 4 இல் இருக்கும்போது, 4, 8, 12 ஆம் பாவகங்கள் 100 விழுக்காடு இயங்கும். அதன்படி இவருக்குப் புத்தியை நடத்தும் கோள் 4 இல் இருந்தபோதும், 8 ஆம் பாவகக் காரகமான எதிர்பாராத தனவருவாய் கிடைத்து, அதன்மூலம் நிலம் (4) வாங்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

அடுத்து இவருக்குப் புத்தியை நடத்தும் கோள் 4 இல் இருப்பதால் சோதிடத் தொழில் (5) மிகவும் மந்தமடைந்து விட்டது.

160. சாதகர் : முத்து சரவணன் (86081 01111) பிறந்த நாள் : 29.01.1972

பிறந்த நேரம் : காலை 08.26 பிறந்த ஊர்: திருச்சி.

| | 29 | 29 | 27 | 25 | |
|---|---|---|---|---|---|
| | செவ் | | சனி | சந் | |
| 20 | சுக் லக் | இராசி | | கேது | 29 |
| 24 | சூரி ராகு புத | புனர்பூசம்-3 | | | 24 |
| | குரு | | | | |
| | 32 | 39 | 32 | 27 | |

| | 2 | 3 | 4 | 5 | |
|---|---|---|---|---|---|
| | செவ் | | சனி | சந் | |
| 1 | லக் சுக் | ஸ்ரீபதி பாவகம் | | கேது | 6 |
| 12 | புத ராகு சூரி | | | | 7 |
| | குரு | | | | |
| | 11 | 10 | 9 | 8 | |

Muthu Saravanan
29-01-1972 08:26:00
Tiruchchirappalli,T.N.
குரு திசை இருப்பு 05-வருடம் 09-மாதம் 08-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1, 5, 9 | சுக் சந் |
| 2, 6, 10 | செவ் கேது |
| 3, 7, 11 | குரு |
| 4, 8, 12 | சனி புத ராகு சூரி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| குரு | 07-11-1961-07-11-1977 | கே | கே | 07-11-2013-05-04-2014 |
| சனி | 07-11-1977-07-11-1996 | கே | சுக் | 05-04-2014-05-06-2015 |
| புத | 07-11-1996-07-11-2013 | கே | சூரி | 05-06-2015-11-10-2015 |
| கே | 07-11-2013-07-11-2020 | கே | சந் | 11-10-2015-11-05-2016 |
| சுக் | 07-11-2020-07-11-2040 | கே | செ | 11-05-2016-07-10-2016 |
| சூரி | 07-11-2040-07-11-2046 | கே | ராகு | 07-10-2016-26-10-2017 |
| சந் | 07-11-2046-07-11-2056 | கே | குரு | 26-10-2017-02-10-2018 |
| செ | 07-11-2056-07-11-2063 | கே | சனி | 02-10-2018-10-11-2019 |
| ராகு | 07-11-2063-07-11-2081 | கே | புத | 10-11-2019-07-11-2020 |

இந்தச் சாதகருக்கு 12 ஆம் பாவகத்தில் 3 கோள்கள் உள்ளன. மேலும் சமீபத்தில் கேது தசாவில் (6) சனி புத்தியும் (4), தற்சமயம் புதன் புத்தியும் (12) தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

இவர் பல கோவில் கும்பாபிஷேக நிகழ்ச்சிகளைத் தொடந்து ஏற்பாடு செய்து வருகிறார். அதற்காக வெளிநாடுகளில் இருந்து அதிக அளவிலான பணம் இவரிடம் சேர்ந்து வருகிறது. மேலும் பல வெளிநாட்டவர்களுக்குப் இரவல் பெயரில் (Benami) நடவடிக்கையில் ஈடுபட்டு வருகிறார். அவர்களுக்காக இவர் பெயரில் சொத்துக்கள் வாங்கிப் போட்டு வருகிறார் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

ஆய்வு விதிப்படி 8 மற்றும் 12 பாவகம் மறைமுகப் பணத்தைக் குறிக்கும். அதன்படி இவர் பலருக்கு மறைமுகமாகச் செயல்படுகிறார். மேலும் இவரிடம் சில அமானுஷ சக்திகள் இருப்பதாவும் கூறுகிறார். 8 மற்றும் 12 ஆம் பாவகங்கள் அமானுஷ சக்திகளைக் குறிக்கும் பாவகங்கள் ஆகும்.

161. சாதகர் : வெங்கடேஷ் (96633 08202) பிறந்த நாள் : 14.07.1984

பிறந்த நேரம் : பகல் 11.18 பிறந்த ஊர்: திருச்சி.

| | 28 | 29 | 31 | 30 | |
|---|---|---|---|---|---|
| | | | ராகு | சூரி | |
| 25 | | இராசி | | சுக் புத | 31 |
| 21 | சந் | திருவோணம்-1 | | | 25 |
| | குரு | கேது | செவ் சனி | லக் | |
| | 29 | 36 | 27 | 25 | |

| | 7 | 8 | 9 | 10 | |
|---|---|---|---|---|---|
| | | | ராகு | சூரி | |
| 6 | | ஸ்ரீபதி பாவகம் | | சுக் புத | 11 |
| 5 | சந் | | | | 12 |
| | குரு | கேது | சனி செவ் | லக் | |
| | 4 | 3 | 2 | 1 | |

Venakatesh
14-07-1984 11:18:00
Tiruchchirappalli,T.N.
சந் திசை இருப்பு 08-வருடம் 09-மாதம் 12-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சந் ராகு |
| 2,6,10 | சனி செவ் சூரி |
| 3,7,11 | கேது சுக் புத |
| 4,8,12 | குரு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சந் | 27-04-1983-27-04-1993 | குரு | குரு | 27-04-2018-14-06-2020 |
| செ | 27-04-1993-27-04-2000 | குரு | சனி | 14-06-2020-27-12-2022 |
| ராகு | 27-04-2000-27-04-2018 | குரு | புத | 27-12-2022-03-04-2025 |
| குரு | 27-04-2018-27-04-2034 | குரு | கே | 03-04-2025-09-03-2026 |
| சனி | 27-04-2034-27-04-2053 | குரு | சுக் | 09-03-2026-07-11-2028 |
| புத | 27-04-2053-27-04-2070 | குரு | சூரி | 07-11-2028-27-08-2029 |
| கே | 27-04-2070-27-04-2077 | குரு | சந் | 27-08-2029-27-12-2030 |
| சுக் | 27-04-2077-27-04-2097 | குரு | செ | 27-12-2030-03-12-2031 |
| சூரி | 27-04-2097-28-04-2103 | குரு | ராகு | 03-12-2031-27-04-2034 |

இந்தச் சாதகர் செவ்வாய் தசா முடிவடையும் வரை துபாய் நாட்டில் நல்ல சம்பளத்தில் வேலை செய்து வந்தார். கிட்டதட்ட 50 இலட்சம் வரை அங்குக் கடன் வாங்கித் திருச்சியில் ஒரு சொத்தும் வாங்கி வைத்திருந்தார்.

இந்நிலையில் இவருக்கு குரு தசா (4) சுய புத்தி துவங்கியது. துவங்கிய சில நாட்களில் சொல்லும் அளவு எந்தப் பெரிய காரணமும் இல்லாத நிலையில் அங்கே உள்ள கடனையும் அடைக்காமல் தாயகம் திரும்பி, பெங்களுூரில் வெளிநாட்டில் வாங்கிய சம்பளத்தைவிடக் குறைவான சம்பளத்தில் வேலை செய்து வருகிறார்.

ஆய்வு விதிப்படி 4 மற்றும் 8 ஆம் பாவகப் புத்தியில் வெளிநாட்டில் இருக்க முடியாது என்பதற்கு நல்ல உதாரண சாதகம் ஆகும். மேலும் இயற்கையாக குழந்தை கிடைக்காத நிலையில் செயற்கை குழந்தைக்கு ஏற்பாடு செய்து குழந்தையும் கிடைத்துள்ளது.

162. சாதகர் : முத்துவேல் (94432 89632) பிறந்த நாள் : 08.06.1962

பிறந்த நேரம் : பகல் 11.01 பிறந்த ஊர்: அம்பாசமுத்திரம்.

| | 28 | 24 | 29 | 29 | |
|---|---|---|---|---|---|
| | | செவ் | புத சூரி | சுக் | |
| 28 | குரு | | | ராகு | 24 |
| 35 | கேது சனி | இராசி மகம்-1 | | சந் லக் | 24 |
| | | | | | |
| | 25 | 30 | 33 | 28 | |

| | 8 | 9 | 10 | 11 | |
|---|---|---|---|---|---|
| | குரு | செவ் | | புத சூரி | |
| 7 | கேது | | | சுக் | 12 |
| 6 | சனி | ஸ்ரீபதி பாவகம் | | லக் ராகு சந் | 1 |
| | | | | | |
| | 5 | 4 | 3 | 2 | |

Muthoovel
08-06-1962 11:01:00
Ambasamudram, T.N.
கேது திசை இருப்பு 06-வருடம் 03-மாதம் 21-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | ராகு சந் செவ் |
| 2,6,10 | சனி |
| 3,7,11 | கேது புத சூரி |
| 4,8,12 | குரு சுக் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| கே | 29-09-1961-28-09-1968 | ராகு ராகு | 29-09-2011-11-06-2014 |
| சுக் | 28-09-1968-28-09-1988 | ராகு குரு | 11-06-2014-04-11-2016 |
| சூரி | 28-09-1988-29-09-1994 | ராகு சனி | 04-11-2016-11-09-2019 |
| சந் | 29-09-1994-28-09-2004 | ராகு புத | 11-09-2019-30-03-2022 |
| செ | 28-09-2004-29-09-2011 | ராகு கே | 30-03-2022-18-04-2023 |
| ராகு | 29-09-2011-29-09-2029 | ராகு சுக் | 18-04-2023-18-04-2026 |
| குரு | 29-09-2029-29-09-2045 | ராகு சூரி | 18-04-2026-12-03-2027 |
| சனி | 29-09-2045-28-09-2064 | ராகு சந் | 12-03-2027-10-09-2028 |
| புத | 28-09-2064-29-09-2081 | ராகு செ | 10-09-2028-29-09-2029 |

இந்தச் சாதகருக்கு இராகு தசாவில் (1) குரு புத்தி (8) நடைபெற்று வந்த சமயம் நெய்வேலி பழுப்பு நிலக்கரி கார்ப்பரேஷனில் சிறப்புத் தகுதி கம்பியில்லா உயர் இயக்குநர் பதவியில் இருந்தார். அது சமயம் இவர்களது கம்பியில்லா உயர் இயக்குநர் படிப்புச் சான்றிதழ் பல்கலைக்கழக மானியக்குழு அங்கீகாரம் இல்லை ஆண் செவிலியர் உதவியாளராகப் பதவி குறைக்கப்பட்டுப் பணியமர்த்தப்பட்டார். அப்போது கிட்டதட்ட வேலை பறிபோகும் நிலையில் இருந்தது.

ஆய்வு விதிப்படி புத்தியை நடத்தும் கோள் 8 மற்றும் 12 ஆம் பாவகங்கிளில் இருக்கும் காலத்தில் அதிகப் பணிச்சுமை, சம்பளம் கிடைக்காத நிலை, பதவி குறைக்கப்படலாம் நீக்குதல் கூட ஆகலாம். ஆனால் செய்துவரும் வேலை பறி போகாது. அதன்படி இவர்களுக்கு வேலைப் பறிபோகவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அதன்பின் சனி புத்தியில் (6) நீதிமன்றத் தீர்ப்பு இவர்களுக்குச் சாதமாக அமையவே மீண்டும் பழைய பதவியை அடைய முடிந்தது.

163. சாதகர் : கௌசிக் (95662 71710) பிறந்த நாள் : 24.08.1989

பிறந்த நேரம் : மாலை 04.39 பிறந்த ஊர் : சென்னை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 32 | 29 | 31 | 36 | |
| | | | சந் | குரு | |
| 30 | ராகு | இராசி | | | 28 |
| 29 | லக் | ரோகிணி-2 | | கேது சூரி செவ் | 22 |
| | சனி | | | புத சுக் | |
| | 18 | 29 | 30 | 23 | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | 3 | 4 | 5 | 6 | |
| | | | சந் | குரு | |
| 2 | ராகு | ஸ்ரீபதி பாவகம் | | | 7 |
| 1 | லக் | | | கேது சூரி செவ் | 8 |
| | சனி | | | புத சுக் | |
| | 12 | 11 | 10 | 9 | |

KAUSHIK
24-08-1989 16:39:00
Chennai, T.N.
சந் திசை இருப்பு 05-வருடம் 02-மாதம் 07-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சந் புத சுக் |
| 2,6,10 | ராகு குரு |
| 3,7,11 | |
| 4,8,12 | கேது சூரி செவ் சனி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| சந் | 31-10-1984-01-11-1994 | ராகு ராகு | 01-11-2001-14-07-2004 |
| செ | 01-11-1994-01-11-2001 | ராகு குரு | 14-07-2004-07-12-2006 |
| ராகு | 01-11-2001-01-11-2019 | ராகு சனி | 07-12-2006-13-10-2009 |
| குரு | 01-11-2019-01-11-2035 | ராகு புத | 13-10-2009-02-05-2012 |
| சனி | 01-11-2035-01-11-2054 | ராகு கே | 02-05-2012-20-05-2013 |
| புத | 01-11-2054-01-11-2071 | ராகு சுக் | 20-05-2013-20-05-2016 |
| கே | 01-11-2071-01-11-2078 | ராகு சூரி | 20-05-2016-14-04-2017 |
| சுக் | 01-11-2078-01-11-2098 | ராகு சந் | 14-04-2017-14-10-2018 |
| சூரி | 01-11-2098-01-11-2104 | ராகு செ | 14-10-2018-01-11-2019 |

இந்தச் சாதகர் 2012 ஆம் பி.இ., படித்து முடித்து இருக்கிறார். அதன்பின் இன்று வரை நிரந்தரமாக எந்த ஒரு வேலையும் அமையாமல் இருந்து வருகிறார். இவரின் சாதகப்படி 6 ஆம் அதிபதி புதன் 9 இல் உள்ளார். அதனால் அடிமை வேலையில் நாட்டம் இருக்காது.

அதற்கேற்ப 2012 ஆம் ஆண்டு இவருக்கு இராகு தசா (2) கேது புத்தி (8) நடைபெற்றது. அதன்பின் வந்த புத்திகள் சுக்கிரன் (9), சூரியன் (8), சந்திரன் (5), செவ்வாய் (8) ஆகும்.

ஆய்வு விதிப்படி 1, 5, 9 மற்றும் 8, 12 ஆம் பாவகப் புத்திகளில் புதிய வேலை திருப்திகரமாக நிரந்தரமாக அமையாது என்பதற்கேற்ப இவருக்கு இன்னும் புதுவேலை அமையாமல் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது ஆகும். மேலும் இவருக்கு 8 இல் 3 கோள்கள் உள்ளதால் கௌரவமான வேலை கிடைப்பது அரிதாகவும் உள்ளது.

164. சாதகர் : நாகராஜன் (98436 48985) பிறந்த நாள் : 05.03.1962

பிறந்த நேரம் : காலை 08.40 பிறந்த ஊர் : சிவகங்கை

| | 29 | 24 | 29 | 28 | |
|---|---|---|---|---|---|
| | லக் | | | | |
| 17 | சுக் சூரி சந் குரு செவ் | இராசி | | ராகு | 25 |
| 25 | புத கேது சனி | அவிட்டம்-3 | | | 26 |
| | | | | | |
| | 44 | 36 | 26 | 28 | |

| | 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|---|
| | லக் | | | | |
| 12 | சூரி சுக் | ஸ்ரீபதி பாவகம் | | ராகு | 5 |
| 11 | சனி கேது புத செவ் குரு சந் | | | | 6 |
| | | | | | |
| | 10 | 9 | 8 | 7 | |

NAGARAJAN.Y
05-03-1962 08:40:00
Sivaganga,T.N.
செவ் திசை இருப்பு 02-வருடம் 04-மாதம் 06-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | ராகு |
| 2,6,10 | |
| 3,7,11 | சனி கேது புத செவ் குரு சந் |
| 4,8,12 | சூரி சுக் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| செ | 11-07-1957-11-07-1964 | புத | புத | 11-07-2017-08-12-2019 |
| ராகு | 11-07-1964-11-07-1982 | புத | கே | 08-12-2019-04-12-2020 |
| குரு | 11-07-1982-11-07-1998 | புத | சுக் | 04-12-2020-05-10-2023 |
| சனி | 11-07-1998-11-07-2017 | புத | சூரி | 05-10-2023-10-08-2024 |
| புத | 11-07-2017-11-07-2034 | புத | சந் | 10-08-2024-10-01-2026 |
| கே | 11-07-2034-11-07-2041 | புத | செ | 10-01-2026-07-01-2027 |
| சுக் | 11-07-2041-11-07-2061 | புத | ராகு | 07-01-2027-26-07-2029 |
| சூரி | 11-07-2061-12-07-2067 | புத | குரு | 26-07-2029-01-11-2031 |
| சந் | 12-07-2067-11-07-2077 | புத | சனி | 01-11-2031-11-07-2034 |

இந்தச் சாதகரின் 5 ஆம் பாவகக் கொடுப்பினை 0 விழுக்காடு ஆகும். இவை 12 ஆம் பாவகப் புத்தயில் கடுமையாகப் பிரதிபலித்து உள்ளது. இராசிக் கட்டப்படி 5 இல் இராகு, 5 ஆம் அதிபதி சந்திரன் 12 இல், 5 ஆம் பாவகக் காரகக் கோள் குரு 12 இல், 5 ஆம் பாவக சர்வாஷ்டக வர்க்கம் 25 மட்டுமே. ஆக 100 விழுக்காடு 5 ஆம் பாவகம் பாதிக்கப்பட்டுள்ளது.

இவருக்கு 1991 ஆம் ஆண்டு திருமணம் நடைபெற்று உள்ளது. அப்போது இவருக்கு குரு தசாவில் (11) சுக்கிர புத்தி (12) ஆகும். இக்காலகட்டத்தில் இவரின் மனைவக்கு மூன்றுமுறை கருச்சிதைவு ஏற்பட்டுள்ளது. சுக்ர புத்திக்கு பின் வந்த சூரிய (12) புத்தியிலும் குழந்தை பிறந்து அதன்பின் இறந்துள்ளது. குரு தசா இராகு புத்தியில் ஓர் ஆண் குழந்தை பிறந்து இன்றுவரை நலமுடன் இருக்கிறார். விதி கெட்டு, மதி கொடுத்துள்ளது. ஒற்றைப்படையில் உள்ள 7 கோள்கள் இவருக்குக் குழந்தையைக் கொடுத்துள்ளது.

165. சாதகர் : கணேஷ் (63740 90897) பிறந்த நாள் : 10.07.1987

பிறந்த நேரம் : காலை 08.45 பிறந்த ஊர் : தஞ்சை.

| | 29 | 35 | 30 | 24 | |
|---|---|---|---|---|---|
| | ராகு | குரு | | சுக் புத சூரி | |
| 33 | | இராசி | | செவ் | 20 |
| 31 | | மூலம்-3 | | லக் | 30 |
| | சந் | சனி | | கேது | |
| | 18 | 29 | 31 | 27 | |

| | 8 | 9 | 10 | 11 | |
|---|---|---|---|---|---|
| | ராகு | குரு | | சுக் புத | |
| 7 | | ஸ்ரீபதி பாவகம் | | சூரி செவ் | 12 |
| 6 | | | | லக் | 1 |
| | சனி சந் | | | கேது | |
| | 5 | 4 | 3 | 2 | |

S.GANESH D.E.
10-07-1987 08:45:00
Thanjavur,T.N.
கேது திசை இருப்பு 02-வருடம் 02-மாதம் 06-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சனி சந் குரு |
| 2,6,10 | கேது |
| 3,7,11 | சுக் புத |
| 4,8,12 | ராகு சூரி செவ் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| கேது | 15-09-1982-15-09-1989 | சந் | சந் | 16-09-2015-16-07-2016 |
| சுக் | 15-09-1989-15-09-2009 | சந் | செவ் | 16-07-2016-14-02-2017 |
| சூரி | 15-09-2009-16-09-2015 | சந் | ராகு | 14-02-2017-16-08-2018 |
| சந் | 16-09-2015-15-09-2025 | சந் | குரு | 16-08-2018-16-12-2019 |
| செவ் | 15-09-2025-15-09-2032 | சந் | சனி | 16-12-2019-16-07-2021 |
| ராகு | 15-09-2032-15-09-2050 | சந் | புத | 16-07-2021-16-12-2022 |
| குரு | 15-09-2050-15-09-2066 | சந் | கேது | 16-12-2022-17-07-2023 |
| சனி | 15-09-2066-15-09-2085 | சந் | சுக் | 17-07-2023-17-03-2025 |
| புத | 15-09-2085-16-09-2102 | சந் | சூரி | 17-03-2025-15-09-2025 |

இந்தச் சாதகர் 2017 ஆம் ஆண்டு வரை கொரியாவில் வேலை செய்து வந்துள்ளார். அப்போது அங்கு காவல் துறையிடம் சிக்கி, சிறைச்சாலையில் இருந்துள்ளார். அதன்பின் அங்கிருந்து தனது பொருள் எதையும் எடுக்க விடாமல் சிறைசாலையில் இருந்து அப்படியே விமானத்தில் ஏற்றி அனுப்பி வைத்துள்ளனர்.

ஆய்வு விதிப்படி 4 மற்றும் 8 ஆம் பாவகப் புத்திகளில் வெளிநாடு செல்ல முடியாது. அப்படியே சென்றாலும் அங்குத் தொடர்ந்து இருக்க முடியாது. அதன் படி 2017 ஆம் ஆண்டு இவருக்குச் சந்திர தசாவில் (5) இராகு புத்தி (8) நடைபெற்றுகொண்டிருந்தது.

இராகு 8 இல் இருந்த காரணத்தினால் கைதி, சிறைச்சாலை என்று அவமானப்பட்டுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும். வெளிநாட்டில் சட்ட விரோதமாக இருக்கக் கூடியவர்கள் 4, 8 ஆம் பாவகப் புத்திகளில் சிக்குவர்.

189. சாதகர் : முருகன் (98655 81166) பிறந்த நாள் : 20.06.1989

பிறந்த நேரம் : அதிகாலை 05.40 பிறந்த ஊர் : மேட்டூர்.

| | 38 | 39 | 26 | 19 | |
|---|---|---|---|---|---|
| | | | புத குரு | லக் சூரி சுக் | |
| 31 | ராகு | இராசி | | செவ் | 25 |
| 26 | | பூராடம்-1 | | கேது | 26 |
| | சனி சந் | | | | |
| | 21 | 21 | 35 | 30 | |

| | 10 | 11 | 12 | 1 | |
|---|---|---|---|---|---|
| | | | புத | லக் குரு சூரி | |
| 9 | ராகு | ஸ்ரீபதி பாவகம் | | சுக் செவ் | 2 |
| 8 | சனி | | | கேது | 3 |
| | சந் | | | | |
| | 7 | 6 | 5 | 4 | |

MURUGAN
20-06-1989 05:40:00
Mettur,T.N.
சுக் திசை இருப்பு 19-வருடம் 06-மாதம் 18-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | குரு சூரி ராகு |
| 2,6,10 | சுக் செவ் |
| 3,7,11 | கேது சந் |
| 4,8,12 | சனி புத |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சுக் | 07-01-1989-07-01-2009 | சந் | சந் | 07-01-2015-07-11-2015 |
| சூரி | 07-01-2009-07-01-2015 | சந் | செ | 07-11-2015-07-06-2016 |
| சந் | 07-01-2015-07-01-2025 | சந் | ராகு | 07-06-2016-07-12-2017 |
| செ | 07-01-2025-07-01-2032 | சந் | குரு | 07-12-2017-08-04-2019 |
| ராகு | 07-01-2032-07-01-2050 | சந் | சனி | 08-04-2019-07-11-2020 |
| குரு | 07-01-2050-07-01-2066 | சந் | புத | 07-11-2020-08-04-2022 |
| சனி | 07-01-2066-07-01-2085 | சந் | கே | 08-04-2022-07-11-2022 |
| புத | 07-01-2085-08-01-2102 | சந் | சுக் | 07-11-2022-08-07-2024 |
| கே | 08-01-2102-08-01-2109 | சந் | சூரி | 08-07-2024-07-01-2025 |

இந்தச் சாதகர் தனது நன்பருடன் இணைந்து TATA ACE வாகனங்கள் வைத்துப் போக்குவரத்து தொழில் செய்து வந்தார். இந்நிலையில் இவருக்கு நடப்பு சந்திர (7) தசா (7) சனி புத்தி (8) துவங்கியது. இந்தப் புத்தியில் தொழிலை இவரால் தொடர்ந்து நடத்திட முடியாமல் நஷ்டம் ஏற்பட்டுள்ளது. இதனைச் சரி செய்ய இயலாமல் போகவே தனது வாகனங்களைப் பெரும் நஷ்டத்திற்கு விற்க வேண்டியது இருந்தது.

ஆய்வு விதிப்படி சுயமாகத் தொழில் செய்யக் கூடியவர்கள் புத்தியை நடத்தும் கோள் 8 இல் இருக்கும்போது கவனமாக இருக்க வேண்டும், இக்காலக்கட்டத்தில் தவறான முடிவுகள்மூலம் தொழில் நஷ்டம் பிற மனிதர்களால் ஏமாற்றம் போன்றவை ஏற்படும். புத்தியை நடத்தும் கோள் 12 இல் இருக்கும்போது தொழிலில் முதலீடு செய்த பணத்திற்கான வருவாயைப் பெற இயலாது பணம் முடங்கும் அபாயம் உண்டு.

190. சாதகர் : ஜீவன் (98655 81166) பிறந்த நாள் : 14.07.2003

பிறந்த நேரம் : மதியம் 03.10 பிறந்த ஊர் : பெங்களூர்

| | 31 | 39 | 27 | 25 | |
|---|---|---|---|---|---|
| | | | ராகு | சனி சுக் சூரி | |
| 29 | செவ் | இராசி | | புத குரு | 20 |
| 24 | சந் | உத்ராடம்-3 | | | 24 |
| | | லக் கேது | | | |
| | 30 | 37 | 22 | 29 | |

| | 5 | 6 | 7 | 8 | |
|---|---|---|---|---|---|
| | | | ராகு | சனி சுக் | |
| 4 | செவ் | ஸ்ரீபதி பாவகம் | | சூரி புத | 9 |
| 3 | சந் | | | குரு | 10 |
| | | லக் கேது | | | |
| | 2 | 1 | 12 | 11 | |

JEEVAN
14-07-2003 15:10:00
Bangalore, Kar.
சூரி திசை இருப்பு 02-வருடம் 00-மாதம் 06-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | கேது சூரி புத |
| 2,6,10 | குரு |
| 3,7,11 | சந் ராகு |
| 4,8,12 | செவ் சனி சுக் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சூரி | 21-07-1999-20-07-2005 | செ | செ | 21-07-2015-17-12-2015 |
| சந் | 20-07-2005-21-07-2015 | செ | ராகு | 17-12-2015-03-01-2017 |
| செ | 21-07-2015-20-07-2022 | செ | குரு | 03-01-2017-10-12-2017 |
| ராகு | 20-07-2022-20-07-2040 | செ | சனி | 10-12-2017-19-01-2019 |
| குரு | 20-07-2040-20-07-2056 | செ | புத | 19-01-2019-16-01-2020 |
| சனி | 20-07-2056-21-07-2075 | செ | கே | 16-01-2020-13-06-2020 |
| புத | 21-07-2075-20-07-2092 | செ | சுக் | 13-06-2020-13-08-2021 |
| கே | 20-07-2092-21-07-2099 | செ | சூரி | 13-08-2021-19-12-2021 |
| சுக் | 21-07-2099-22-07-2119 | செ | சந் | 19-12-2021-20-07-2022 |

இந்தப் பையன் 10 ஆம் வகுப்பு படித்துக்கொண்டு இருக்கும்போது தனது தந்தையின் தொழிற்சாலையில் சின்னச் சின்ன உதவிகள் செய்திடச் செல்வது வழக்கம்.

2018 ஆம் ஆண்டு விடுமுறை காலத்தில் தொழிற்சாலை சென்றிருந்த போது எதிர்பாராத விதமாகப் பெரிய இரும்பு கையில் விழுந்து வலது கையில் நான்குவிரல்கள் துண்டாகி விட்டது. மருத்துவமனைக்குக் கொண்டு சென்று எவ்வளவோ முயற்சி செய்தும் விரல்களைக் கையுடன் ஒன்று சேர்க்க முடியவில்லை. அப்போது இவருக்குச் செவ்வாய் (4) தசாவில் (4) சனி புத்தி (8) என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

சிறுவர்கள் ஆனாலும் புத்தியை நடத்தும் கோள் 8 அல்லது 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது கவனமாக இருக்க வேண்டும். 8, 12 ஆம் பாவகங்கள் எப்போதும் ஆபத்து நிறைந்தது ஆகும்.

191. சாதகர் : சதீஸ் (98655 81166) பிறந்த நாள் : 25.07.1984

பிறந்த நேரம் : மதியம் 01.05 பிறந்த ஊர் : மேட்டூர்.

| | 30 | 25 | 34 | 27 | |
|---|---|---|---|---|---|
| | | | ராகு சந் | | |
| 22 | | இராசி | | சூரி சுக் | 33 |
| 28 | | மிருகசீருஷம்-2 | | புத | 33 |
| | குரு | கேது | செவ் லக் சனி | | |
| | 29 | 24 | 35 | 17 | |

| | 6 | 7 | 8 | 9 | |
|---|---|---|---|---|---|
| | | | ராகு சந் | | |
| 5 | | ஸ்ரீபதி பாவகம் | | சூரி சுக் | 10 |
| 4 | | | | புத | 11 |
| | குரு | கேது | லக் சனி செவ் | | |
| | 3 | 2 | 1 | 12 | |

SATHISH
25-07-1984 13:05:00
Mettur,T.N.
செவ் திசை இருப்பு 04-வருடம் 11-மாதம் 11-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சனி செவ் |
| 2,6,10 | கேது சூரி சுக் |
| 3,7,11 | குரு புத |
| 4,8,12 | ராகு சந் |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| செ | 07-07-1982-07-07-1989 | குரு | குரு | 07-07-2007-24-08-2009 |
| ராகு | 07-07-1989-07-07-2007 | குரு | சனி | 24-08-2009-07-03-2012 |
| குரு | 07-07-2007-07-07-2023 | குரு | புத | 07-03-2012-13-06-2014 |
| சனி | 07-07-2023-07-07-2042 | குரு | கே | 13-06-2014-19-05-2015 |
| புத | 07-07-2042-07-07-2059 | குரு | சுக் | 19-05-2015-17-01-2018 |
| கே | 07-07-2059-07-07-2066 | குரு | சூரி | 17-01-2018-06-11-2018 |
| சுக் | 07-07-2066-07-07-2086 | குரு | சந் | 06-11-2018-07-03-2020 |
| சூரி | 07-07-2086-06-07-2092 | குரு | செ | 07-03-2020-11-02-2021 |
| சந் | 06-07-2092-08-07-2102 | குரு | ராகு | 11-02-2021-07-07-2023 |

இந்தச் சாதகர் சாயப் பட்டறை தொழில் சுயமாகச் செய்து வருகிறார். இவருக்குக் குரு தசா (3) சந்திர புத்தி (8) 06.11.2018 அன்று முதல் நடந்து வருகிறது. சந்திர புத்தி துவங்கிய நாள் முதல் வேலை செய்யும் இடத்தில் உள்ள கெமிக்கல் காரணமாக நுரையீரலில் சில பாதிப்புகளைக் கொடுத்தது. இதன் காரணமாக இவரால் தொடர்ந்து தனது தொழிற்சாலைக்குப் போக முடியவில்லை. அங்குப் பணிபுரியும் தொழிலாளர்களிடம் பொறுப்புக்களை ஒப்படைத்து இருக்கிறார். இவர் இல்லாத இடத்தில் தொழிலாளர்களால் சரியாக நிர்வாகம் செய்ய முடியவில்லை. தொழிலில் அதிகக் கடனும் ஆகிவிட்டது. இப்போது இவரது தொழிற்சாலையைத் தொடர்ந்து நடத்திட முடியாமல் அதனை மூடும் சூழ்நிலையில் இருந்து வருகிறார்கள்.

இவரது 8 ஆம் பாவகப் புத்தி உடல் நிலையையும் பாதித்து, தொழில் நஷ்டத்தையும் உண்டு பண்ணி உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

192. சாதகர் : தினேஷ் குமார் (98655 81166) பிறந்த நாள் : 02.08.1991

பிறந்த நேரம் : அதிகாலை 02.50 பிறந்த ஊர் : சேலம்

| | 26 | 36 | 38 | 36 | |
|---|---|---|---|---|---|
| | சந் | | | லக் கேது | |
| 21 | | இராசி | | சூரி குரு | 21 |
| 31 | சனி | ரேவதி-3 | | புத சுக் செவ் | 27 |
| | ராகு | | | | |
| | 25 | 28 | 24 | 24 | |

| | 10 | 11 | 12 | 1 | |
|---|---|---|---|---|---|
| | | சந் | | லக் | |
| 9 | | ஸ்ரீபதி பாவகம் | | கேது | 2 |
| 8 | ராகு சனி | | | சூரி குரு | 3 |
| | | | | புத சுக் செவ் | |
| | 7 | 6 | 5 | 4 | |

DINESH KUMAR
02-08-1991 02:50:00
Salem,T.N.
புத திசை இருப்பு 05-வருடம் 06-மாதம் 18-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | |
| 2,6,10 | கேது |
| 3,7,11 | சூரி குரு சந் |
| 4,8,12 | புத சுக் செவ் ராகு சனி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| புத | 19-02-1980-18-02-1997 | சுக் | சுக் | 19-02-2004-21-06-2007 |
| கே | 18-02-1997-19-02-2004 | சுக் | சூரி | 21-06-2007-20-06-2008 |
| சுக் | 19-02-2004-19-02-2024 | சுக் | சந் | 20-06-2008-19-02-2010 |
| சூரி | 19-02-2024-19-02-2030 | சுக் | செ | 19-02-2010-21-04-2011 |
| சந் | 19-02-2030-19-02-2040 | சுக் | ராகு | 21-04-2011-20-04-2014 |
| செ | 19-02-2040-19-02-2047 | சுக் | குரு | 20-04-2014-19-12-2016 |
| ராகு | 19-02-2047-18-02-2065 | சுக் | சனி | 19-12-2016-19-02-2020 |
| குரு | 18-02-2065-18-02-2081 | சுக் | புத | 19-02-2020-20-12-2022 |
| சனி | 18-02-2081-19-02-2100 | சுக் | கே | 20-12-2022-19-02-2024 |

இந்தச் சாதகர் வீட்டு மனை விற்பனை முகவர், உடற்பயிற்சி கூடம், வெளிநாட்டில் இருந்து இறக்குமதி செய்து வாகனங்களில் பல புது அம்சங்களுடன் மாற்றி விற்பனை செய்தல் போன்ற பல விதத் தொழில்கள் செய்து வந்துள்ளார்.

இவருக்குச் சுக்கிர தசாவில் (4) சனி புத்தி (8) துவங்கிய காலத்தில் இருந்து ஒரு பெண்ணுடன் பிரச்சினையில் சிக்கிக் காவல் நிலையம் வரை சென்று அவமானப்பட்டு மீண்டு வந்துள்ளார். அதன்பின்பு மிகப்பெரிய விபத்துக்குள்ளானார். இது உடலில் பலத்த சேதங்களை ஏற்படுத்தியது. சேதங்களைச் சரி செய்திடத் தான் அதுவரை சம்பாதித்து வந்த பணம், சொத்து அனைத்தையும் இழந்துள்ளார்.

பல புத்திகளில் கஷ்டப்பட்டுச் சேர்த்த பணத்தை ஒரே புத்தியில் இழந்துள்ளார், இருந்தும் இன்னும் முழு ஆரோக்கியம் திரும்பவில்லை என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

193. சாதகர் : கலைவாணி (98655 81166) பிறந்த நாள் : 02.01.1998

பிறந்த நேரம் : அதிகாலை 02.15 பிறந்த ஊர் : மேட்டூர்.

| | 30 | 22 | 22 | 28 | |
|---|---|---|---|---|---|
| | சனி | | | | |
| 20 | கேது | இராசி | | | 30 |
| 29 | குரு சந் செவ் சுக் | அவிட்டம்-2 | | ராகு | 31 |
| | சூரி | புத | லக் | | |
| | 23 | 39 | 35 | 28 | |

| | 6 | 7 | 8 | 9 | |
|---|---|---|---|---|---|
| | சனி | | | | |
| 5 | கேது | ஸ்ரீபதி பாவகம் | | | 10 |
| 4 | சுக் செவ் சந் குரு | | | ராகு | 11 |
| | சூரி | புத | லக் | | |
| | 3 | 2 | 1 | 12 | |

KALAIVANI
02-01-1998 02:15:00
Mettur,T.N.
செவ் திசை இருப்பு 04-வருடம் 04-மாதம் 07-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | கேது |
| 2,6,10 | புத சனி |
| 3,7,11 | சூரி ராகு |
| 4,8,12 | சுக் செவ் சந் குரு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| செ | 11-05-1995-11-05-2002 | ராகு ராகு | 11-05-2002-21-01-2005 |
| ராகு | 11-05-2002-11-05-2020 | ராகு குரு | 21-01-2005-17-06-2007 |
| குரு | 11-05-2020-11-05-2036 | ராகு சனி | 17-06-2007-23-04-2010 |
| சனி | 11-05-2036-11-05-2055 | ராகு புத | 23-04-2010-09-11-2012 |
| புத | 11-05-2055-11-05-2072 | ராகு கே | 09-11-2012-28-11-2013 |
| கே | 11-05-2072-11-05-2079 | ராகு சுக் | 28-11-2013-28-11-2016 |
| சுக் | 11-05-2079-11-05-2099 | ராகு சூரி | 28-11-2016-22-10-2017 |
| சூரி | 11-05-2099-12-05-2105 | ராகு சந் | 22-10-2017-23-04-2019 |
| சந் | 12-05-2105-12-05-2115 | ராகு செ | 23-04-2019-11-05-2020 |

இந்தச் சாதகிக்கு 14 வயதில் திருமணம் நடந்துள்ளது. இவருக்கு 4 ஆம் பாவகத்தில் நான்கு கோள்கள் உள்ளபடியால் இரசனை, காதல், உடல் உறவு போன்றவற்றில் ஆர்வம் இல்லை. இவருக்குக் கற்பப்பையில் சில பிரச்சினைகளும் உள்ளது.

இவரது 5 ஆம் பாவகக் கொடுப்பினை 75 விழுக்காடு பாதிப்படைந்துள்ளது, மேலும் 5 ஆம் பாவகத்திற்கு 12 ஆம் பாவகமான 4 ஆம் பாவகத்தில் உள்ள 4 கோள்களும் 5 ஆம் பாவகக் காரகத்திற்கு எதிராகச் செயல்பட்டு குழந்தை இன்மையை உருவாக்கி உள்ளது. குழந்தைமீது ஆசையும் இல்லை. இவருக்கு நடப்பு இராகு தசாவில் (11) செவ்வாய் புத்தி (4) ஆகும். இவர் தன்னால் குழந்தை பெற்றுக்கொடுக்க இயலாது என்று தனது கணவரிடம் வேறு பெண்ணுடன் குழந்தை பெற்றெடுக்க முயற்சி செய்யக் கூறிவிட்டு, தனது பிறந்த வீட்டுக்குத் தற்சமயம் வந்துவிட்டார்.

194. சாதகர் : பூமாலை (98655 81166) பிறந்த நாள் : 25.03.1983

பிறந்த நேரம் : காலை 06.30 பிறந்த ஊர் : தர்மபுரி.

| | 26 | 24 | 32 | 26 | |
|---|---|---|---|---|---|
| | செவ் லக் சூரி புத | சுக் | | ராகு | |
| 22 | | இராசி | | சந் | 24 |
| 38 | | ஆயில்யம்-1 | | | 35 |
| | கேது | குரு | சனி | | |
| | 36 | 23 | 24 | 27 | |

| | 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|---|
| | லக் புத சூரி | செவ் சுக் | | ராகு | |
| 12 | | ஸ்ரீபதி பாவகம் | | சந் | 5 |
| 11 | | | | | 6 |
| | கேது | குரு | சனி | | |
| | 10 | 9 | 8 | 7 | |

POOMALAI
25-03-1983 06:30:00
Dharmapuri, T.N.
புத திசை இருப்பு 13-வருடம் 09-மாதம் 14-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | புத சூரி சந் குரு |
| 2,6,10 | செவ் சுக் கேது |
| 3,7,11 | |
| 4,8,12 | ராகு சனி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| புத | 07-01-1980-07-01-1997 | சுக் | சுக் | 07-01-2004-09-05-2007 |
| கே | 07-01-1997-07-01-2004 | சுக் | சூரி | 09-05-2007-08-05-2008 |
| சுக் | 07-01-2004-07-01-2024 | சுக் | சந் | 08-05-2008-07-01-2010 |
| சூரி | 07-01-2024-07-01-2030 | சுக் | செ | 07-01-2010-09-03-2011 |
| சந் | 07-01-2030-07-01-2040 | சுக் | ராகு | 09-03-2011-09-03-2014 |
| செ | 07-01-2040-07-01-2047 | சுக் | குரு | 09-03-2014-07-11-2016 |
| ராகு | 07-01-2047-07-01-2065 | சுக் | சனி | 07-11-2016-07-01-2020 |
| குரு | 07-01-2065-07-01-2081 | சுக் | புத | 07-01-2020-07-11-2022 |
| சனி | 07-01-2081-07-01-2100 | சுக் | கே | 07-11-2022-07-01-2024 |

இந்தச் சாதகர் பிற நபர்களிடம் பணம் வாங்கி, அந்தப் பணத்தை கொண்டு தங்க அடகு கடை மொத்தம் 6 கிளைகள் வைத்து நடத்தி வந்துள்ளார். மேலும் ஒரு அழகு நிலையம் நடத்தி வந்துள்ளார்.

இவருக்குச் சுக்கிர தசாவில் (2) சனி புத்தி (8) துவங்கிய காலம் முதல் தொழில் கிளைகளைச் சரிவரக் கவனிக்க முடியவில்லை, பல தவறான முடிவுகள் எடுத்தபடியால் சுயதொழில் அனைத்தும் மொத்தமாக முடங்கியது. பணம் வாங்கியவர்களிடம் திரும்பப் பணம் கொடுக்க முடியாமல், அவமானப்பட்டுத் தற்கொலை சிந்தனைக்குச் சென்று கடைசி நிமிடத்தில் அம்முடிவினை கைவிட்டு இருக்கிறார்.

இவருக்கு 8 மற்றும் 12 ஆம் பாவகங்களில் ஒரே ஒரு கோள் சனி மட்டுமே உள்ளது. அதன் புத்தியில் இந்த அளவு வாழ்வில் கீழே இறங்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

195. சாதகர் : சிந்து (99644 69425) பிறந்த நாள் : 04.08.1989

பிறந்த நேரம் : இரவு 09.42 பிறந்த ஊர் : கோலர், Kar

| | 27 | 34 | 36 | 39 | |
|---|---|---|---|---|---|
| | லக் | | | குரு | |
| 21 | ராகு | இராசி | | சூரி | 19 |
| 35 | | பூரம்-3 | | கேது புத செவ் சுக் சந் | 25 |
| | சனி | | | | |
| | 29 | 20 | 30 | 22 | |

| | 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|---|
| | லக் | | | குரு | |
| 12 | ராகு | ஸ்ரீபதி பாவகம் | | சூரி | 5 |
| 11 | | | | கேது புத செவ் சுக் சந் | 6 |
| | சனி | | | | |
| | 10 | 9 | 8 | 7 | |

Sindhu
04-08-1989 21:42:00
Kolar Gold Fields,Kar.
சுக் திசை இருப்பு 05-வருடம் 04-மாதம் 07-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சூரி |
| 2,6,10 | கேது புத செவ் சுக் சந் சனி |
| 3,7,11 | |
| 4,8,12 | குரு ராகு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | |
|---|---|---|---|
| சுக் | 12-12-1974-12-12-1994 | ராகு ராகு | 12-12-2017-24-08-2020 |
| சூரி | 12-12-1994-11-12-2000 | ராகு குரு | 24-08-2020-17-01-2023 |
| சந் | 11-12-2000-12-12-2010 | ராகு சனி | 17-01-2023-23-11-2025 |
| செ | 12-12-2010-12-12-2017 | ராகு புத | 23-11-2025-12-06-2028 |
| ராகு | 12-12-2017-12-12-2035 | ராகு கே | 12-06-2028-30-06-2029 |
| குரு | 12-12-2035-12-12-2051 | ராகு சுக் | 30-06-2029-30-06-2032 |
| சனி | 12-12-2051-12-12-2070 | ராகு சூரி | 30-06-2032-25-05-2033 |
| புத | 12-12-2070-12-12-2087 | ராகு சந் | 25-05-2033-24-11-2034 |
| கே | 12-12-2087-12-12-2094 | ராகு செ | 24-11-2034-12-12-2035 |

இந்தச் சாதகி 2012 ஆம் ஆண்டு மார்ச் மாதம் கணினி அறிவியல் துறையில் முனைவர் பட்டம் ஆய்வாளராக அனுமதிக்கப்பட்டுள்ளார். அப்போது இவருக்குச் செவ்வாய் தசாவில் (6) இராகு புத்தி (12) நடந்துள்ளது. அதன்பின் கடந்த 7 ஆண்டுகளாக நல்லமுறையில் ஆய்வுகள் செய்து ஆய்வேடு சமர்ப்பிக்கத் தயார் நிலையில் இருந்த சமயம், இரண்டு மாதங்களுக்கு முன்னர் இவரது ஆய்வு நெறியாளர் பல்கலைகழகத்தில் இருந்து நீக்கம் செய்யப்பட்டுள்ளார்.

ஆய்வு நெறியாளரை மாற்றம் செய்திட எடுத்த முயற்சிகள் யாவும் வீண் ஆகி உள்ளது. தனது முனைவர் பட்ட ஆய்வினை மேற்கோண்டு தொடர முடியாத நிலையில் உள்ளார். ஆய்வு விதிப்படி புத்தியை நடத்தும் கோள் 4, 8, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது, 9 ஆம் பாவகக் காரகத்துவமான முனைவர் பட்ட ஆய்வுக்கு எதிராகச் செயல்படும். அதன்படி இவருக்கு இப்போது நடப்பு 12.12.2017 முதல் 24.08.2020 வரை இராகு தசாவில் (12) இராகு புத்தி (12) என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

196. சாதகர் : சாந்தி (98655 81166) பிறந்த நாள் : 15.12.1970

பிறந்த நேரம் : அதிகாலை 01.20 பிறந்த ஊர் : பெங்களூர்.

| | 19 | 31 | 24 | 30 | |
|---|---|---|---|---|---|
| | | சனி | | சந் | |
| 31 | ராகு | இராசி | | | 30 |
| 20 | | புனர்பூசம்-1 | | கேது | 37 |
| | புத | சூரி குரு | சுக் செவ் | லக் | |
| | 24 | 30 | 27 | 34 | |

| | 7 | 8 | 9 | 10 | |
|---|---|---|---|---|---|
| | | சனி | | சந் | |
| 6 | ராகு | ஸ்ரீபதி பாவகம் | | | 11 |
| 5 | | | | கேது | 12 |
| | புத | குரு சூரி | செவ் சுக் | லக் | |
| | 4 | 3 | 2 | 1 | |

SHANTHI
15-12-1970 01:20:00
Bangalore, Kar.
குரு திசை இருப்பு 13-வருடம் 04-மாதம் 01-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | |
| 2,6,10 | செவ் சுக் ராகு சந் |
| 3,7,11 | குரு சூரி |
| 4,8,12 | புத சனி கேது |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| குரு | 16-04-1968-16-04-1984 | புத | புத | 17-04-2003-12-09-2005 |
| சனி | 16-04-1984-17-04-2003 | புத | கே | 12-09-2005-09-09-2006 |
| புத | 17-04-2003-16-04-2020 | புத | சுக் | 09-09-2006-10-07-2009 |
| கே | 16-04-2020-17-04-2027 | புத | சூரி | 10-07-2009-17-05-2010 |
| சுக் | 17-04-2027-17-04-2047 | புத | சந் | 17-05-2010-16-10-2011 |
| சூரி | 17-04-2047-16-04-2053 | புத | செ | 16-10-2011-12-10-2012 |
| சந் | 16-04-2053-17-04-2063 | புத | ராகு | 12-10-2012-02-05-2015 |
| செ | 17-04-2063-16-04-2070 | புத | குரு | 02-05-2015-07-08-2017 |
| ராகு | 16-04-2070-16-04-2088 | புத | சனி | 07-08-2017-16-04-2020 |

இந்தச் சாதகி குடும்பத்திற்குத் தெரியாமல் இரகசியமாகப் பலரிடம் கடன் வாங்கி பங்கு சந்தையில் முதலீடு செய்துள்ளார். இவருக்குத் தற்சமயம் புதன் தசாவில் (4) சனி புத்தி (8) நடைபெற்று வருகிறது.

இவரது தவறான முடிவுகளால் பங்கு சந்தையில் அனைத்தும் நஷ்டம் அடைந்துவிட்டது. இரகசியமாகப் பணம் கொடுத்து வந்தவர்கள் தனது பணம் ஏமாற்றப்படுவதாக உணர்ந்து, இந்தச் சாதகி வீட்டில் வந்து சத்தமிட்டுக் கேவலப்படுத்தி இருக்கிறார்கள். இவர்களின் வீட்டில் உள்ளவர்கள் சொத்துக்களை விற்று பணத்தை அடைப்பதாக வாக்குறுதி கொடுத்துள்ளனர். பங்கு சந்தை என்பது யூக வணிகம் ஆகும். இது 5 ஆம் பாவகத் தொழில் என்பதால் புத்தியை நடத்தும் கோள் 8 அல்லது 12 ஆம் பாவகங்கிளில் இருக்கும்போது இத்தொழிலில் இருந்து விலகி இருக்க வேண்டும் அல்லது இதனைப் போல் பெருத்த நஷ்டங்களை ஏற்படுத்திவிடும்.

197. சாதகர் : செந்தில் குமார் (82488 93926) பிறந்த நாள் : 02.04.1980

பிறந்த நேரம் : அதிகாலை 03.08 பிறந்த ஊர் : திருத்தணி.

| | 32 | 28 | 25 | 40 | |
|---|---|---|---|---|---|
| | சூரி | | சுக் | | |
| 22 | புத கேது | இராசி | | | 22 |
| 31 | லக் | சித்திரை-3 | | செவ் ராகு குரு சனி | 25 |
| | | | சந் | | |
| | 31 | 30 | 30 | 21 | |

| | 3 | 4 | 5 | 6 | |
|---|---|---|---|---|---|
| | சூரி | சுக் | | | |
| 2 | புத | ஸ்ரீபதி பாவகம் | | செவ் ராகு குரு | 7 |
| 1 | லக் கேது | | | சனி | 8 |
| | | | | சந் | |
| | 12 | 11 | 10 | 9 | |

Senthil Kumar
02-04-1980 03:08:00
Tiruttani,A.P.
செவ் திசை இருப்பு 02-வருடம் 01-மாதம் 26-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | கேது சந் |
| 2,6,10 | புத |
| 3,7,11 | சூரி செவ் ராகு குரு |
| 4,8,12 | சுக் சனி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| செ | 30-05-1975-30-05-1982 | சனி | சனி | 29-05-2016-02-06-2019 |
| ராகு | 30-05-1982-29-05-2000 | சனி | புத | 02-06-2019-09-02-2022 |
| குரு | 29-05-2000-29-05-2016 | சனி | கே | 09-02-2022-21-03-2023 |
| சனி | 29-05-2016-30-05-2035 | சனி | சுக் | 21-03-2023-21-05-2026 |
| புத | 30-05-2035-29-05-2052 | சனி | சூரி | 21-05-2026-03-05-2027 |
| கே | 29-05-2052-30-05-2059 | சனி | சந் | 03-05-2027-01-12-2028 |
| சுக் | 30-05-2059-30-05-2079 | சனி | செ | 01-12-2028-10-01-2030 |
| சூரி | 30-05-2079-30-05-2085 | சனி | ராகு | 10-01-2030-16-11-2032 |
| சந் | 30-05-2085-30-05-2095 | சனி | குரு | 16-11-2032-30-05-2035 |

இந்தச் சாதகர் தனக்குச் சனி தசா (8) சனி புத்தி (8) 20.05.2016 முதல் 02.06.2019 வரை நடக்க இருப்பதை முன்பே அறிந்து இருந்தபடியால் மிகவும் ஜாக்கிரதையாகவே இருந்துள்ளார். அப்படி இருந்தும் 24.09.2016 அன்று வேலை முடித்துவிட்டு இருசக்கர வாகனத்தில் வீட்டுக்குச் சென்னை பீச்ரோட்டில் சென்று கொண்டு இருந்தார்.

அப்போது மது அருந்திவிட்டுப் பின்னால் வேகமாக வாகனங்களில் வந்த இளைஞர்கள் இவர் வாகனத்தில் மோதி இவர் தூக்கி எறியப்பட்டு, இவரது காலில் அவர்களது வாகனம் ஏறி கால்எலும்பு சிதைந்து விட்டது. அதன்பின் இரும்பு பிளேட் கொடுத்து அறுவைசிகிச்சை செய்து ஓரளவு காலைச் சரி செய்துள்ளனர். ஆய்வு விதிப்படி புத்தியை நடத்தும் கோள் 8, 12 ஆம் பாவகங்களில் இருக்கும்போது நாம் ஒழுங்காகச் சென்றாலும் கூடப் பின்னால் வருகிறவர்களால் ஆபத்து ஏற்படும்.

198. சாதகர் : ராஜேஷ் (92455 94055)    பிறந்த நாள் : 25.06.1975

பிறந்த நேரம் : இரவு 11.55    பிறந்த ஊர் : நாகர்கோவில்.

| | 34 | 29 | 25 | 25 | |
|---|---|---|---|---|---|
| | குரு லக் | செவ் | கேது புத | சூரி சனி | |
| 30 | | இராசி | | சுக் | 23 |
| 38 | சந் | உத்ராடம்-3 | | | 27 |
| | | ராகு | | | |
| | 28 | 26 | 28 | 24 | |

| | 1 | 2 | 3 | 4 | |
|---|---|---|---|---|---|
| | லக் | குரு செவ் | கேது | புத சூரி | |
| 12 | | ஸ்ரீபதி பாவகம் | | சனி | 5 |
| 11 | சந் | | | சுக் | 6 |
| | | ராகு | | | |
| | 10 | 9 | 8 | 7 | |

Rajesh
25-06-1975 23:55:00
Nagercoil,T.N.
சூரி திசை இருப்பு 02-வருடம் 06-மாதம் 17-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | சனி ராகு |
| 2,6,10 | குரு செவ் சுக் |
| 3,7,11 | கேது சந் |
| 4,8,12 | புத சூரி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| சூரி | 12-01-1972-12-01-1978 | குரு | குரு | 11-01-2013-02-03-2015 |
| சந் | 12-01-1978-12-01-1988 | குரு | சனி | 02-03-2015-12-09-2017 |
| செ | 12-01-1988-12-01-1995 | குரு | புத | 12-09-2017-19-12-2019 |
| ராகு | 12-01-1995-11-01-2013 | குரு | கே | 19-12-2019-24-11-2020 |
| குரு | 11-01-2013-11-01-2029 | குரு | சுக் | 24-11-2020-26-07-2023 |
| சனி | 11-01-2029-12-01-2048 | குரு | சூரி | 26-07-2023-13-05-2024 |
| புத | 12-01-2048-11-01-2065 | குரு | சந் | 13-05-2024-12-09-2025 |
| கே | 11-01-2065-12-01-2072 | குரு | செ | 12-09-2025-19-08-2026 |
| சுக் | 12-01-2072-12-01-2092 | குரு | ராகு | 19-08-2026-11-01-2029 |

இந்தச் சாதகர் எம்.காம்., படித்துவிட்டு, எலெக்ரிக்கல் காண்ட்ராகட் தொழில் சுயமாகச் செய்து வந்தார். 13.11.2004 அன்று இரவு தனது இருசக்கர வாகனத்தில் வந்துகொண்டு இருந்தபோது, எதிரே வந்த அரசுப் பேருந்து இவர் மீது மோதி விபத்திற்குள்ளானார்.

அதன்பின் ஒரு தனியார் மருத்துவமனையில் சேர்த்த போது, மூளையில் அடிபட்டு இருப்பதாகக் கூறி அறுவை சிகிச்சை செய்தனர். ஆனால் அதன்பின்னர் சாதகர் சுயநினைவைப் பெறவே இல்லை. இந்தச் சாதகருக்கு அப்போது இராகு தசாவில் (9) புதன் புத்தி (4) நடைபெற்றுக்கொண்டு இருந்தது. நமது விதிப்படி 4 ஆம் பாவகம் என்பது 6 ஆம் பாவகத்தை விடத் தீங்கு அதிமாகச் செய்ய கூடியது ஆகும். காரணம் 4 ஆம் பாவகம் இயங்கும்போது 1 ஆம் பாவகம் 70 விழுக்காடு வரை பாதிக்கப்படும் என்பதே.

199. சாதகர் : பன்னீர் செல்வம் (94440 05557) பிறந்த நாள் : 24.08.1966

பிறந்த நேரம் : மாலை 04.30 பிறந்த ஊர்: சென்னை

| | 30 | 33 | 40 | 31 | |
|---|---|---|---|---|---|
| | சனி | ராகு | | | |
| 23 | | இராசி | | குரு செவ் சுக் புத | 20 |
| 28 | லக் | கேட்டை-3 | | சூரி | 21 |
| | | சந் | கேது | | |
| | 27 | 32 | 25 | 27 | |

| | 3 | 4 | 5 | 6 | |
|---|---|---|---|---|---|
| | சனி | ராகு | | | |
| 2 | | ஸ்ரீபதி பாவகம் | | குரு செவ் சுக் புத | 7 |
| 1 | லக் | | | சூரி | 8 |
| | | சந் | கேது | | |
| | 12 | 11 | 10 | 9 | |

PANNER SELVAM
24-08-1966 16:30:00
Chennai, T.N.
புத திசை இருப்பு 08-வருடம் 02-மாதம் 14-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | |
| 2,6,10 | கேது |
| 3,7,11 | சனி குரு செவ் சுக் புத சந் |
| 4,8,12 | ராகு சூரி |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| புத | 08-11-1957-08-11-1974 | செ | செ | 08-11-2017-06-04-2018 |
| கே | 08-11-1974-08-11-1981 | செ | ராகு | 06-04-2018-24-04-2019 |
| சுக் | 08-11-1981-08-11-2001 | செ | குரு | 24-04-2019-30-03-2020 |
| சூரி | 08-11-2001-08-11-2007 | செ | சனி | 30-03-2020-09-05-2021 |
| சந் | 08-11-2007-08-11-2017 | செ | புத | 09-05-2021-06-05-2022 |
| செ | 08-11-2017-07-11-2024 | செ | கே | 06-05-2022-02-10-2022 |
| ராகு | 07-11-2024-08-11-2042 | செ | சுக் | 02-10-2022-03-12-2023 |
| குரு | 08-11-2042-08-11-2058 | செ | சூரி | 03-12-2023-08-04-2024 |
| சனி | 08-11-2058-08-11-2077 | செ | சந் | 08-04-2024-07-11-2024 |

இந்தச் சாதகருக்கு முதல் முறையாக 2017 ஆம் ஆண்டு சந்திர (11) தசா (11) சூரிய புத்தியில் (8) பைபாஸ் அறுவை சிகிச்சை செய்யப்பட்டது. அது சரியாக அமையாத காரணத்தினால் மீண்டும் 2018 ஆம் ஆண்டு இதய அறுவை சிகிச்சை செய்யப்பட்டது. அப்போது செவ்வாய் தசாவில் (7) இராகு புத்தி (4) ஆகும்.

ஆய்வு விதிப்படி 4 ஆம் பாவகம் என்பது இதயத் துடிப்பு, மற்றும் மூளைக்கு உள்ள தொடர்பைத் துண்டிக்கக் கூடிய பாவகம் ஆகும். அதாவது 4 ஆம் பாவகம் என்பது இலக்கினம் எனும் சாதகருக்கு 70 விழுக்காடு வரை தீமை தரக் கூடியதாக உள்ளது. 6 ஆம் பாவகம் என்பது வெறும் ஆரோக்கிய போராட்டத்தை மட்டுமே கொடுக்கும். ஆனால் 4 ஆம் பாவகம் உயிருக்குத் தீமை விளைவிக்கக் கூடியச் செயல்களை அதிகம் செய்யக் கூடியது. அதனால் ஆய்வு விதிப்படி 6 ஆம் பாவகத்தை விட 4 ஆம் பாவகம் இலக்கினத்திற்கு அதிக தீமை கொடுக்கக் கூடியதாகப் பார்க்கப்படுகிறது.

200. சாதகர் : ஐய்யனார் (98655 81166) பிறந்த நாள் : 12.04.1972

பிறந்த நேரம் : அதிகாலை 03.04 பிறந்த ஊர் : மேட்டூர்.

| | 32 | 21 | 31 | 21 | |
|---|---|---|---|---|---|
| | சூரி புத சந் | | சனி சுக் செவ் | | |
| 25 | லக் | இராசி | | கேது | 30 |
| 35 | ராகு | பூரட்டாதி-4 | | | 28 |
| | குரு | | | | |
| | 33 | 29 | 28 | 24 | |

| | 2 | 3 | 4 | 5 | |
|---|---|---|---|---|---|
| | சந் புத | சூரி | சனி சுக் செவ் | | |
| 1 | லக் | ஸ்ரீபதி பாவகம் | | கேது | 6 |
| 12 | ராகு | | | | 7 |
| | குரு | | | | |
| | 11 | 10 | 9 | 8 | |

IYYANAR
12-04-1972 03:04:00
Mettur,T.N.
குரு திசை இருப்பு 02-வருடம் 10-மாதம் 06-நாள்

| ஸ்ரீபதி பாவகம் | |
|---|---|
| 1,5,9 | |
| 2,6,10 | சந் புத கேது |
| 3,7,11 | சூரி குரு |
| 4,8,12 | சனி சுக் செவ் ராகு |

| திசை விபரம் | | புத்தி விபரம் | | |
|---|---|---|---|---|
| குரு | 17-02-1959-17-02-1975 | சுக் | சுக் | 17-02-2018-18-06-2021 |
| சனி | 17-02-1975-17-02-1994 | சுக் | சூரி | 18-06-2021-18-06-2022 |
| புத | 17-02-1994-17-02-2011 | சுக் | சந் | 18-06-2022-17-02-2024 |
| கே | 17-02-2011-17-02-2018 | சுக் | செ | 17-02-2024-18-04-2025 |
| சுக் | 17-02-2018-17-02-2038 | சுக் | ராகு | 18-04-2025-18-04-2028 |
| சூரி | 17-02-2038-17-02-2044 | சுக் | குரு | 18-04-2028-18-12-2030 |
| சந் | 17-02-2044-17-02-2054 | சுக் | சனி | 18-12-2030-17-02-2034 |
| செ | 17-02-2054-16-02-2061 | சுக் | புத | 17-02-2034-17-12-2036 |
| ராகு | 16-02-2061-17-02-2079 | சுக் | கே | 17-12-2036-17-02-2038 |

இந்தச் சாதகருக்கு தனது 19 வயதில் திருமணம் ஆகி உள்ளது. சனி தசா (4) இராகு புத்தியில் (12) தனது மனைவி வேறு ஒருவருடன் கள்ளத் தொடர்பு வைத்திருந்ததை அறிந்த இவர் தனது மாமனாருடன் சேர்ந்து தனது மனைவியைக் கொலை செய்துள்ளார்.

அதன்பின் குரு புத்தி (11) துவங்கியதை அடுத்து ஜாமீனில் வெளி வந்து, தனக்கு எதிரான சாட்சிகளைக் கலைத்துத் தொடர்ந்து ஜாமீனில் இருந்துள்ளார். இவரது வழக்கு வருடக் கணக்கில் நடைபெற்று 2006 ஆம் ஆண்டு தைமாதம் இவர் குற்றவாளி எனத் தீர்ப்பு வந்தது. அப்போது இவருக்குப் புதன் தசாவில் (2) இராகு புத்தி (12) நடைபெற்றுக்கொண்டு இருந்தது. அதன் பின்பு ஆயுள்தண்டனை பெற்று 13 ஆண்டுகள் சிறையில் இருந்துள்ளார். இதேபோல் பல கொலைகள் 8 மற்றும் 12 ஆம் பாவக இயக்கங்களில் நடைபெற்று உள்ளது, சட்டச் சிக்கல் கருதி அனைத்தையும் பொதுவில் கூற இயலாது.

**இச்சாதகர்களுக்குக் கிடைத்துள்ள சாதகமான பலன்கள்:**

4, 8, 12 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 4, 8, 12 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்கள் 100 விழுக்காடு இயங்கி உள்ளது. பொதுவாக 4, 8, 12 ஆம் பாவகங்களில் பெரிய நன்மையான பலன்கள் ஏதும் இல்லை. 4 ஆம் பாவகம்மூலம் இலக்கினத்திற்கு 30 விழுக்காடு நன்மையான பலன்கள் கிடைத்துள்ளது. 8, 12 ஆம் பாவகம்மூலம் அதிக நன்மைகள் இல்லை.

அசையும் அசையாச் சொத்துக்கள் சேர்த்துள்ளனர், தேவைக்கு அதிகமான கையிருப்புப் பணம், மறைமுகச் சொத்துக்கள் (பினாமி), யூகங்களை நம்பாதிருத்தல். புரட்சிகரமான சிந்தனை, ஒரு விசயத்தை மெருகேற்றிப் பேசாமல் வெட்டு ஒன்று துண்டு இரண்டு எனப் போட்டு உடைப்பவர்கள். ஒரே வேலையை மீண்டும் மீண்டும் செய்கிறோமே என்கிற சலிப்பு இல்லாமல் செய்த வேலையைச் செய்துகொண்டே இருப்பது, ஏதாவது ஒரு வேலையைச் செய்துகொண்டே இருப்பது போன்ற பலன்களைக் காணமுடிகிறது.

காப்பீட்டு பணம், எதிர்பாராத தனவருவாய் (Death Insurance). இலாட்டரியில் பரிசு பணம், இழப்பீடு பெறுதல், நஷ்ட ஈடு பெறுதல், கேட்பார் இல்லாமல் கிடைக்கும் பொருள் மற்றும் பணம், புதையல், அசிங்கம் பாராமல் வேலை செய்யக் கூடியவர்கள், மிகக் கடுமையான வேலைகளைச் செய்வது. மூளைசலவை செய்து இவர்களை மதமாற்றம் செய்ய இயலாது. பல தோல்விகளைச் சந்திந்து மனம் பக்குவப்பட்டிருப்பது. அமானு‘ சக்திகள், ஒற்றன் வேலை செய்துள்ளவர்களையும் பார்க்க முடிகிறது.

இரவு பகல் பாராமல் கடின உடல் உழைப்பு, கௌரவம் பார்காமல் உழைப்பது, விஞ்ஞான ஆராய்ச்சியாளர்கள், துப்பறியும் நுணுக்கங்கள், மற்றவர்களின் இயலாமையைக் (Weakness) கண்டறிவது இவர்களுக்குக் கைவந்த கலையாகும், பல தலைமுறைக்குத் தேவையான சொத்துக்கள் சேர்ப்பது, ஒன்றுக்கு மேற்பட்ட தொழில், நாடு கடத்தப்படுதல், வெளிநாட்டுக் குடியுரிமை (12) தான் என்கிற அகம்பாவம் (1) அழிந்து முக்தி (12) பெற

வழிவகைசெய்தது போன்ற பலன்கள் இந்தக் குறிப்பிட்ட புத்தியில் இவர்களின் வாழ்வில் நடைபெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

**இச்சாதகர்களுக்குக் கிடைத்துள்ள பாதகமான பலன்கள்:**

4, 8, 12 ஆம் பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் இருக்கும்போது, 8, 12 ஆம் பாவகங்களின் தீமையுடன் 1, 5, 9 ஆம் பாவகக் காரகத்துவப் பலன்களும் இயங்காமல் இந்தப் பாவகங்கள்மூலம் சாதகருக்குக் கிடைக்க வேண்டிய மனமகிழ்ச்சி தடைபட்டுள்ளது. அதாவது தீமை எனக் கொள்ளலாம்.

சாதகரின் ஆரோக்கியம் பாழ்படுதல், மனபலம் இல்லாதிருத்தல், எதிலும் பயம், தோற்றப் பொலிவை இழப்பது, சுயகௌரவத்தை இழத்தல், கலைத்துறையில் இருந்து வெளியேறுதல், மறைந்து வாழ்தல், எப்போதும் ஒருவிதப் பதட்டம் இவர்களிடத்தில் காணப்படுகிறது, மரணபயம், எதிர்மறைச் சிந்தனைகள், சமுதாயத்தில் இருந்து தனிமைப்படுத்தப்படுதல், சிறைச்சாலை, மருத்துவமனையில் மாட்டிக்கொள்வது, புத்திபேதலிப்பு, மனநோய், வியாபாரக் கூட்டாளியிடம் ஏமாந்து போதல், திருமணமுறிவு, தனது பணத்தை அடுத்தவரிடம் கொடுத்து ஏமாந்து போனது, தவறான முடிவுகள், மனவலி வேதனை, துக்கம், கண்டறிய முடியாத நோய்கள், மருந்துகளுக்குக் கட்டுப்படாத நோய்கள், உடலில் உள்ள உறுப்புகள் சேதமடைதல், உடல் உறுப்புக்கள் அகற்றப்படுதல், உடலுக்கும் மூளைக்கும் உள்ள தொடர்பு துண்டிக்கப்படுதல் (மூளைச்சாவு), கோமாவில் இருத்தல், இதயக் கோளாறு, இதய அறுவை சிகிச்சை, புத்திரசோகம், காதல் முறிவு, யூகவணிகத்தில் நட்டம், கலைத்துறையில் இருந்து வெளியேறுதல், அவமானம், மற்றவர்களைக் கொலை செய்வது, தற்கொலை சிந்தனை, தெய்வ அனுக்கிரகம் இல்லாதிருத்தல், ஆய்வுக் கல்வியில் தடை, வீட்டை விட்டு வெளியேறுதல், நாடோடிகள், இலஞ்சம் வாங்கிச் சிக்கிக்கொண்டது, சட்டத்திற்குப் புறம்பான செயல்கள், பதுக்கல், கடத்தல், எதிர்பாராத விபத்துக்கள், வெளிநாட்டு வணிகத் தொடர்பு துண்டிப்பு, யூக வணிகத்தில் நட்டம், தீவிரவாதம், நாத்திகம் பேசுவது, பிற உயிர்களுக்குத் தீங்கு செய்வது, இயற்கையை அழிப்பது, சட்டத்திற்குப் புறம்பான இரகசியத் தொழில், அளவிற்கு அதிகமான கடன், பல எதிரிகள், பிறரிடம் பணம் வாங்கிவிட்டு மீண்டும் கொடுக்காமல் ஏமாற்றுவது அல்லது

மஞ்சள் கடிதம் விடுவது, பிறர் சொல் கேளாமை. சுயசித்ரவதை செய்தல் (தற்கொலைப் படை) பிற மனிதர்களின் துயரத்தில் இன்பம் காணுதல், பிறர் கண் கூச வைக்கும் வன்மமான செயல்கள், கேவலமான செயல்கள் ஆகிய பலன்கள் இந்தக் குறிப்பிட்ட புத்தியில் இவர்களின் வாழ்வில் நடைபெற்றுள்ளதைக் காணமுடிகிறது.

## தொகுப்புரை

50 சாதகங்களின்வழி கிடைக்கப்பெற்ற செய்திகள். வீடு திரிகோணத்தில் புத்தியை நடத்தும் கோள் 4 அல்லது 8 அல்லது 12 ஆகிய பாவகங்களில் இருந்தபோது நடைபெற்ற பலன்கள் குறித்து 50 சாதகங்களைக் கொண்டு ஆய்வு செய்யப்பட்டது. ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட விதிகளின்படி இவர்களுக்குப் புறம் தொடர்பான காரகப் பலன்கள் நல்லமுறையில் கிடைத்துள்ளது. அதேசமயம் அகம் தொடர்பான காரகப் பலன்கள் பாதிக்கப்பட்டுள்ளது. அதுவும் குறிப்பாக 1, 5, 9 ஆம் பாவகக் காரகங்கள் பாதிக்கப்பட்டுள்ளது என்பது தெரியவருகிறது.

## ஆய்வு முடிவுரை

ஒரு சாதகத்திற்குப் பலன் கூற விதி, மதி இரண்டையும் இணைத்துப் பலன் கூற வேண்டும். விதியை நிர்ணயம் செய்யப் பிறந்த சாதகத்தில் உள்ள இராசிக்கட்டத்தைப் பயன்படுத்த வேண்டும். மதியை நிர்ணயம் செய்யப் பிறந்தகால மத்திமமுறை பாவகக் கட்டத்தைப் பயன்படுத்தி, விம்சோத்திரி தசாபுத்திப் கணிதங்கள் கொண்டு பலன் கூற வேண்டும். ஒரு குறிப்பிட்ட வீட்டிற்கு விதி கொடுப்பினை நன்றாக அமைந்தால், அந்த வீட்டிற்குச் சாதமாகத் தசாபுத்திக் காலத்தில் அதன் முழுமையான பலன் கிடைக்கிறது.

தசாவைவிடப் புத்தியை நடத்தக் கூடிய கோள் வலிமை வாய்ந்தது ஆகும். தசாபலனைத் தடை செய்யக் கூடிய அளவில் கூடப் புத்தியை நடத்தக் கூடிய கோள் செயல்பட முடியும் என்பதை அறியமுடிகிறது. இயல் 1 இன் மூலம் கிடைக்கப்பட்ட செய்திகள், புத்தியை நடத்தக் கூடிய கோள் ஒரு குறிப்பிட்ட பாவகத்தில் இருக்கும்போது பன்னிரு பாவகத்திற்கும் பன்னிரு விதிகளைப் பயன்படுத்திப் பலன் கூற இயலும் என்பதாகும்.

பன்னிருப் பாவகங்களை அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு திரிகோணப் பாவகங்களாகச் சுருக்கி, பன்னிரு பாவகங்களுக்குச் சொல்லப்பட்ட 12 விதிகளை ஒருமித்த அளவுகோல் உடைய 4 வித விதிகளைக் கொண்டு பலன் அறிப்பட்டுள்ளது. நான்குவித விதிகள் உருவாக்கபட்ட முறைமை குறித்து முதல்இயலில் விளக்கப்பட்டுள்ளது. அடுத்துவரும் 4 இயல்களில் இத்திரிகோணப் பாவகங்களில் புத்தியை நடத்தக் கூடிய கோள் இருக்கும்போது நடைபெற்ற சாதக பாதகப் பலன்கள் கண்டறியப்பட்டது.

மேலும் 2, 3, 4, 5 ஆகிய நான்கு இயல்களில் கிடைத்த தகவலின்படி புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற திரிகோணம் 100 விழுக்காடு இயங்கும். புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற திரிகோணத்திற்கு அடுத்த திரிகோணம் இயங்காது. புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற திரிகோணத்திற்கு ஒன்றுவிட்ட அடுத்த திரிகோணம் பன்மடங்கு இயங்கும். புத்தியை நடத்தக் கூடிய கோள் நின்ற திரிகோணத்திற்கு முந்தைய திரிகோணம் ஒரு வரைமுறைக்குக் உட்டபட்டு குறைவாக இயங்கும். இவ்வகையில் முடிவுகள் எடுத்துரைக்கப்படுகிறது.

**இயல் 2, 3, 4, 5 ஆகியவற்றின்மூலம் பெறப்பட்ட முடிவுகள் அட்டவணை**

| புத்தியை நடத்தும் கோள் நின்ற நான்கு திரிகோணப் பாவகங்களும் - ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட நான்குவித இயக்க விதிகளும் | 100 விழுக்காடு இயங்கிப் பலன் அளித்த பாவகங்கள் | இயங்காமல் பலன் தடைபட்ட பாவகங்கள் | பன்மடங்கு இயங்கிப் பலன் அளித்த பாவகங்கள் | வரைமுறைக்கு உட்பட்டுக் குறைவாகப் பலன் அளித்த பாவகங்கள் |
|---|---|---|---|---|
| **அறம் (1,5,9)** | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 |
| **பொருள் (2,6,10)** | 2, 6, 10 | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 |
| **இன்பம் (3,7,11)** | 3, 7, 11 | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 |
| **வீடு (4,8,12)** | 4, 8, 12 | 1, 5, 9 | 2, 6, 10 | 3, 7, 11 |

அறம் (1,5,9) கிடைத்த காலத்தில் பொருள் (2,6,10) கிடைப்பதில்லை, பொருள் (2,6,10) கிடைத்த காலத்தில் இன்பம் (3,7,11) கிடைப்பதில்லை, இன்பம் (3,7,11) கிடைத்த காலத்தில் வீடு (4,8,12) கிடைப்பதில்லை, வீடு (4,8,12) கிடைத்த காலத்தில் அறம் (1,5,9) கிடைப்பதில்லை என்பன இவ்வாய்வின் முடிவாகக் கண்டயறிப்பட்டுள்ளது.

பன்னிரு பாவகங்களில் புத்தியை நடத்தும் கோள் அகம் என்னும் ஒற்றைப்படைப் பாவகங்களில் இருக்கும்போது அகக்காரகப் பலன்கள் நல்லமுறையில் கிடைத்தும், அதேவேளையில் புறம் என்னும் இரட்டைப்படைப் பாவகக் காரகப் பலன்கள் பாதிக்கப்பட்டுள்ளதையும் 2 ஆம் மற்றும் 4 ஆம் இயல்களின் முடிவுரைமூலம் அறியமுடிகிறது.

மேலும் புத்தியை நடத்தும் கோள் புறம் என்னும் இரட்டைப்படைப் பாவகங்களில் இருக்கும்போது புறக்காரகப் பலன்கள் நல்லமுறையில் கிடைத்தும், அதேவேளையில் அகம் என்னும் ஒற்றைப்படைப் பாவகக் காரகப் பலன்கள் பாதிக்கப்பட்டுள்ளதையும் 3 ஆம் மற்றும் 5 ஆம் இயல்களின் முடிவுரைமூலம் அறியமுடிகிறது.

இதன்மூலம் அகம் புறத்தை எதிர்க்கும் என்றும், புறம் அகத்தை எதிர்க்கும் என்றும் தெளிவுப்படுத்தப் பெற்றது. ஒரு நாணயத்தின் இருபுறம்போல், ஒன்று கிடைத்தால் மற்றொன்று கிடைக்காது. ஒரு குறிப்பிட்ட தசாபுத்திக் காலத்தில் எது கிடைக்கும் எது கிடைக்காது என்று பிரித்துக் கூற இவ்வாய்வு உதவுகிறது.

தசாவை நடத்தும் கோள் நின்ற பாவகத்தில் இருந்து புத்தியை நடத்தும் கோள் நின்ற பாவகம் 4, 8, 12 ஆக இருந்தால் தசாபலன் முறிவு ஏற்படுகிறது என்பதும் கண்டறியப்பட்டது.

ஒருவரின் விதி கொடுப்பினையை ஆராய்ந்து அறிவதன்மூலம், என்ன கல்வி பயன் தரும், எந்தத் துறையில் தொழில் அல்லது வேலை செய்தால் ஆதாயம் கிடைக்கும் போன்றவற்றை அறியமுடியும். அதேபோல் ஆரோக்கியம், படிப்பு, வேலை, காதல், திருமணம், குழந்தை, சொத்து வாங்க விற்க, வெளிநாடு போன்ற அனைத்து விதமான பலன்களுக்கும் சாதகமான பாதகமான காலத்தை முன்கூட்டிக் கூற இயலும்.

இந்த ஆய்வின் முடிவுகள்மூலம் மானுட வாழ்வில் ஏற்படும் ஒவ்வொரு செயலிற்குமான சாதக பாதகக் காலங்களைத் தெளிவாகத் தேர்ந்தெடுத்து அவர்களை வழிநடத்த முடியும்.

**மேலாய்வுக் களங்கள்**

கோள்களுக்குரிய காரகத்துவத்தையும் இணைத்துத் தசாபுத்தியின் இயக்கத்தை ஆய்வுக்கு உட்படுத்த வேண்டும்.

இத்திரிகோணத் தசாபுத்தி விதிகளைப் பயன்படுத்தி இராசிக் கட்டத்தில் உள்ள 12 வீடுகளுக்கும் தனித்தனியாக ஆய்வு செய்ய வேண்டும்.

புதிய பாவகக் காரகத்துவங்கள் பற்றிய ஆய்வு நிகழ்த்தப்பட வேண்டும்.

## துணைநூற் பட்டியல்

**முதன்மை ஆதாரங்கள்**


தேவராஜ். ஏ., கொடுப்பினையும் தசா புத்திகளும்,
நூலாசிரியர் வெளியீடு,
ஒமேகா பிரிண்டர்ஸ், சென்னை – 600 037.
முதல் பதிப்பு : அக்டோபர் 2009.


**துணைமை ஆதாரங்கள்**


அருள்வேல். இரா., ஸ்ரீ ராஜ ஜோதிடம்,
ஆன்மிகன் ஜோதிட குழுமம்,
திண்டுக்கல், 624 204,
முதல் பதிப்பு 2006.

சதாசிவம். எஸ.எம்., (மொ.பெ.ஆ) உத்திரகாலாமிர்தம்,
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்,
சென்னை,
முதல் பதிப்பு, 2002.

மகாலட்சுமி. தி., சோதிடவியல்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1996.

மகாலட்சுமி. தி., இலக்கியத்தில் சோதிடம்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1996.

மகாலட்சுமி. தி., பதிப்பாசிரியர் முனைவர்.கோ.விசயராகவன்,
கலைத்தமிழ் ஆய்வுக் களங்கள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 2019.

ராஜன். சி.ஜி., தெசாபுத்தி சிந்தாமணி,
கிரி டிரேடிங் ஏஜென்சி,
சென்னை,
நான்காம் பதிப்பு, 1999.

விமலன். டி., வால்மீகி இராமாயணத்தில் சோதிடவியலின்-
கோட்பாடுகள் ஓர் ஆய்வு,
சுப்புலெட்சுமி பதிப்பகம்,
தஞ்சாவூர் - 613 001,
முதற் பதிப்பு, 2008.

**ஆங்கில நூல்கள்**

Sathanam. R (Transalation) Brihat Parasara Hora Sastra, Vol. 2
Ranjan Publications,
New Delhi,
Edition 2014.

# பின் இணைப்பு

## தசா புத்தி அந்தர விபரங்கள்[24]



**கிருத்திகை, உத்திரம், உத்திராடம்--சூரிய தசை வருஷம் 6-க்கு தசா, புக்தி அந்தர விவரங்கள்**

| புக்தி விவரம் மீ நா. | சூரியன் மீ நா. நா. | சந்திரன் மீ நா. நா. | அங்காரகன் மீ நா. நா. | ராகு மீ நா. நா. | குரு மீ நா. நா. | சனி மீ நா. நா. | புதன் மீ நா. நா. | கேது மீ நா. நா. | சுக்கிரன் மீ நா. நா. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சூரியன் 3 18 | சூரி 0 5 24 | சந் 0 15 0 | அங் 0 7 21 | ராகு 1 18 36 | குரு 1 8 24 | சனி 1 24 9 | புத 1 13 21 | கே 0 7 21 | சுக் 2 0 0 |
| சந்திரன் 6 0 | சந் 0 9 0 | அங் 0 10 30 | ராகு 0 18 54 | குரு 1 13 12 | சனி 1 15 36 | புத 1 18 27 | கே 0 17 51 | சுக் 0 21 0 | சூரி 0 18 0 |
| அங்காரக 4 6 | அங் 0 6 18 | ராகு 0 27 0 | குரு 0 16 48 | சனி 1 21 18 | புத 1 10 48 | கே 0 19 57 | சுக் 1 21 0 | சூரி 0 6 18 | சந் 1 0 0 |
| ராகு 10 24 | ராகு 0 16 12 | குரு 0 24 0 | சனி 0 19 57 | புத 1 15 54 | கே 0 16 48 | சுக் 1 27 0 | சூரி 0 15 18 | சந் 0 10 30 | அங் 0 21 0 |
| குரு 9 18 | குரு 0 14 24 | சனி 0 28 30 | புத 0 17 51 | கே 0 18 54 | சுக் 1 18 0 | சூரி 0 17 6 | சந் 0 25 30 | அங் 0 7 21 | ராகு 1 24 0 |
| சனி 11 12 | சனி 0 17 6 | புத 0 25 30 | கே 0 7 21 | சுக் 1 24 0 | சூரி 0 14 24 | சந் 0 28 30 | அங் 0 17 51 | ராகு 0 18 54 | குரு 1 18 0 |
| புதன் 10 6 | புத 0 15 18 | கே 0 10 30 | சுக் 0 21 0 | சூரி 0 16 12 | சந் 0 24 0 | அங் 0 19 57 | ராகு 1 15 54 | குரு 0 16 48 | சனி 1 27 0 |
| கேது 4 6 | கே 0 6 18 | சுக் 1 0 0 | சூரி 0 6 18 | சந் 0 27 0 | அங் 0 16 48 | ராகு 1 21 18 | குரு 1 10 48 | சனி 0 19 57 | புத 1 21 0 |
| சுக்கிரன் 12 0 | சுக் 0 18 0 | சூரி 0 9 0 | சந் 0 10 30 | அங் 0 18 54 | ராகு 1 13 12 | குரு 1 15 36 | சனி 1 18 27 | புத 0 17 51 | கே 0 21 0 |
| ஆகவே 6 0 0 | 3 18 0 | 6 0 0 | 4 6 0 | 10 24 0 | 9 18 0 | 11 12 0 | 10 6 0 | 4 6 0 | 12 0 0 |

**ரோகினி, அஸ்தம், திருவோணம் – சந்திர தசை வருஷம் 10-க்கு தசா பக்தி, அந்தர விவரங்கள்**

| புக்தி விவரம் | சந்திரன் | அங்காரகன் | ராகு | குரு | சனி | புதன் | கேது | சுக்கிரன் | சூரியன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சந்திரன் 10 0 | சந் 0 25 0 | அங் 0 12 15 | ராகு 2 21 0 | குரு 2 4 0 | சனி 3 0 15 | புத 2 12 15 | கே 0 12 15 | சுக் 3 10 0 | சூரி 0 9 0 |
| அங்காரக 7 0 | அங் 0 17 30 | ராகு 1 1 30 | குரு 2 12 0 | சனி 2 16 0 | புத 2 20 45 | கே 0 29 45 | சுக் 1 5 0 | சூரி 1 0 0 | சந் 0 15 0 |
| ராகு 18 0 | ராகு 1 15 0 | குரு 0 28 0 | சனி 2 25 30 | புத 2 8 0 | கே 1 3 15 | சுக் 2 25 0 | சூரி 0 10 30 | சந் 1 20 0 | அங் 0 10 30 |
| குரு 16 0 | குரு 1 10 0 | சனி 1 3 15 | புத 2 16 30 | கே 0 28 0 | சுக் 3 5 0 | சூரி 0 25 30 | சந் 0 17 30 | அங் 1 5 0 | ராகு 0 27 0 |
| சனி 19 0 | சனி 1 17 30 | புத 0 29 45 | கே 1 1 30 | சுக் 2 20 0 | சூரி 0 28 30 | சந் 1 12 30 | அங் 0 12 15 | ராகு 3 0 0 | குரு 0 24 0 |
| புதன் 17 0 | புத 1 12 30 | கே 0 12 15 | சுக் 3 0 0 | சூரி 0 24 0 | சந் 1 17 30 | அங் 0 29 45 | ராகு 1 1 30 | குரு 2 20 0 | சனி 0 28 30 |
| கேது 7 0 | கே 0 17 30 | சுக் 1 5 0 | சூரி 0 27 0 | சந் 1 10 0 | அங் 1 3 15 | ராகு 2 16 30 | குரு 0 28 0 | சனி 3 5 0 | புத 0 25 30 |
| சுக்கிரன் 20 0 | சுக் 1 20 0 | சூரி 0 10 30 | சந் 1 15 0 | அங் 0 28 0 | ராகு 2 25 30 | குரு 2 8 0 | சனி 1 3 15 | புத 2 25 0 | கே 0 10 30 |
| சூரியன் 6 0 | சூரி 0 15 0 | சந் 0 17 30 | அங் 1 1 30 | ராகு 2 12 0 | குரு 2 16 0 | சனி 2 20 45 | புத 0 29 45 | கே 1 5 0 | சுக் 1 0 0 |
| ஆகவே 10 0 0 | 10 0 0 | 7 0 0 | 18 0 0 | 16 0 0 | 19 0 0 | 17 0 0 | 7 0 0 | 20 0 0 | 6 0 0 |

**மிருகசீரிஷம், சித்திரை, அவிட்டம் – அங்காரக தசை வருஷம் 7-க்கு தசா, புக்தி அந்தர விவரங்கள்**

| புக்தி விவரம் | அங்காரகன் | ராகு | குரு | சனி | புதன் | கேது | சுக்கிரன் | சூரியன் | சந்திரன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| அங்காரக 4 27 | அங் 0 8 34½ | ராகு 1 26 42 | குரு 1 14 48 | சனி 2 3 10½ | புத 1 20 34½ | கே 0 8 34½ | சுக் 2 10 0 | சூரி 0 6 18 | சந் 0 17 30 |
| ராகு 12 18 | ராகு 0 22 3 | குரு 1 20 24 | சனி 1 23 12 | புத 1 26 31½ | கே 0 20 49½ | சுக் 0 24 30 | சூரி 0 21 0 | சந் 0 10 30 | அங் 0 12 15 |
| குரு 11 6 | குரு 0 19 36 | சனி 1 29 51 | புத 1 17 36 | கே 0 23 16½ | சுக் 1 29 30 | சூரி 0 7 21 | சந் 1 5 0 | அங் 0 7 21 | ராகு 1 1 30 |
| சனி 13 9 | சனி 0 23 16½ | புத 1 23 33 | கே 0 19 36 | சுக் 2 6 30 | சூரி 0 17 51 | சந் 0 12 15 | அங் 0 24 30 | ராகு 0 18 54 | குரு 0 28 0 |
| புதன் 11 27 | புத 0 20 49½ | கே 0 22 3 | சுக் 1 26 0 | சூரி 0 19 57 | சந் 0 29 45 | அங் 0 8 34½ | ராகு 2 3 0 | குரு 0 16 48 | சனி 1 3 15 |
| கேது 4 27 | கே 0 8 34½ | சுக் 2 3 0 | சூரி 0 16 48 | சந் 1 3 15 | அங் 0 20 49½ | ராகு 0 22 3 | குரு 1 26 0 | சனி 0 19 57 | புத 0 29 45 |
| சுக்கிரன் 14 0 | சுக் 0 24 30 | சூரி 0 18 54 | சந் 0 28 0 | அங் 0 23 16½ | ராகு 1 23 33 | குரு 0 19 36 | சனி 2 6 30 | புத 0 17 51 | கே 0 12 15 |
| சூரியன் 4 6 | சூரி 0 7 21 | சந் 1 1 30 | அங் 0 19 36 | ராகு 1 29 51 | குரு 1 17 36 | சனி 0 23 16½ | புத 1 29 30 | கே 0 7 21 | சுக் 1 5 0 |
| சந்திரன் 7 0 | சந் 0 12 15 | அங் 0 22 3 | ராகு 1 20 24 | குரு 1 23 12 | சனி 1 26 31½ | புத 0 20 49½ | கே 0 24 30 | சுக் 0 21 0 | சூரி 0 10 30 |
| ஆகவே 7 0 0 | 4 27 0 | 12 18 0 | 11 6 0 | 13 9 0 | 11 27 0 | 4 27 0 | 14 0 0 | 4 6 0 | 7 0 0 |

[24] விகாரி வருஷத்திய (2019/20) வாசன் சுத்த திருக்கணித பஞ்சாங்கம், ப 90

## பின் இணைப்பு

தசா புத்தி அந்தர விபரங்கள்[25]

திருக்கணித பஞ்சாங்கம் 91

**திருவாதிரை, சுவாதி, சதயம் - இராகு தசை வருஷம் 18-க்கு தசா, புக்தி. அந்தர விவரங்கள்**

| புக்தி விவரம் | ராகு | குரு | சனி | புதன் | கேது | சுக்கிரன் | சூரியன் | சந்திரன் | அங்காரகன் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| மீ நா. | மீநா.நா. | மீ நா.நா. | மீ நா.நா. | மீ நா.நா. | மீ நா.நா. | மீ நா.நா. | மீ நா.நா. | மீநா.நா. | மீநா.நா |
| ராகு 32 12 | ராகு 4 25 48 | குரு 3 25 12 | சனி 5 12 27 | புத 4 10 3 | கே 0 22 3 | சுக் 6 0 0 | சூரி 0 16 12 | சந் 1 15 0 | அங் 0 22 3 |
| குரு 28 24 | குரு 4 9 36 | சனி 4 16 48 | புத 4 25 21 | கே 1 23 33 | சுக் 2 3 0 | சூரி 1 24 0 | சந் 0 27 0 | அங் 1 1 30 | ராகு 1 26 42 |
| சனி 34 6 | சனி 5 3 54 | புத 4 2 24 | கே 1 29 51 | சுக் 5 3 0 | சூரி 0 18 54 | சந் 3 0 0 | அங் 0 18 54 | ராகு 2 21 0 | குரு 1 20 24 |
| புதன் 30 18 | புத 4 17 42 | கே 1 20 24 | சுக் 5 21 0 | சூரி 1 15 54 | சந் 1 1 30 | அங் 2 3 0 | ராகு 1 18 36 | குரு 2 12 0 | சனி 1 29 51 |
| கேது 12 18 | கே 1 26 42 | சுக் 4 24 0 | சூரி 1 21 18 | சந் 2 16 30 | அங் 0 22 3 | ராகு 5 12 0 | குரு 1 13 12 | சனி 2 25 30 | புத 1 23 33 |
| சுக்கிரன் 36 0 | சுக் 5 12 0 | சூரி 1 13 12 | சந் 2 25 30 | அங் 1 23 33 | ராகு 1 26 42 | குரு 4 24 0 | சனி 1 21 18 | புத 2 16 30 | கே 0 22 3 |
| சூரியன் 10 24 | சூரி 1 18 36 | சந் 2 12 0 | அங் 1 29 51 | ராகு 4 17 42 | குரு 1 20 24 | சனி 5 21 0 | புத 1 15 54 | கே 1 1 30 | சுக் 2 3 0 |
| சந்திரன் 18 0 | சந் 2 21 0 | அங் 1 20 24 | ராகு 5 3 54 | குரு 4 2 24 | சனி 1 29 51 | புத 5 3 0 | கே 0 18 54 | சுக் 3 0 0 | சூரி 0 18 54 |
| அங்காரக 12 18 | அங் 1 26 42 | ராகு 4 9 36 | குரு 4 16 48 | சனி 4 25 21 | புத 1 23 33 | கே 2 3 0 | சுக் 1 24 0 | சூரி 0 27 0 | சந் 1 1 30 |
| ஆகவ்ரூ 18 0 0 | 32 12 0 | 28 24 0 | 34 6 0 | 30 18 0 | 12 18 0 | 36 0 0 | 10 24 0 | 18 0 0 | 12 18 0 |

**புனர்பூசம், விசாகம், பூரட்டாதி - குரு தசை வருஷம் 16-க்கு தசா, புக்தி, அந்தர விவரங்கள்**

| புக்தி விவரம் | குரு | சனி | புதன் | கேது | சுக்கிரன் | சூரியன் | சந்திரன் | அங்காரகன் | ராகு |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| குரு 25 18 | குரு 3 12 24 | சனி 4 24 24 | புத 3 25 36 | கே 0 19 36 | சுக் 5 10 0 | சூரி 0 14 24 | சந் 1 10 0 | அங் 0 19 36 | ராகு 4 9 36 |
| சனி 30 12 | சனி 4 1 36 | புத 4 9 12 | கே 1 17 36 | சுக் 1 26 0 | சூரி 1 18 0 | சந் 0 24 0 | அங் 0 28 0 | ராகு 1 20 24 | குரு 3 25 12 |
| புதன் 27 6 | புத 3 18 48 | கே 1 23 12 | சுக் 4 16 0 | சூரி 0 16 48 | சந் 2 20 0 | அங் 0 16 48 | ராகு 2 12 0 | குரு 1 14 48 | சனி 4 16 48 |
| கேது 11 6 | கே 1 14 48 | சுக் 5 2 0 | சூரி 1 10 48 | சந் 0 28 0 | அங் 1 26 0 | ராகு 1 13 12 | குரு 2 4 0 | சனி 1 23 12 | புத 4 2 24 |
| சுக்கிரன் 32 0 | சுக் 4 8 0 | சூரி 1 15 36 | சந் 2 8 0 | அங் 0 19 36 | ராகு 4 24 0 | குரு 1 8 24 | சனி 2 16 0 | புத 1 17 36 | கே 1 20 24 |
| சூரியன் 9 18 | சூரி 1 8 24 | சந் 2 16 0 | அங் 1 17 36 | ராகு 1 20 24 | குரு 4 8 0 | சனி 1 15 36 | புத 2 8 0 | கே 0 19 36 | சுக் 4 24 0 |
| சந்திரன் 16 0 | சந் 2 4 0 | அங் 1 23 12 | ராகு 4 2 24 | குரு 1 14 48 | சனி 5 2 0 | புத 1 10 48 | கே 0 28 0 | சுக் 1 26 0 | சூரி 1 13 12 |
| அங்காரக 11 6 | அங் 1 14 48 | ராகு 4 16 48 | குரு 3 18 48 | சனி 1 23 12 | புத 4 16 0 | கே 0 16 48 | சுக் 2 20 0 | சூரி 0 16 48 | சந் 2 12 0 |
| ராகு 28 24 | ராகு 3 25 12 | குரு 4 1 36 | சனி 4 9 12 | புத 1 17 36 | கே 1 26 0 | சுக் 1 18 0 | சூரி 0 24 0 | சந் 0 28 0 | அங் 1 20 24 |
| ஆகவ்ரூ 16 0 0 | 25 18 0 | 30 12 0 | 27 6 0 | 11 6 0 | 32 0 0 | 9 18 0 | 16 0 0 | 11 6 0 | 28 24 0 |

**பூசம், அனுஷம், உத்திரட்டாதி - சனி தசை வருஷம் 19-க்கு தசா, புக்தி, அந்தர விவரங்கள்**

| புக்தி விவரம் | சனி | புதன் | கேது | சுக்கிரன் | சூரியன் | சந்திரன் | அங்காரகன் | ராகு | குரு |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சனி 36 3 | சனி 5 21 28½ | புத 4 17 16½ | கே 0 23 16½ | சுக் 6 10 0 | சூரி 0 17 6 | சந் 1 17 30 | அங் 0 23 16½ | ராகு 5 3 54 | குரு 4 1 36 |
| புதன் 32 9 | புத 5 3 25½ | கே 1 26 31½ | சுக் 2 6 30 | சூரி 1 27 0 | சந் 0 28 30 | அங் 1 3 15 | ராகு 1 29 51 | குரு 4 16 48 | சனி 4 24 24 |
| கேது 13 9 | கே 2 3 10½ | சுக் 5 11 30 | சூரி 0 19 57 | சந் 3 5 0 | அங் 0 19 57 | ராகு 2 25 30 | குரு 1 23 12 | சனி 5 12 27 | புத 4 9 12 |
| சுக்கிரன் 38 0 | சுக் 6 0 30 | சூரி 1 18 27 | சந் 1 3 15 | அங் 2 6 30 | ராகு 1 21 18 | குரு 2 16 0 | சனி 2 3 10½ | புத 4 25 21 | கே 1 23 12 |
| சூரியன் 11 12 | சூரி 1 24 9 | சந் 2 20 45 | அங் 0 23 16½ | ராகு 5 21 0 | குரு 1 15 36 | சனி 3 0 15 | புத 1 26 31½ | கே 1 29 51 | சுக் 5 2 0 |
| சந்திரன் 19 0 | சந் 3 0 15 | அங் 1 26 31½ | ராகு 1 29 51 | குரு 5 2 0 | சனி 1 24 9 | புத 2 20 45 | கே 0 23 16½ | சுக் 5 21 0 | சூரி 1 15 36 |
| அங்காரக 13 9 | அங் 2 3 10½ | ராகு 4 25 21 | குரு 1 23 12 | சனி 6 0 30 | புத 1 18 27 | கே 1 3 15 | சுக் 2 6 30 | சூரி 1 21 18 | சந் 2 16 0 |
| ராகு 34 6 | ராகு 5 12 27 | குரு 4 9 12 | சனி 2 3 10½ | புத 5 11 30 | கே 0 19 57 | சுக் 3 5 0 | சூரி 0 19 57 | சந் 2 25 30 | அங் 1 23 12 |
| குரு 30 12 | குரு 4 24 24 | சனி 5 3 25½ | புத 1 26 31½ | கே 2 6 30 | சுக் 1 27 0 | சூரி 0 28 30 | சந் 1 3 15 | அங் 1 29 51 | ராகு 4 16 48 |
| ஆகவ்ரூ 19 0 0 | 36 3 0 | 32 9 0 | 13 9 0 | 38 0 0 | 11 12 0 | 19 0 0 | 13 9 0 | 34 6 0 | 30 12 0 |

[25] விகாரி வருஷத்திய (2019/20) வாசன் சுத்த திருக்கணித பஞ்சாங்கம், ப 91

